# பத்திநெறிப் பனுவல்கள்

'செந்தமிழ்ச் செல்வர்', 'தமிழாகரர்'
'நல்லாசிரியர்'

முனைவர் ச. சாம்பசிவனார், எம்.ஏ., பிஎச்.டி.
மதுரை-1.

வளவன் வெளியீடு
அ. பெ. எண் 155
7, சூடன் சாமியார் சந்து,
மதுரை - 625 001.

முதற்பதிப்பு : டிசம்பர், 1992
உரிமை : ச. சாம்பசிவனார்
விலை ரூ. 60·00

# BAKTHI NERIP PANUVALGAL

By

Dr. S. SAMBASIVANAR, M.A.,Ph.D.,

This book is published with the financial assistance of Tirumala Tirupati Devasthanams under their scheme aid to publish Religious Books. My sincere thanks to T.T.D. — Author.

Published by :

Dr. S. SAMBASIVANAR

Prop. VALAVAN VELIYEEDU

P. B. No. 155

7, Soodan Samiar Lane

MADURAI-625 001, (TAMIL NADU)

Amuthachakam * Madurai - 10.

# முன்னுரை

ஆண்டவன் மீது செலுத்தும் அன்பு, 'பத்தி' எனப்படும். அவனை அடைதற்குரிய நெறிகளில் ஒன்று 'பத்தி நெறி'. 'முக்தி' என்பது 'முத்தி' என்றும், 'பக்தி' என்பது 'பத்தி' என்றும் தமிழில் இயம்பப்படும்.

> ''முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
> பத்திநெறி அறிவித்து .....''

என்பர் மணிவாசகர்.

> ''பத்தியால் யானுனைப் பலகாலும்...
> முத்தியே சேர்வதற் கருள்வாயே''

என்பது அருணகிரியார் திருவாக்கு.

பைந்தமிழில், 'பத்திநெறி' உணர்த்தும் பனுவல்கள் (நூல்கள்) பலப்பல உண்டு. அவற்றுள் ஒருசில, இந்நூலின்கண் எடுத்துரைக்கப்படுகின்றன.

சங்க இலக்கியத்தில் ஒன்று 'பரிபாடல்'. அதன்கண் இடம்பெற்றுள்ள திருமாலையும் முருகனையும் குறித்த பாக்களைமட்டும் தனியே தொகுத்தால், 'பத்திப் பனுவல்' ஆகிவிடும். இந் நூலின்கண், 'பரிபாடலில் இறைவழிபாடு' முதல் 'திருவேங்கட மும்மணிக் கோவை' ஈறாக 19 கட்டுரைகள் உள்ளன. இவற்றில், ''பிள்ளைத் தமிழ், குறம், அந்தாதி, கோவை, புராணம்' எனும் பனுவல்கள் பற்றிய ஆராய்ச்சிகள் இடம்பெற்றுள்ளனவாதலின், நூலின் தலைப்பு, ''பத்திநெறிப் பனுவல்கள்' எனப்பட்டது. மேலும், முத்தொள்ளாயிரம், தேவாரம், திருவாசகம்-திவ்வியப் பிரபந்தம் (திருவெம்பாவை-திருப்பாவை), திருவிளையாடற் புராணம், முத்துக்குமாரசாமிப் பிள்ளைத்தமிழ், காஞ்சிப் புராணம் முதலான பனுவல்களிலிருந்தும் எடுக்கப்பட்ட பத்திநெறிப் பாடல்கள்குறித்த கட்டுரைகளும் இடம்பெற்றுள்ளன. இக் கட்டுரைகளிற் சில, சமய-சிற்றிலக்கிய மாநாடுகளில் படிக்கப்பெற்றவை; சில, பல்கலைக்கழகக் கருத்தரங்குகளில் ஆராயப்பட்டவை; சில சிறப்பிதழ்களில் வெளியிடப்பட்டவை; சில வானொலியில் பேசப்பட்டவை! ஆதலின் 'கூறியது கூறலு'ம் அமைந்திருக்கும். அறிஞருலகம் பொறுத்தருளுமாக!

இந் நூல், ''பரிபாடல்-திருமால் வழிபாட்''டோடு தொடங்கித் ''திருவேங்கட மும்மணிக் கோவை திருமால் வழிபாட்''டோடு நிறைவுபெறுகின்றது என்பதும் இவண் குறிக்கத்தகும்.

இந் நூலினை வெளியிட நிதியுதவி அளித்த 'திருமலை திருப்பதித் தேவத்தானத்'திற்கு என் மனங்கனிந்த நன்றி உரியது.

தமிழ்ப் பெருமக்கள் இந்நூலினை வாங்கிப் படித்துப் பயன்பெறுமாறு அன்புடன் வேண்டுகின்றேன்.

வாழ்க தமிழ் !

அன்பன்
ச. சாம்பசிவன்

# உள்ளுறை

# 1

# பரிபாடலில் இறைவழிபாடு

முன்னுரை

''சுவைமை, இசைமை, தோற்றம், நாற்றம், ஊறு
அவையும் நீயே. அடுபோர் அண்ணால்!
அவையவை கொள்ளும் கருவியும் நீயே!
முந்தி, யாம் கூறிய ஐந்த னுள்ளும்
ஒன்றனிற் போற்றிய விசும்பு நீயே!
இரண்டின் உணரும் வளியும் நீயே!
மூன்றின் உணரும் தீயும் நீயே!
நான்கின் உணரும் நீரும் நீயே!
ஐந்துடன் முற்றிய நிலனும் நீயே'' (13 : 14 22)

— இதனைப் படிக்கும்போதே, இறைவழிபாட்டின்போது பாடப்படும் பாட்டு இது என்பது நமக்குப் புரிகின்றதல்லவா? ஆம்! உலகம் எல்லாம்உவக்கும்படியாகக் காலையிலே தோன்று-கின்றானே கதிரவன், அவனது அழகு எப்படி செகச் சோதி-யாய் விளங்குகின்றதோ, அதுபோன்ற அழகினையுடைய பீதாம்பரத்தை உடையவன்; இளஞாயிற்றின் அழகு போன்ற கிரீடம் கொண்டவன்; மின்னலைப் போல் ஒளிவிடும் ஆரம் பூண்டவன்; நீண்ட மாலையினை அணிந்தவன்; கருடக் கொடியை ஏந்தியவன்; சங்குசக்கரம் தாங்கியவன்; பௌர்ணமி-யின் குளிர்ச்சியைப் போலக் காக்கும் தொழிலைக் கொண்டவன். அத்தகையானைத் தொழுதால் துறக்கமே கிடைக்கும் என்றால், தொழாமல் யார்தான் இருக்க முடியும்? அவன்தான் திருமால்! அவனைத்தான் 'விசும்பு நீயே! வளியும் நீயே!' என்றெல்லாம் ஏத்தி வழிபட்டனர்.

''நறையின் நறும்புகை நனியமர்ந் தோயே!...
நறுமலர் வள்ளிப் பூநயந் தோயே!...
எழீஇப் பாடும் பாட்டமர்ந் தோயே!...
சிறந்தோர் அஞ்சிய சீருடை யோயே!...
ஒருபெயர் அந்தணர் அறனமர்ந் தோயே'' (14 : 20, 22, 24, 26, 28)

— இதுவும் வழிபாட்டுப் பாடல் என்பது புரிகின்றதல்லவா? அன்பரால் விரும்பத் தகுந்த வேற்படையினை உடையவன்; களவு மணத்திற்கும் கற்பு மணத்திற்கும் பெருமை தருவான் வேண்டி மங்கையர் இருவரை மணந்தவன்; நறுமணப் பொருள்களின் நறும்புகையினை விரும்புகின்றவன்; ஆறு திருமுகங்களோடும் பன்னிரு தோள்களோடும் தோன்றுபவன்; அந்தணர் என்கின்ற ஒப்பற்ற புகழை உடையோரின் அறவாழ்விடத்துப் பொருந்தி இருப்பவன். அவனே முருகன்! அவனைத்தான் 'நனிஅமர்ந்தோயே! பூநயந்தோயே!' என்றெல்லாம் பரவிப் புகழ்ந்து வணங்கினர்.

இவ்இனிய பாடல்களைப் பாடியவர்கள் யார்? எந்தப் பத்தி நூலில் இப்பாக்கள் உள்ளன? என்று கேட்கத் தோன்றுகின்றதல்லவா? சொன்னால் வியப்பாக இருக்கும். 2000 ஆண்டுகளுக்கு முற்பட்டதாகக் கருதப்படும் சங்க இலக்கியங்களில் ஒன்றாகிய 'பரிபாடல்' என்ற நூலில்தான் இத் தெய்வத் தமிழ்ப் பாக்கள் காட்சியளிக்கின்றன.

'இறைவழிபாடு' என்பது இன்று, நேற்றுஏற்பட்டதன்று. மிகமிகத்தொன்மைக் காலந்தொட்டே இருந்து வருவது. பழந்தமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியத்திற்கூட இறைவனைப் பற்றியும், இறைவழிபாட்டினைப்பற்றியும் குறிப்புக்கள் உள்ளன. முல்லை நிலத்திற்குரிய தெய்வம் மாயோன் என்றும், குறிஞ்சி நிலத்திற்குரிய தெய்வம் முருகன் என்றும் கூறும் தொல்காப்பியர், வேலனை அழைத்து வெறியாட்டுச் செய்யும் வழிபாடு குறித்தும் பேசுகின்றார். "நீ வழிபடும் கடவுள், நின்னைப் புறத்தே நின்று பாதுகாக்க எல்லா வளங்களும் பெற்று, வழிவழியாகச் சிறந்து பொலிக" என்று கூறுவதாகிய புறநிலை வாழ்த்தின் இலக்கணம் கூறுகின்றார். எனவே, 3000 ஆண்டுகட்கும் முன்பே, நம் நாட்டில் இறைழிபாடு இருந்தது என்பதை உணரலாம். இவ் இறைவழிபாட்டைப்பற்றி விரிவாகச் சொல்லும் நூல்கள் தமிழில் நிறைய உண்டு. சங்க இலக்கியமாகிய பத்துப்பாட்டில், 'திருமுருகாற்றுப்படை' என்பது ஒன்று அது, முருகப்பெருமானைப் பற்றி விரிவாகக் கூறும் பத்தி இலக்கியமாக விளங்குவது. அவ்வாறே முருகனை மட்டுமன்று, திருமாலைப் பற்றியும் விளக்கமாகச் சொல்லும் நூலே 'பரிபாடல்' என்பது. இஃது, எட்டுத் தொகை நூல்களில் ஒன்று. வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்பது போலப் 'பரிபாடல்' என்பதும் ஒருவகைப் பாடல் ஆகும் பரிந்து வரும்

பாட்டைப் 'பரிபாடல்' என்றனர் ஆன்றோர். இது பண்ணோடு பாடத் தகுவது. குறள் வெண்பாவினால் ஆன நூலைத் திருக்குறள் என்று கூறினாற்போலப் பரிபாடலால் ஆன நூலைப் பரிபாடல் என்று கூறினர். திருமாலுக்கு—8 : முருகனுக்கு—31 : கொற்றவைக்கு—1 வையை யாற்றுக்கு - 26 : மா மதுரைக்கு— 4 : இப்படி 70 பாடல்களைக் கொண்டது இந்நூல். ஆனால் இன்று நமக்குக் கிடைத்துள்ள பாடல்களோ திருமாலுக்கு—6 ; முருகனுக்கு—9 : வையைக்கு—7 ஆக 22 மட்டுமே! மேலும் சில பாடல்களும், பகுதிகளும் கிடைத்துள்ளன. பாடிய புலவர்களும் கீரந்தையார், கடுவன் இளவெயினனார், நல்லந்துவனார் முதலானோர் : இவ்விசைப் பாக்களுக்குப் பண் வகுத்தவர்கள் நன்னாகனார், பெட்டகனார், மருத்துவன் தாமோதரனார் முதலானோர். இப் பாக்களுக்குரிய பண்கள், பாலையாழ், காந்தாரம் முதலியன.

திருமால் பெருமை

பரிபாடல் பாக்களைக் கொண்டு திருமால் பெருமையும் முருகன் அருமையும் நிறைய அறியமுடிகின்றது இத்தெய்வங்களை நம் முன்னோர் எப்படியெப்படி எல்லாம் வழிபட்டு வந்தனர் என்பதையும் தெரிந்து இன்புற முடிகின்றது.

கடவுள் வாழ்த்தோடு ஒரு நூலினைத் தொடங்குதல், தமிழர்களின் தனிப்பண்பு. இதற்குப் பரிபாடலும் விலக்கன்று. பரிபாடலில், முதலில் அமைந்துள்ள 4 பாக்களும் திருமாலைக் குறித்த கடவுள் வாழ்த்தாகக் காட்சியளிக்கின்றன.

பரந்தாமனாகிய இறைவன், பாற்கடலின் நடுவே. அரவுப் பாயலில் பள்ளி மேற்கொண்டு அறிதுயில் பூண்டிருப்பவன். பார்த்தவர்கள் எல்லாம் பயந்து போகுமாது, நஞ்சாகிய நெருப்பைக் கக்கும் ஆயிரம் தலைகளையுடைய ஆதிசேடன், அத்தலைகளைப் படமாக விரித்துப் பரந்தாமனின் திருமுடிக்குமேல், குடைகளைப் போலக் கவித்து, மெல்ல அசைத்தபடியே நிழல் செய்து கொண்டிருக்கிறான். திருமகள், எப்போதும் குடிகொண்டிருக்கும் பரந்த மார்பினை உடையவன் பரந்தாமன். அவன், ஒளிதரும் வெண்சங்கைப் போன்ற திருமேனி வண்ணமுடையவன்; வேழக்கொடியும் கலப்பைப் படையும் ஏந்தியவன் ; ஒப்பற்றவன்; வெண்செந்தாமரைக் கண்ணன்; கார் மேனியன்; கருடச்சேவலை வெற்றிக்கொடியாகக் கொண்டவன் ;

நாவன்மை பெற்ற அந்தணர்களின் அரிய நான்மறைகளுக்கும் மூலப்பொருளாக இலங்குகின்றவன்.

இத்தகைய திருமாலைக் குறித்துப் புலவர் ஒருவர் இப்படிப் பாடுகின்றார்:

"வேதங்களை உரைத்தருளிய புலவனே! நின் திருவடி நிழலில் வாழ்பவர் யாங்கள். நின்னை விரும்பும் அடியார் திருக்கூட்டத்தாரோடு யாங்களும் சேர்ந்திருத்தல் வேண்டும். நின் தாள் நிழலாகிய அக்கருணை வெள்ளத்தைத் தொழுது போற்றியவராக நாங்கள் இருக்க வேண்டும். அதற்கும் நின்னருள் வேண்டும்!"

"காமரு சுற்றமோடு ஒருங்கு, நின் அடியுறை
யாம்இயைந்து ஒன்றுபு வைகலும் பொலிகஎன
ஏமுறு நெஞ்சத்தேம் பரவுதும்!
வாய்மொழிப் புலவ! நின் தாள் நிழல் தொழுதே"
(1:64 67)

என்பது அப்புலவர் வேண்டும் வரமாகும்.

"மாயவனே! மாயவனே! உயிர்க்குலத்தின் மீளமீளப் பிறக்கும் பிறவிகளாகிய தளையை அறுத்து, அவற்றை அத்துயரினின்றும் விடுவிக்கும் குற்றமற்ற சிவந்த பாதங்களையும் நீலமணி போலத் திகழும் உருவினையும் கொண்ட மாயோனே! வாய்மொழி எனப்படுவன வேதங்கள். அவை, தொடர்ந்து கேட்கப்பட்டு வருவன. இத்தகைய ஓட்டத்தை உடைய அவ் ஓடையிலே மலர்ந்த தாமரைப் பூவினுள்ளே பிறந்தான் பிரமன். அவனும், அவனுக்குத்தந்தையாக விளங்குபவனும் நீயே! இவ்வாறு அந்தணர்களின் அரிய மறைகள் நின்னைக்குறித்துப் புகழ்கின்றன. விதிக்கும் விதியாக அமைவோனும் நீயே! ஞாயிறாக விளங்குபவனும் நீயே! உலகைக் காக்கும் கருணையோனும் நீயே! இவ்வுலகில் வாழ்வோரான தேவத்தன்மை பெற்றோரும் வானத்தின்கண் வாழ்வோரான முப்பத்திரண்டுவகைத் தேவர்களும் உன்னை விரும்புவர். நின் புகழைப் பாடுவர். அவர் பாடும் அவ்வகையே யாம்பாடும் எம்பாடலும் விளங்கும். இவ்வாறு, முன்னர்ப் பாடிய வகையே, தொடர்ந்து பாடுவதன்றி, எவர்தாம் உன் புகழைத் தாமே கண்டறிந்து பாடுவதற்கு வல்லவர்?

"'கூந்தன்மா' என்ற உருவோடு நின்னைக் கொல்ல வந்தான் 'கேசி' என்ற அரக்கன். நெருப்புப் போன்ற கொடிய கோபத்தோடு வந்த அவனை, நீ கொன்றனை. அமிழ்தத்-தைப் பங்கிட்ட காலத்தில், மோகினியாக ஆடிப்பாடி, அசுரரை நகையாடச் செய்து, சிரித்தே சாகுமாறு அழித்து, அந்த அமிழ்தத்தைத் தேவர்களுக்குத் தந்தனை. நன்மை விளைப்ப தாகிய அவ் அமுதம் கலந்தது நின் ஒருகை! அதே சமயம், இரு சாராருக்கும் சமமாகத் தருதற்குப் பதிலாக, நடுவுநிலை தவறிய நயமற்ற ஒரு கையினையும் கொண்டோனே! இவ்-வாறு ஒன்றல்ல, இரண்டல்ல, நூறாயிரம் கையினை உடைய-வன் நீ! உனக்கு ஒப்புமை சொல்ல நினைத்தால், அதுதானே நீயேயல்லாது, பிறிதாக யாதொன்றனையும் நீயேனும் அறிவாயோ?'' என்று திருமாலின் புகழ் பாடும் கடுவன் இளவெயினனார் என்ற புலவர்,

''நெருப்பினுள் சுடும் தன்மையாக இருப்பவன் நீ! பூவினுள் மணமாக-கற்களில் மாணிக்கமாக-சொல்லின் வாய்மையாக-அறநெறியில் அன்பாக - மறத்தில் ஆற்றலாக - வேதங்களில் மந்திர சொரூபமாக-ஐம்பெரும் பூதங்களில் வானமாக - கதிர-வனின் ஒளியாக-சந்திரனின் குளிர்ச்சியாக-விளங்குபவன் நீயே! காணும் பொருள் நீ! அதன் உட்பொருளும் நீ! அனைத்தும் நீ! முதலும் இடையும் கடையுமாகிய முத்தொழில் செய்-பவனும் நீ! நீ பிறவாத பிறப்பென்பதும் இல்லை நின்னைப் பிறப்பித்தது என்பது யாதும் இல்லை!'' என்கின்றார்.

''தீயினுள் தெறல்நீ! பூவினுள் நாற்றம்நீ!
கல்லினுள் மணியும் நீ! சொல்லினுள் வாய்மைநீ!
அறத்தினுள் அன்புநீ! மறத்தினுள் மைந்துநீ!
வேதத்து மறைநீ! பூதத்து முதலும் நீ!
வெஞ்சுடர் ஒளியும் நீ! திங்களுள் அளியும்நீ!...
முதல்முறை இடைமுறை கடைமுறை தொழிலில்
பிறவாப் பிறப்பிலை! பிறப்பித்தோர் இலையே!''
(3 : 63-72)

''பெருமானே! பிரகலாதன் உன்னைப் புகழ்ந்தான். அதனைக் கேட்ட இரணியன், மனம் புழுங்கினான். தன் மகனைப் பலவாறாகப் பிணிபடுமாறு கட்டிப்போட்டான். பிரகலாதன் பட்ட துன்பம் கொஞ்சமன்று. தனக்குத் துன்பத்-தைத் தந்தவன் வேறு எவனுமல்லன், தன்னைப் பெற்ற

தந்தையே ஆதலால், அத் தந்தையை இகழ மனமில்லாதவனாய்த் தன் துயரத்தைத் தாங்கி நின்றான். நீயோ, நின்பால் பேரன்பு கொண்ட அப்பிரகலாதனின் மார்பிற் சென்று பொருந்தினை. நின்னை இகழ்ந்த இரணியனின் பெருமலை போன்ற மார்பின்மேற் பாய்ந்தனை. வெடிபட்டுத் துண்டாய்ப் போன தூணின் துண்டங்களோடு,இரணியனின் தசைத் துண்டங்களும் பலவாகக் கலந்து வீழுமாறு, அவனது மார்பைப் பிளந்தனை. அவ்வாறு வகிர்ந்த கூரிய நகத்தினைக் கொண்ட நரசிங்கப் பெருமானே!

''ஆலமரமும், கடப்ப மரமும், நல்ல ஆற்றிடைக் குறைகளும். குன்றங்களும், பிறவிடங்களும் ஆகிய அவ்வவ்விடங்களில் பொருந்திய வேறு வேறான பெயர்களைக் கொண்டோனே! பிற இடங்களிலும் விளங்குவோனும் நீயே! அன்பர்கள் எண்ணியவற்றையெல்லாம் நீ முடித்துத் தருகின்றாய் ஆதலால் அவர்களுக்கு ஏவலாளனாகத் திகழ்வோனும் நீயே! அவரவர்களால் தேடப்படும் அறம், பொருள், இன்பம், வீடாகிய மெய்ப் பொருள்களுக்குப் பாதுகாவலனாக விளங்குபவனும் நீயே!

''ஆலமும், கடம்பும், நல்யாற்று நடுவும்
கால்வழக்கு அறுநிலைக் குன்றமும். பிறவும்
அவ்வவை மேய வேறுவேறு பெயரோய்!
எவ்வயி னோயும் நீயே! நின் ஆர்வலர்
தொழுதகை அமைதியின் அமர்ந்தோயும் நீயே!
அவரவர் ஏவலாளனும் நீயே!
அவரவர் செய்பொருட்கு அரணமும் நீயே!''

(4 : 67-78)

என்று ஏத்துகின்றார் புலவர்.

இத்தகு இறைவனாம் திருமால் உறையும் இடங்கள் பலவாகும். அவற்றுள் ஒன்று, திருமாலிருஞ்சோலைமலை. அது, மதுரைக்குப் பக்கத்தில் உள்ளது. 'அழகர் மலை' என அனைவராலும் போற்றப்படுவது. திருமாலினிடத்துப் பத்தி பூண்ட இளம்பெருவழுதி என்பார், அவன் உறையும் இத் திருமாலிருஞ்சோலைமலையைப் பற்றியும், ஆங்குச் சென்று இறைவனை எங்ஙனம் வழிபட வேண்டும் என்பதைப் பற்றியும் விரிவாக எடுத்துரைக்கின்றார்.

இவ்வுலகில் உள்ள பெரிய மலைகள் பலப்பல. அவற்றுள், நிலவுலகிற்கு உதவும் பலன்களைத் தருபவை ஒருசில. அவற்-

றுள்ளும், சுனைகளும், மேகம் தவழும் உச்சிகளும் கொண்டவை மிகச் சிலவே. அவற்றுள்ளும் சிறந்தது இத்திருமாலிருஞ்சோலை மலை! இது திருமாலையும் பலராமனையும் தாங்கி நிற்கும் பெருமையுடையது. இக்குன்றில் உறையும் திருத்துழாய்-சூடிய திருமால், அருள் செய்யாமற் போனால் துறக்கவுலகை அடையவே முடியாது. துறக்கத்தை எளிதாகப் பெறுதற்கு உதவுவது இத்திருமாலிருஞ் சோலைமலையே யாகும்.

''எம்பெருமானே! ஆதிசேடன், தன் தலைகளை உயர்த்து, அசைந்தாடியபடியே நினக்கு நிழல் செய்து கொண்-டிருப்பன். நினக்கு முன்னோனாகப் பிறந்தவன் பலராமன். அவனது மார்பில் வெண்கடப்பமாலை விளங்கும். அம்மாலை போல, ஆங்குள்ள அருவியும் வீழும். அவ் அருவி போல அங்கு ஓடும் சிலம்பாறு அழகுபெற்றுத்திகழும். அதனால் சிறப்புப் பெறுவது நின் குன்றமாகும். உன்னிடம், மக்கள் இடையறாது வந்து, தம் இச்சைகளைக் கூறிப் பயனடைகின்றனர். இதனால் உலகம் முழுவதும் நின் புகழே ஒலிக்கிறது.

''தேனீ பொருந்திய பசிய திருத்துழாய் அணிந்தவனே! கருங்குன்று நிறமுடையவனே! வெண்மை போன்ற பேரொளி உடையவனே! ஒப்பற்ற குண்டலம் உடையவனே! கருடக் கொடியும் கூரிய கலப்பைப் படையும் கொண்டவனே! வெற்றிச் சக்கரப் படையும், வில்லம்பும், வாட்படையும் உடையோனே! என்று வேதம் நின்னைப் போற்றுகிறது. அவ்வாறே யாமும் கூறிப் போற்றுவோம் எம் உள்ளத்தில் பொருந்தி, எம்மை வாழ்விக்கும் தலைவனும் நீயே! திருமாலிருங்குன்றத்தின் அடிக்கண் பொருந்தி வாழ்தல் எமக்கும் பொருந்துக. அதற்கு எமக்கு அருள்புரிக!'' என்று வேண்டும் புலவர் யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்பதற்கேற்ப, அவனை வணங்கவேண்டுமென்று மற்றவர்க்கு இப்படிச் சொல்கின்றார் புலவர்:

''மக்களே! திருமாலிருஞ்சோலைமலையிடத்துள்ள சுனையெல்லாம் நீலப் பூக்களோடு விளங்கும். அவை, பெருமானின் நீலவண்ணத்தை ஒத்திருக்கும். சுனையைச் சுற்றிலும் சோலைகள் உண்டு; அவற்றில் பூத்த மலர்கள் எல்லாம், பெருமானின் பொன்புனை ஆடை போலக் காட்சி தரும். இக்குன்றிலுள்ள பலவகை நிறங்களுடன் திகழும் காய்-களும், கனிகளும், அவனின் அருளைப் போல உதவி புரியும்.

இவ்வாறு, இம்மலையில் உள்ள எல்லாப் பொருள்களுமே எம் மாயவனாகிய திருமாலோடு ஒப்புடையனவாக விளங்கும்.

''எனவே, மக்களே! நீங்கள், அவன் உறையும் இக்குன்றினுக்கு வாருங்கள்; அவனை வழிபட்டுப் பெரும் பயனும் அடையுங்கள்!

''மாந்தரே! நீங்கள், நும் இல்லத்துணைவியரோடும், தாய் தந்தையரோடும், கைக்குழந்தையோடும், அன்புச் சுற்றத்தாரோடும், இத்திருமாலிருஞ்சோலைமலையையே தெய்வமாகக் கொண்டு, இது விளங்கும் திசையை நோக்கித் தொழுதவராக, எம்பெருமானை வழிபட வருவீராக. உங்களால் வர இயலாத நிலை உண்டா? அஞ்சாதீர்கள். இக்குன்றின் தோற்றத்தைத்தொலைவிலிருந்தேனும் கண்டு, எப்பெருமானை நினைந்து பணிவீராக!

''சுனையெலாம் நீலம் மலரச், சுனைசூழ்
சினையெலாம் செயலை மலரக், காய்கனி
உறழ, நனைவேங்கை ஒள்ளிணர் மலர,
மாயோன் ஒத்த, இன் னிலைத்தே.
சென்று தொழுகல்லீர். கண்டு பணிமின்மே!
தையலவரொடும் தந்தாரவரொடும்
கைம்மகவோடும் காதலவரொடும்
தெய்வம் பேணித் திசைதொழுதினிர் சென்மின்!''
(15 : 30—34 ; 46—48)

என்று திருமாலை வழிபடும் பான்மையினையும் வகைபெற எடுத்தோதுகின்றார் இப்புலவர்.

மறைந்து போன பரிபாடல்களில், பின்னால் கிடைத்த அரிய திருப்பாட்டு ஒன்று. அதில், திருமால் உறையும் திருப்பதியாகிய 'இருந்தையூர்' நகரம் பேசப்படுகிறது.

மழை பொழிந்தது; வையை யாற்றில் வெள்ளம் பெருகியது. நீர்த் துறைகள் உள்ள இடமெல்லாம் புதுவெள்ளம் நிறைந்தது. அத்தகைய துறைகளில் ஒன்றிடத்து அமைந்ததே 'இருந்தையூர்' என்னும் திருப்பதி. மலை வளப்பமும் வயல் வளப்பமும் ஒருங்கே கொண்டது இது. அறத்தினின்று சிறிதும் மாறுபடாத பதியாகத் திகழ்ந்தது இருந்தையூர். அந்தணர்கள் வாழ்ந்தமையே அதற்குக் காரணம். அறநெறியி-

லிருந்து சிறிதும் பிறழாத ஒழுக்கமும், சிறந்த வேதப்பயிற்சியும், தவமுதிர்ச்சியும் கொண்டவர்களாக அவர்கள் விளங்கினார்கள். இவ் அந்தணர்கள் மட்டுமன்றி, உணவுப் பொருள் முதல் உயர்ந்த தங்கம் வரை பலவிதமான பொருட்களை விற்கும் வணிகர்களும், உழுது பயன்பெறும் உழவர் பெருமக்களும், பாடுபட்டுத் தொழில் செய்யும் பாட்டாளி மக்களும் ஆகிய பல திறத்தாரும் எத்தகைய துன்பமுமின்றி இன்பத்துடன் திளைக்கும் நகரமாகவே காட்சியளித்தது இருந்தையூர்.

இத்தகைய வளப்பமான ஊரில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருப்பவன் ஆதிசேடனாவான். ஒரு காலத்திலே, தேவர்களும் அசுரர்களும் பாற்கடலைக் கடைந்தனர்; அப்போது மந்தரமலையாகிய மத்தானது, கடலுள் ஆழத் தொடங்கிற்று. திருமால் ஆமை வடிவங்கொண்டு அதனை ஆழவிடாது தடுத்து, மேலே எடுத்துக்கொண்டு தன் முதுகில் தாங்கியவாறு நிலைநிற்கச் செய்தான். தேவரும் அசுரரும் ஆகிய இருதிறத்தார்க்கும் அமுதம் கடைவதற்கு உதவினான். இருபுறத்தும் மிகவும் நீண்டு கிடந்த பெருவடமாகத் திகழ்ந்த சேடனாகிய கயிற்றைப்பற்றிக் கடையுமாறு அருள் செய்தவன் திருமால். மிக்கபலம் பொருந்திய வாயு பகவானின் மேலான வலிமைகூடச் செல்லுபடியாகாதவாறு, அந்நாளில் அவனுக்கு எதிராக நின்று மேருமலையினைத் தன் ஆயிரம் படங்களையும் விரித்து அணைத்து நின்று காத்தருளியவனும் ஆதிசேடனே. பெரிய பெரிய மலைகளையுடைய இவ்வுலகத்தையே, தன் முடியில் விளங்கும் ஓர் அணிகலம் போலப் பேணித் தாங்கி நிற்போனும் ஆதிசேடனே. சிவபெருமான், திரிபுரத்தை அழிக்கச் சென்ற காலத்தில் உயர்ந்த இமயமாகிய வில்லிற்குப் பொருத்தமான நாணாகிப் புகழைத் தந்தவனும் ஆதிசேடனே. இருந்தையூரில் கோயில் கொண்டவன் இத்தகைய புகழ் வாய்ந்த ஆதிசேடனே! இவனது திருக்கோயிலில் மிகப்பெருந் திருவிழா!

ஆடவர் ஒரு பக்கம்; கற்பும் நாணமும் கொண்ட மகளிர் ஒரு பக்கம்; புகழன்றி வேறு அணிகலன் விரும்பாத புலவர்கள் ஒருபக்கம்; நரைத்த தலைமயிரையுடைய முதியோர் ஒரு பக்கம்! இப்படிப் பல திறத்தினரும் திருமாலுக்குப் படைத்தற் பொருட்டுப் பொங்கல் வகைகளைக் கொண்டு வந்திருந்தனர். மங்கலக் குடைகளை ஏந்தி நின்றனர்; நறும்

பூக்களைத் தாங்கி இருந்தனர். இடைவெளி இல்லாதபடி அனைவரும் ஒன்றுகூடித் திரண்டனர்!

திருமாலின் திருக்கோயில், துறக்கம் போலக் காட்சியளித்தது. திருமாலோ ஆதிசேடனாக வரைபோலும் மார்பினைப் பெற்ற செல்வனாக அமர்ந்திருந்தான்!

> ''ஒளியிழை ஒதுங்கிய ஒண்ணுத லோரும்
> புலத்தோ டளவிய புகழணிந் தோரும்
> நலத்தோ டளவிய நாண்அணிந் தோரும்
> விடையோடு இகலிய விறல்நடை யோரும்
> நடைமட மேவிய நாண்அணிந் தோரும்
> கடல்நிரை திரையின் கருநரை யோரும்
> சுடர்மதிக் கதிரெனத் தூநரை யோரும்
> மடையர் குடையர் புகையர், பூ ஏந்தி
> இடையொழி வின்றி அடியுறையார் ஈண்டி...
> வரைகெழு செல்வன் நகர்! '' (37-45; 49)

என்கின்றார் புலவர் !

கன்னங்கரேல் எனக் காட்சிதரும் கூந்தலையுடையவர்கள்; காலிற் சிலம்பு அணிந்தவர்கள்; ஒளி வீசும் நெற்றியினையுடைவர்கள்—இத்தகு மகளிர், ஆதிசேடனின் கோயிலுக்கு வந்தவண்ணம் இருந்தனர். மயிலைவிட அழகிய சாயலைக் கொண்ட மகளிரோ, அசைந்தசைந்து மெல்ல நடந்து வந்தனர். அவர்களோடு அவர்களின் கணவரும் வந்திருந்தனர். வரிசை வரிசையாக வந்து, ஆதிசேடனைப் பணிந்தனர் அதனால் அவர்களது மனத்துயரம் நீங்கியது; உடற்பிணிகளும் விலகின; நல்லன எவையெவை உண்டோ அவையவையெல்லாம் அவர்களிடம் சென்று சேர்ந்தன ! மிகப் பழமையானதும் மலையடிவாரம் அமைந்ததுமான ஆதிசேடனின் திருக்கோயில் இப்படி விளங்கியது :

> ''அணிமிக வந்திறைஞ்ச அல்இகப்பப் பிணி நீங்க
> நல்லவை எல்லாம் இயைதரும். தொல்சீர்
> வரைவாய் தழுவிய . . . நகர் ! '' (63)

திருக்கோயிலுக்கு வந்த அன்பர்கள், இறைவன் திருமுன் நின்று இப்படிக்கூறினர் :

''பெருமானே ! அச்சம் தரும் அரிய தன் ஆயிரம் தலை-களையும் பாயாக விரித்து, நினக்கு நிழலைச்செய்திருப்பவனும், கூட்டமாகப் பொருந்திய சுற்றத்தை உடையோனுமாகிய, பெருமையிற் சிறந்த ஆதிசேடனை யாமும் வணங்கி, நின் நல்ல திருவடிகளை ஏத்தி, நின்னைப் போற்றுவோம் ! யாம் எல்லோரும், எம் சுற்றத்தோடு ஒருங்கே என்றும் நின் திருவடி-களைப் பிரியாதிருக்க வேண்டும் என்பதற்காகவே நின்னைப் போற்றிப் பணிவோம் ! பெருமாளே ! இந்தச் சிறப்பை எமக்குத் தந்தருள்வாயாக !''

''அணங்குடை அருந்தலை ஆயிரம் விரித்த
கணங்கொள் சுற்றத்து அண்ணலை வணங்கி
நல்லடி ஏத்திநிற் பரவுதும்
எல்லோம் பிரியற்க, எம் சுற்றமொடு ஒருங்கே !''
(79-82)

என்பது அவர்களின் வேண்டுதல் !

முருகன் வழிபாடு

அக்காலத் தமிழர்கள் திருமாலை வழிபட்டது போலவே முருகப் பெருமானையும் வழிபட்டனர் என்பதைப் பரிபாடல் விளக்கமாக எடுத்துரைக்கின்றது. அவற்றுட் சில காண்போம்.

திருமுருகன் எழுந்தருளியிருக்கும் திருத்தலங்களுள் ஒன்று திருப்பரங்குன்றம் இஃது ஆறு படைவீடுகளுள் முதன்மை-யானது இம்மலையைப் பற்றியும் முருகப்பிரானைப் பற்றியும் பரிபாடல் அழகுறச் சித்திரிக்கின்றது.

பரங்குன்றமலை! காற்று மோதுகின்ற உயரமான உச்சி-களை உடையது. மழை பொழியும்; அதனால் சோலைகள் எல்லாம் குளிர்ந்த தழைகளும், கிளைகளும்கொண்ட மரங்களை உடையனவாய்ப் பொலிவு பெறும். அம்மரங்களிலுள்ள மலர்கள் பூத்துக் குலுங்கும். மழை நீரால் பொய்கைகள் பெருகிச் சேறு நிறைந்திருக்கும்.

மரங்கள் நனைந்திருக்கும்; மழைநீரினாலன்று! இதழ் விரிந்த மலர்களிலிருந்து ஒழுகும் தேன் துளிகள்பட்டமையால்!

முருகன் உறையும் பரங்குன்றம், வாய்மையாலும் வேள்வியாலும் எட்டுத் திக்கிலும் தன் புகழ் பரவ விளங்குவது! யுகாந்தரகாலமாகக் கோயில் கொண்டிருக்கும் முருகன், அந்த-ணர் அளிக்கும் அவிப்பலியையும், அன்பர்கள் புகைக்கும் அகில்

முதலான மணப்பொருட் புகையும் ஏற்று அருள் செய்பவன்! இந்தப் புகை, வானத்தையே முட்டுகிறது! அதனால் இமையா நாட்டமுடைய தேவர்கள், கண் இமைப்பவராக ஆகிவிடுகிறார்கள்!

திருப்பரங்குன்றத்திலே, இசைக்கருவிகளின் ஒலி எழுந்து கொண்டேயிருக்கும். நறுமணப் பொருள்களின் மணம் ஒரு பக்கம்; நறும் புகையின் மணம் ஒரு பக்கம்; சேவற்கொடி ஒரு பக்கம்! - இப்படி, ஒவ்வொரு மாலைக் காலத்திலும் முருகனின் திருவடிக்கண் தம்மை ஈடுபடுத்தி, அவனை வழிபட்டு வரும் அடியார் பலர்! அவனை வழிபட்டுப் பெறும் இன்பத்தையன்றித் தேவருலகத்துப் 'போக' வாழ்க்கையைக்கூட விரும்புகின்றவர் ஒருவரும் இல்லை!

இனி, இக்குன்றத்தில் ஒருபுறம், பாணர்கள் மீட்டும் யாழில் இன்னிசை எழும்; அதற்கு இணையாக, மற்றொரு புறம், புதுமலர்களை மொய்க்கும் வண்டினங்களின் இமிர்தலாகிய இசை எழும்! ஒருபுறம், வேய்ங்குழலிலிருந்து இனிய இசை எழும்; மற்றொருபுறம், அதற்கிணையாகப் பண்ணின் அமைதியோடு ஒலிக்கும் தும்பிகளின் இசை ஊதும்! ஒருபுறம் முழவின் தாள ஒலி எழும்; மற்றொருபுறம், அதற்கு இணையாக, முருகனின் உயரமான மலையிடத்தே விழும் அருவி நீரின் ஓசை எழும்! ஒருபுறம், அவனைப் போற்றிப் புகழும் பாடலுக்கேற்ப, ஆடும் ஆடன் மகளிரின் ஆடல் ஒலி எழும்; மற்றொருபுறம், அதற்கு இணையாக வாடைக் காற்றால் பூங்கொடி அசைந்தாடும்! ஒருபுறம், பாடினிபாடும் பாலைப் பண் ஒலி எழும்; மற்றொருபுறம், அதற்கு இணையாக, மயில்களின் நடனமாடும் ஒலி எழும்!

— இத்தகு இயற்கை எழில் மிகுந்தது - பரங்குன்றம்!

சான்றோரின் பாடல் சிறப்பும், வேறுபல சிறப்பும் பெற்றுத் திகழ்வது - கூடல்மாநகரம் எனப்படும் மதுரை மூதூர்! அதற்கு அண்மையில் உள்ளதுதான் பரங்குன்றம்! எனவே மதுரையிலிருந்து பரங்குன்றத்திற்கு நடந்து செல்லும் தொலைவு சிறிதுதான்! இவ்விரு ஊர்களுக்கும் இடையே அழகான மருத (வயல்) நிலங்கள்! மழைநீரால், சாலைகளில் மணல் நிறைந்திருக்கும். அம்மணலின் மீது மலர்கள் வீழ்ந்து அழகுடன் காட்சி தரும். மதுரையிலிருந்து பரங்குன்றத்திற்கு

இத்தகைய மணல் பரந்த பெருவழியில் நடந்து செல்லச், சிற்றடி மகளிர்க்கு மகிழ்ச்சி உண்டாதல் இயல்பேயன்றோ? அஃதும், முருகப் பெருமானுக்கு விழாக் கொண்டாடி வழிபட-வன்றோ போகின்றனர்?

வழிச்செல்வோர், தாம்தாம் விரும்பும் மணங்கமழும் மணச்சாந்துகளை மிகுதியாகப் பூசிக்கொண்டு செல்வார்கள். இம்மணத்தின் கவர்ச்சியிலே ஈடுபட்டுத் தம்மை மெய்ம் மறந்து ஆங்காங்கே நின்று நின்று போவதால், வழிநடைப் பயணங்கூட நெடிதாகத் தோன்றுகிறது அவர்களுக்கு!

பெண்கள், தம் கூந்தலில் தேன் சிந்தும் மலர்களைச்சூடி, மகிழ்ச்சியுடன் செல்கின்றனர். ஆடவரும் தம் குடுமிகளில் பண மாலைகள் சூடியுள்ளனர்! இவ்விருவரும் செல்லும்போது மலர்கள் கீழே உதிர்கின்றன. அதனால் ‘வழியே இல்லை’ என்று சொல்லும்படி எங்கும் பூக்காடாகவே காட்சியளிக்கிற-தாம்!

முருகனுக்கு விழாக் கொண்டாட வெறுங்கையோடு போவார்களா? எனவே நல்ல நிறமும் நல்ல மணமும் கொண்ட சாந்து வகைகள்; சிறப்புப் பொருந்திய சூடன், சாம்பிராணி முதலான புகைத்தற் பொருட்கள்!

—இவற்றைக் கொண்டு போகும்போது காற்றினால் அவியாதபடி, பாதுகாப்பான விளக்குகள்! நறுமணப்பூக்கள்! இசை நுவலும் முழவுகள்! மணிகள்! நூற்கயிறுகள்! முருகப் பிரானுக்குக் காணிக்கை இடுதற்காகவே பொன்னாற் செய்யப் பட்ட மயில்கள்; கோடாரிகள்; ‘பிணிமுகம்’ என்ற பெயருள்ள யானைகள்! -இவை போன்ற பிற வழிபாட்டுப் பொருட்களை யெல்லாம் அம்மகளிர் ஏந்திக் கொண்டு வந்தனர்! அன்பரைத் தவிர மற்றையோரால் அடைய முடியாத பரங்குன்ற மலையைச் சேர்ந்து, ஆண்டு உறையும் தமிழ்ப் பெருமானாம் முருகப் பிரானைத் தொழுவார்ஆயினர். இதனை, நல்லந்துவனார் என்னும் நற்றமிழ்ப் புலவர் இப்படிப் பாடுகின்றனார்:

“சீறடியவர் சாறுகொள எழுந்து
வேறுபடு சாந்தமும் வீறுபடு புகையும்
ஆறுசெல் வளியின் அவியா விளக்கமும்
நாறுகமழ் வீயும் கூறுமிசை முழவமும்
மணியும் கயிறும் மயிலும் குடாரியும்

பிணிமுகம் உளப்படப் பிறவும் ஏந்தி
அருவரை சேரார் தொழுநர்!'' (8:96-192)

என்பது அப்புலவர் பாட்டு!

'நப்பண்ணனார்' என்னும் மற்றொரு புலவர், கூடல் நகரத்தினின்று பரங்குன்றம் நோக்கிப் போவாரைக் குறித்துச் சுவைபடச் சித்திரிக்கின்றார்:

ஆடவரும் மகளிரும் ஒளி பொருந்திய ஆடை அணிகலன்களைத் தாங்கிப் புறப்படுவர். சிலர், குதிரைகளில் ஏறிச் செல்வர்; வேறு சிலர், வசதியாகச் செய்யப்பட்ட தேர்களில் ஏறிச் செல்வர். நன்றாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட மலர் மாலைகள் அணிந்திருப்பர். புலர்காலைப் பொழுதில் புறப்படுவர். ஆதலின் சிறிது இருட்டும் உண்டு; ஆனால், மலர் மாலைகளின் ஒளியோ, அவ்விருட்டை ஓட்டிவிடும்! இடைவெளியே இல்லை எனும்படி மக்கள் வெள்ளம்! மக்களில் சிலர், வரிசை வரிசையாகவும் வருவர்; சிலர், முண்டியடித்துக் கொண்டும் வருவர்! அவர்கள் தலைகளில், 'தலைமாலைகள்' காட்சி தரும். அவை, நிலமகளுக்குச் சூட்டிய மாலை போல அழகுடன் தோன்றும்! செல்லும்போது ஒரே ஆரவாரம்! மகிழ்ச்சி!

பொதுமக்கள் மட்டுமா பரங்குன்றம் செல்கின்றனர்! இல்லையில்லை! அவர்களைப்புரக்கும் பாண்டியப்பெருமன்னனு மன்றோ செல்கின்றான் ! எப்படி ? சந்திரனானவன், தன்னைச் சூழ வருகின்ற தாரகைக் கூட்டங்களுடன் மேருமலையை வலமாகச் சுற்றி வருவதைப் போலச் சந்திரகுலத் தோன்றலாம் பாண்டியனும், பரங்குன்றை வலமாகச் சுற்றி வருவான் !

அவனுடன் வருவோர் யார் யார் தெரியுமா? அவனுடைய மனைவிமார், இளைய மயில் போலும் சாயலையுடைய பணிப்பெண்கள்; கடமை மறந்து காரியம் செய்வதில் கைதேர்ந்தவர்கள் ; குறிப்பறிந்து செயலாற்றும் அரசப்பணியாளர்கள் ஆகிய அனைவரும் பாண்டியனைச் சூழ வருவர் !

பாண்டியன், தன் குல அடையாளமாகிய சந்திரனைத் தலையிற் சூடியிருப்பான் ! தலைப்பாகையின் முன்தானைப்பகுதி, தோள் மீது அசைந்தாடும். முருகனது புகழைப் பாடியும் போற்றியும் வருவன். பரங்குன்றத்து உச்சியிலும் முருகனது திருக்கோயில் உண்டு. பாண்டியன் ஆங்கும் சென்று, அதனை வலம் வருவான் ! அவனைப்போலவே இத்தமிழ்நாட்டு மக்கள்-

பல்வேறு நகரங்களிலிருந்தும் ஊர்களிலிருந்தும் வந்து, முருகனைப் பணிந்து தொழுவர் !

" . . . . . புலமாண் வழுதி
மடமயி லோரும் மனையவ ரோடும்
கடனறி காரியக் கண்ணவ ரோடும், நின்
சூருறை குன்றின் தடவரை ஏறி, மேல்
பாடு வலம்திரி பண்பின் பழமதிச்
சூடி யசையும் சுவலமிசைத் தானையின்
பாடிய நாவின் பரந்த உவகையின்
நாடும் நகரும் அடைய அடைந்தனைத்தே
படுமணி யானை நெடியோய் ! " (19 ; 20—28)

என்று போற்றுகின்றார் புலவர் !

முருகனை வழிபட யானைமீதும், குதிரை மீதும், தேர் மீதும் வருவரன்றோ ? அத்தகைய யானைகளுக்குக் கரும்புகளைத் தீனியாகத் தந்து, மரங்களில் கட்டி வைப்பர். அவ்வாறே செல்லுவோர்க்கு இடையூறு நேராவண்ணம், குதிரைகளை வழியைவிட்டுத் தள்ளி ஓரிடத்தே வரிசையாகக் கட்டி வைப்பர். ஊர்ந்து வந்த தேர்களையும் வழிக்கு அயலில் ஒருபுறத்தே நிறுத்தியிருப்பர் ! இதனால், பரங்குன்றின் அடிவாரம், யானை, தேர், குதிரை ஆகிய வரிசையால், பாண்டியனின் பாசறை போலக் காட்சிதரும்.

முருகனை வழிபடச் செல்வோர், அக்குன்றில், பல்வேறு இனிய செயல்களைச் செய்து மகிழ்வர். குரங்களுக்குப் பலகாரங்கள் கொடுப்பர் சிலர் ; கரிய முகத்தைக் கொண்டிருக்கும் 'முசுக்கணம்' எனும் குரங்குகளுக்குக்கரும்புத்துண்டுகள் தருவர் சிலர்; 'தெய்வப்பிரமம்' எனப்படும் வீணையை மீட்டி, இசைப்போர் சிலர்; குழற்கருவிகளில் இசை எழுப்புவோர் சிலர் ; இளி, குரல், சமம் எனும் வேறுபாடு புலப்பட யாழ் மீட்டுவோர் சிலர் ; முருகன் சந்நிதானத்தில், பார்க்கவே அழகாகத் தோன்றும் வேள்விகளைப்பற்றி வாய் குளிரப் புகழ்ந்து பேசுவோர் சிலர் ; யாழுக்கு ஏற்ப முரசு அடிப்போர் சிலர் !

"குரங்கு அருந்து பண்ணியம் கொடுப்போரும்
கரும்பு கருமுசுக் கணக்களிப் போரும்
தெய்வப் பிரமம் செய்கு வோரும்
கைவைத் திமிர்பு குழல்காண்கு வோரும்
யாழின் இழிகுரல் சமம்கொள் வோரும்

> வேள்வியின் அழகியல் விளம்பு வோரும்
> கூர நாண் குரல் கொம்மென ஒலிப்ப
> ஊழுற முரசின் ஒலிசெய் வோரும்!'' (19:38-45)

எனப் பரங்குன்றத்து நிகழ்ச்சியைப் படம்பிடித்துக் காட்டுகின்றார் புலவர்!

பரங்குன்றக் கோயிலில் பல்வகைச் சிற்பங்களும் உண்டு. அவற்றுள், இரதி, மன்மதன் சிலைகளும் இடம் பெற்றிருந்தன. காம இச்சை கொண்டோர் சிலர், 'இவள்தான் இரதி, இவன்தான் மன்மதன்' என்று கூறி இன்பங் கொள்வார்! கோயிலின் ஒரு பக்கத்தே 'எழுத்து நிலை மண்டபம்' எனும் அழகான ஓவியக் கூடம் ஒன்றும் இருந்தது. உயரமான மூங்கில்கள் பரந்து நிழல் செய்து கொண்டிருக்கப் பரந்த பாறைப் பகுதியில் அம்மண்டபம் அமைக்கப்பட்டிருந்தது. பல்வேறுபட்ட கதைகளை விளக்கும் வண்ண ஓவியங்கள் வரையப்பட்டிருந்தன. அக்கதைகளை விளக்கிச்சொல்வதற்கென்றே பணியாட்கள் அமர்த்தப்பட்டிருந்தனர்! ''இவன், இந்திரனாகிய பூனை; இவள் - அகலிகை! இவனோ, புலர்காலைப் போதில் நீராடச் சென்ற கவுதமன்! இவன் சினங்கொண்டு சபிக்க, அகலிகை பெற்ற கல்லுருவம் இது! இக்கதை உண்டான வரலாறு இப்படி!'' என்று அப்பணியாளர்கள் விளக்கம் கூறுவர்:

> ''இரதி காமன் இவள்,இவன் எனாஅ
> விரகியர் வினவ வினாஇறுப் போரும்
> இந்திரன் பூசை, இவள்அக லிகை; இவன்
> சென்ற கவுதமன், சினன்உருக் கல்லுரு
> ஒன்றிய படியிது என்றுஉரை செய்வோரும்!''
> (19:48 52)

-என, மால்மருகனாம் முருகனின் மாட மருங்கை அழகுற வருணிக்கின்றார் புலவர்.

பரங்குன்றத்திற்கு வந்த நோக்கம் யாது? பரமனை வழிபடவன்றோ? எனவே, வந்தவரனைவரும், முருகனின் சந்நிதிக்கு வந்து, அவனது திருக்கோலம் கண்டு, வாழ்த்தி, வணங்கித் துதித்துப் போற்றுவாராயினர்!

''பெருமானே! நீலமணியின் நிறத்தைப் போல, நல்ல நிறத்தோடு விளங்கும் மயிலையும், உயரமாக எடுக்கப்பட்ட சேவற்புள்ளின் உருவம் பொறித்த கொடியினையும் கொண்-

டோனே! 'பிணிமுகம்' என்ற யானையைச் செலுத்திச் சென்று சூரனோடு நிகழ்த்திய போரிலே வெற்றி பெற்ற இறைவனே! நின் புகழையே உயர்த்திப் பேசி, நின், அழகிய நெடிய பரங்குன்றினைப் போற்றிப் பாடுவோம்! நின் திருவடிகளைத் தொழுவேம்!'' என்னும் பொருளில் வருவது பின்வரும் பாட்டு :

' மணிநிற மஞ்ஞை ஓங்கிய புட்கொடிப்
பிணிமுகம் ஊர்ந்த வெல்போர் இறைவ!
பணிபு ஒரீஇ நின்புகழ் ஏத்தி,
அணிநெடுங் குன்றம் பாடுதும்; தொழுதும்;
அவை யாமும் எம்சுற்றமும் பரவுதும்!'' (17;48-52)

முருகப் பெருமானிடம், அவரவரும் தத்தம் உள்ளத்திற் கேற்ப, வேண்டுதல் புரிந்தனர் என்பதைப் பரிபாடற் பாடல்கள் பலவாறு எடுத்துக் காட்டும்.

முருகனிடம், மணமாகாத பருவமங்கையர் என்ன வேண்டினர் ? இதோ புலவர் கூறுவன கேளுங்கள் !

''இறைவா ! நாங்கள், எம் காதலரோடு வையைப் புது வெள்ளத்தில் கை கோத்து, நீர் விளையாடி மகிழ்ந்ததாக, இரவிலே ஒரு கனவு கண்டோம் அந்தக் கனவு, பொய்யாய்ப் பழங்கதையாய்ப்போய்விடக்கூடாது. நனவிலும் அவ்வாறே ஆக எமக்கு நீ வரந்தரல் வேண்டும் ! ''

இவர்கள் இப்படி என்றால், திருமணமாகி நெடுநாட்களாகப் பிள்ளைப் பேறு இல்லாதவர்கள் வேண்டியது யாது ?

''இனியேனும் எம் வயிற்றிடத்துக் கருப்பம் அடைவதாக! அதற்காக நாங்கள் உனக்குக் காணிக்கை தருகிறோம் !'' என்ற வேண்டுதலே அது !

மற்றும் சிலர், ''எம் தலைவர், பொருள் தேடுதற்காக எம்மை விட்டுப் பிரிந்து சென்றுள்ளார் ! அவர்க்கு அப்பொருள் எளிதாகக் கைகூட வேண்டும் ! '' என்பர்.

வேறு சிலர், ''எம் காதலர், நாடு காத்தற் பொருட்டு, நம் வேந்தனது தலைமையில் பகைவரை வெல்லச் சென்றுள்ளார் ! அவர் அப்பகைவரை அழித்து, வெற்றி வாகை சூடி, மீண்டு வர அருள் புரிவாயாக! '' என்று கூறி அருச்சனை புரிவர் !

ஆனால் ஒரு சிலர், எதுவுமே வேண்டாமல், பெருமானின் புகழ் மட்டுமே பாடுவர்! மற்றுஞ்சிலர், முருகனை நினைந்து நினைந்து நெகிழ்ந்து நெகிழ்ந்து ஊற்றெழும் கண்ணீர் அதனால் உடம்பு நனையுமாறு அவனின் சந்நிதானத்தில் ஆடிக் கொண்டிருப்பர்!

இவ்வாறு, வேண்டுவார் வேண்டுவதே ஈவானாகிய திரு முருகன், பரங்குன்றில் வேண்டுதலைச் செய்யும் பெண்களின் குரலும், பாடுவோரின் தாளக் கட்டு அமைந்த பாடல் ஒலியும், ஆடுவோரின் தாள ஒலியும், ஒருங்கே முழங்க, மலை முகட்டின் மீது மேலும் முழங்கும் இடி முழக்கம் சேர்ந்து பேராரவாரமாக ஒலித்துக் கொண்டேயிருக்கும்!

''கனவில் தொட்டது கைபிழை யாகாது
நனவில் சேர்ப்ப! நின் நளிபுனல் வையை
வருபுனல் அணிகொள வரங்கொள் வோரும்
கருவயிறு உறுகளனக் கடம்படு வோரும்;
செய்பொருள் வாய்க்களனச் செவிசார்த்து வோரும்
ஐ அமர் அடுகளன அருச்சிப் போரும்
பாடுவார் பாணிச் சீரும்
ஆடுவார் அரங்கத் தாளமும்,
மஞ்சாடு மனல் முழக்கும்
துஞ்சாக் கம்பலை . . . . . . .'' (8 : 103—111)

எனும் பாடல், இவ் உண்மைகளை விளக்கும்!

முருகனை வழிபட வந்தவர்கள் பல திறப்பட்டவர்கள்; பல்வேறு ஊர்களைச் சேர்ந்தவர்கள். அவர்களில் பேதைச்சிறுமி ஒருத்தி; தன் பெற்றோருடன் கோயிலுக்கு வந்தாள். பாறைக கற்களுக்கு இடையிடையே புகுந்து சென்ற அவள், வழிதவறிப் பெற்றோரை விட்டுப் பிரிந்து விட்டாள்! 'ஐயோ! நான் வந்த வழியையும் மறந்து விட்டேனே! என்று சொல்லி, மதி மயங்கி வாட்டமுற்றாள். அவ்வேளையில், அவளைக்காணாது புலம்பிய அவளின் பெற்றோர்களும், 'ஏஎ', 'ஓஒ' என அவளை அழைத்-துக் கூவினர். அந்த எலியை, அப்பேதைச் சிறுமியும் கேட்டாள். ஆனால் அது, ஒந்த இடத்திலிருந்து வருகிறது என்பதை அவளால் அறிந்து கொள்ள முடியவில்லை; அன்றியும், அந்த ஓசையை, அம்மலைக் குகைகள் ஏற்று எதிரொலி செய்தன. அதனைக் கேட்ட அச்சிறுமி, அதுதான் உண்மை ஒலி என்று எண்ணிக் குகையிடத்தே சென்று பார்ப்பாள்; அங்குத் தன்

பெற்றோரைக் காணாதவளாய் மீண்டும் அவள் ஓலமிடுவாள். அதைக் கேட்டுப் பெற்றோர்களும் ஓலமிடுவர். இவ்விருவர் ஒலிகளையும் மலைக் குகைகள் வஞ்சகமின்றி எதிரொலிக்கும். இத்தகைய பரங்குன்று என்கின்றார் நப்பண்ணனார் :

> ''பிறந்த தமரின் பெயர்ந்தொரு பேதை
> பிறங்கல் இடையிடைப் புக்குப் பிறழ்ந்தியான்
> வந்த நெறியும் மறந்தேன் சிறந்தவர்
> ஏஎ ஓஒ எனவிளி ஏற்பிக்க
> ஏஎ ஓஒ என்று ஏலா அவ்விளி
> அவ்விசை முழையேற்று அழைப்ப அழைத்துழிச்
> செல்குவ ளாங்குத் தமர்க்கா ணாமை
> மீட்சியும் கூஉக் கூஉ மேலும் மடமைத்தே
> வாழ்த்து வப்பான் குன்றின் வகை'' (19 : 58—65)

என்பது அவர் கூற்று

பரங்குன்றத்தில் பரமனுக்குத் திருவிழா. அதற்கு அடையாளமாகக் கொடி ஏற்றப்பட்டிருக்கிறது. அன்று, மணமிகுந்த மலர்களைத் தம் நீண்ட கூந்தலில் சூடிய மகளிரும், திருமணப் பருவம் கொண்ட பெண்களும், அடியார்கள் செய்யும் வேள்விக் களத்தில் கூடியிருப்பார்கள். முருகனுக்குரியயானை, கோயிலில் கட்டப்பட்டிருக்கும். வழிபட வந்த அப்பெண்கள், நல்ல நிறமுடைய குங்குமத்தால அந்த யானையின் நெற்றியை அழகு படுத்துவர் ; உதிரிப் பூக்களையும் நீரையும் கலந்து அதன் மீது தூவுவர் ; அழகிய கவரிகளை வீசுவர் ; பவழக் காம்புகள் கொண்ட பொற்குடையினை உயர்த்துவர் ; யானையை வழிபடுவர். இறுதியில் அவ்யானை உண்டு எஞ்சிய எச்சிலைத் தமக்குரிய சிறப்பு உணவாகக் கருதிப் பயபக்தியோடு உண்பார்கள். அப்படி உண்டவர்களே, தமக்குரிய மணாளனைப் பெற்று மகிழ்ச்சி கொள்ள முடியும். மணாளனை முன்பே பெற்றவர்களாயின், அவர்கள், தங்கள் காதலரைப் பிரியாமலே வாழும் பேறு பெறுவர் ! ஒருகால் பிரிந்தவர்களாயின், இப்போது மீளவும் பெற்று, மகிழ்வு கொள்வார்கள் ! இத்தகைய நம்பிக்கை கொண்டே யானை உண்ட எச்சிலை உண்பார்கள்அப்பெண்கள்! இவ்வாறு உண்ணாதவர்க்கோ, இத்தகு நன்மைகள் கிட்ட மாட்டா !

> ''நினையானைச் சென்னி நிறம்குங்கு மத்தால்
> புனையாப்பூ நீரூட்டிப் புனைகவரி சார்த்தாப்

பொற்பவழப் பூங்காம்பின் பொற்குடை ஏற்றி
மலிவுடை உள்ளத்தான் வந்துசெய் வேள்வியுள்
பன்மணம் மன்னு பின்னிடுங் கூந்தலர்
கன்னிமை கனிந்த காலத் தார்;நின்
கொடியேற்று வாரணம் கொள்கவள மிச்சில்
மறுவற்ற மைந்தர் தோளெய்தார்; மணந்தார்
முறுவல் தலையளி எய்தார்; நின்குன்றம்
குறுகிச் சிறப்புணாக் கால்!'' (19:85–96)

இப்படிக் கூறும் புலவர், இறுதியாக, ''பூங்கொடி போன்ற குறக்குலப் பெண்ணாம் வள்ளிநாயகியைக் கூடி மகிழும் முருகப் பெருமானே! இப் பரங்குன்றத்தின் ஒரு பக்கத்தே, கடம்ப மரத்தின் அடியில் அமர்ந்து அழகுற விளங்குகின்றோய்! உன்னைப் போற்றிப் பாடுகின்றோம்; எம் சுற்றத்தோடு தொழுது வணங்குகின்றோம்; பெருமானே! எம்மையும் காத்தருள்க!'' என்று வேண்டுதல் செய்கின்றார்.

நல்லச்சுதனார் என்ற புலவரோ,

''மாறு அமர் அட்டவை; மறவேல் பெயர்ப்பவை;
ஆறிரு தோளவை; அறுமுகம் விரித்தவை;
நன்றுஅமர் ஆயமொரு ஒருங்குநின் அடியுறை
இன்றுபோல் இயைகளனப் பரவுதும்
ஒன்னார்த் தேய்த்த செல்வநின் தொழுதே!''
(21:66-70)

என்று, ''எம் சுற்றமுடன் நின் குன்றம் வந்து, நின் அடிக்கண் தங்குவதாகிய இவ் இன்ப வாழ்வே இன்றுபோல் என்றும் எமக்குப் பொருந்த அருள்புரிவாயாக!'' என வழிபடுகின்றார்.

'பொய்ச் சத்தியம்' செய்தால் என்னாகும் என்பதையும் நல்லந்துவனார் என்ற புலவர் நயமாக எடுத்துரைக்கின்றார்:

தலைவன் ஒருவன், தன் தலைவியைக் கூடிய காலத்துத் 'திருப்பரங்குன்றத்து முருகன் ஆணையாகக் கூறுகிறேன். நின்னைப் பிரியேன்!' என்று சத்தியம் செய்து கொடுத்தான். அப்படிச் சத்தியம் செய்தும், அவளைப் பிரியக் கருதினான். அப்போது அவளுக்குக் கோபம் வந்துவிட்டது! ''பரங்குன்றத்தைக்குறித்துப் பொய்ச் சத்தியம் செய்யும் நின் செயலைச், செய்யாது நிறுத்துக'' என்றாள். அவனோ, மீண்டும் அவ்வாறே சத்தியம் செய்தான். அப்போது உடனிருந்த தோழி, அவனைப் பார்த்து,

''மணவாழ்க்கையைத் தரும் முருகவேளினது தண் பரங்குன்றத்து அடியைத் தொட்டேன்; ஆணையிட்டுக் கூறுவேன்'' என்று பொய்ச்சத்தியம் கூறுகிறாயே! ஏழுல கங்களையும் ஆட்சி செய்யும் முருகப் பெருமானுக்கு உரிய மலையல்லவா இது! இம் மலையின்மீது நீ கொண்டிருக்கும் அன்பின் தன்மை இது தானோ! முருகன்மீது பொய்ச் சத்தியம் செய்து ஏதும் உரைப்பாயானால், நின்னை அவனது சத்திய வேற்படை உண்டுவிடும். தெரிந்து கொள்!'' என்றாள்.

> ''தண்பரங் குன்றத்து அடிதொட்டேன் என்பாய்!
> ஏழ்உலகும் ஆளி திருவரைமேல் அன்புஅளிதோ?
> என்னைஅருளி அருள்முருகு சூள்சூளின்
> நின்னை அருளில் அணங்காள், மெய்வேல் தின்னும்'!
> (8:62:64-66)

என்பது தோழி கூற்று.

இதனைக் கேட்ட தலைவனும், 'எனக்காக முருகனிடம் வேண்டுக் கொள்ளுங்கள் !' என்றான். அதுகேட்ட தோழியும், தன் தலைவியையும் மற்ற தோழிமார்களையும் பார்த்து இப்படிப் பேசினாள்:

''முருகப் பெருமானின் திருவடிகளைத் தொழுது வேண்டுதற் பொருட்டாக, யாமனைவரும் தண்பெருங்குன்றம் செல்வோம். எழுவீராக! மிகுதியான மலர்களை அவன் திருவடி-களிற் சொரிவோம்! அவனுக்குரிய பலியினைப்படைத்து ஊட்டு-வோம். தாளத்தோடும் கூடிய பாட்டைப்பாடி வெறியாடுவோம். தடாரிப்பறைகளையும் முழக்குவோம். அனைவரும் எழுவீராக!''

> ''மிக ஏற்றதும் மலர் ; ஊட்டுதும் அவி !
> தோற்றுதும் பாணி! எழுதும் கிணை! முருகன்
> தாள்தொழு தண்பரங் குன்ற ! '' (8 : 80—82)

அவ்வாறே அனைவரும் முருகனைப் போற்றுகின்றனர். அப்-போது தலைவி எவ்வாறு வழிபட்டாள் தெரியுமா ? பொய்ச் சத்-தியம் செய்த தன்தலைவனை, முருகன் தண்டித்து விடுவானோ என்று அஞ்சியஅவள், முருகனின்சந்நிதானத்திற்குச் சென்றாள். ஆங்கே தொங்கும் மணியினைத் தன் கையால் இழுத்து ஒலி எழுப்பினாள் ''முருகப் பெருமானே ! என் தலைவன் செய்த

பொய்ச்சூளினைப் பொறுத்தருள வேண்டும்! '' என்று கூறிய-வாறே, முருகன் திருவடிகளில் தன் தலையைச் சேர்த்துப் பணிந்து வணங்கினாள்!

முடிவுரை

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பிருந்தே நம்தமிழகத்தில் இறைவழிபாடு இருந்து வருவதாம் என்பதைப் 'பரிபாடல்' நமக்கு நன்கெடுத்துக்காட்டுகின்றது. திருமால், முருகன் குறித்த இப் பரிபாடல்களைப் பண்ணோடும் பாடி வந்தனர் என்றும் அறிய முடிகின்றது. பத்திப் பனுவலில் பரிபாடலையும் சேர்த்துக் கொள்வதில் தவறில்லையன்றோ?

# 2

# திருத்தொண்டர் புராணத்தில் 'திருநாளைப் போவார்'

நூற்சிறப்பு : திருத்தொண்டர் புராணம்

திரு + தொண்டர் + புராணம் = திருத்தொண்டர் புராணம். திரு—கண்டாரால் விரும்பப்படும் தன்மை. 'திரு' என்பதற்குச் 'செம்பொருள், அச்செம்பொருளை உணர்த்தும் சிவபெருமான்' என்றும் பொருள் கூறலாம். ('திருவே என் செல்வமே' எனச் சிவபெருமானை அடியவர் போற்றுதல் ஈண்டுக் கருதத்தக்கது!) தொண்டர் அடியார்; புராணம்-பழைய வரலாறு. 'தொண்டர் புராணம்' என்பது 'தொண்டரைப் பற்றிய புராணம்' என விரியும். சைவ சித்தாந்தத்தின்படி இறைவனை உயிர்கள் அடையும் வழிகள் நான்கு. அவை சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன; இறைவனைக் கண்டு வழிபடும் இடங்கள் மூன்று. அவை : குரு, இலிங்கம், அடியார் வேடம் என்பன இந் நால்வகை வழிகளின் மூலம், இம் மூன்று இடங்களிலும் நிலைபெற்ற பேரன்பின் திறத்தால், சிவ பரம்பொருளைச் சிந்தையிற் கொண்டு போற்றி, அம் முதல்வனது திருவருளுக்கு உரியராகிய அடியார்களை வழிபட்டுத் திருவருட் பண்புடையவராய்த் தத்தமக்கேற்ற திருத் தொண்டுகளைப் புரிந்து சிவனடியின்பப் பேறு பெற்றோர் திருத் தொண்டராவர்! இத் தொண்டர்களை 'நாயன்மார்' எனப் போற்றுவர் நல்லறிஞர். நாயன்-தலைவன். 'ஆர்' விகுதி சேர்த்து 'நாயனார்' என்பர்; எல்லாம் வல்ல சிவ பெருமானே 'நாயனார்' எனப்படுவர். சிவபெருமானைக் குறிக்கும் 'நாயனார்' என்னும் சொல், பின்னர் அவன்பால் பேரன்புடைய அடியாரைக் குறிப்பதாயிற்று. சிவனடியார் அறுபத்து மூவர் ஆதலின், 'நாயன்' என்பதனோடு 'மார்' விகுதி சேர்த்து 'நாயன்மார்' என்றழைக்கப்படுவாராயினர். இத் திருத்தொண்டர் புராணத்திற்குப் 'பெரிய புராணம்' என்ற வேறு பெயரும் உண்டு. 'செயற்கரிய செய்வார் பெரியர்' என்னும் பொய்யாமொழிக்கேற்ப இறைவன் திருவருளால் செயற்கருஞ் செயல்களைச் செய்தமையால் பெருமைபெற்ற சிவனடியார்களின் வரலாறு கூறும் நூலாதலின் 'பெரிய

புராணம் எனப் பல்லோராலும் போற்றப்படுவதாயிற்று 'புராணம்' என்ற பெயரினைப் பெற்றிருந்தாலும், வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு இயற்றப்பட்ட 'பெருங்காப்பியம்' இது என்பதை அனைவரும் ஒப்புக் கொள்வர்!

இச் சிவனடியார்களைப் பற்றி முதன்முதல் சுட்டும் தெய்வத் தமிழ்ப்பாட்டு, நம்பியாரூரனார் என நாவினாற்புகழப்படும் சுந்தரமூர்த்தி நாயனார் பாடிய 'தில்லை வாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்' என்னும் திருத் தொண்டத் தொகையாகும். இத் தொகையை வகுத்து விளக்கும் முறையில் நம்பியாண்டார் நம்பி என்பவர் 'திருத் தொண்டர் திருவந்தாதி' பாடியருளினார். இவ்விரண்டையும் அடியொற்றித் தெய்வச் சேக்கிழார், 'திருத்தொண்டர் புராணம்' ஆகிய இவ் 'விரிநூலை'ச் செய்தருளினார். எனினும் சம்பந்தர் அப்பர், சுந்தரர் என்னும் இம் 'மூவர் முதலிகள்' அருளிய, திருநெறித் தமிழாகிய தேவாரங்களும், ஏனைய திருமுறைகளாகிய அருள்நூல்களும், சேக்கிழார் இயற்றிய இந்நூலுக்கு அடிநிலைகளாக அமைந்தன எனலாம்.

சைவ சமயத்தில் மறைகளாக விளங்குவன 'திருமுறைகள்'! இத் திருமுறைகளின் எண்ணிக்கை பன்னிரண்டாகும். முதல் மூன்று, திருஞான சம்பந்தர் மொழிந்தன; நான்கு ஐந்து ஆறாந் திருமுறைகள், திருநாவுக்கரசர் அருளியன; ஏழாந் திருமுறை சுந்தரமூர்த்தி நாயனார் பாடியது. இவ்வேழும் 'தேவாரம்' எனப்படும். மணிவாசகர் அருளிய திருவாசகம். திருக்கோவையார் எட்டாந் திருமுறையாகும். திருமாளிகைத் தேவர் முதலியோர் பாடிய திருவிசைப்பா, திருப்பல்லாண்டு ஒன்பதாந் திருமுறை; திருமூலர் செய்த திருமந்திரம் பத்தாந் திருமுறை; பட்டினத்தார் முதலானோர் பாடியன பதினோராந் திருமுறை; சேக்கிழார் அருளிய இத்திருத்தொண்டர் புராணம். பன்னிரண்டாந் திருமுறை எனப்படும்.

''முதல் இராசராச சோழனது வேண்டுகோளை ஏற்றுப் பொல்லாப்பிள்ளையாரது திருவருளால், தேவாரத் திருப்பதிகங்களைத் தில்லையினின்றும் எடுத்து, அவற்றை ஏழு திருமுறைகளாகவும், முன்பே இருந்த திருவாசகம், திருக்கோவையார் என்பவற்றை எட்டாந் திருமுறையாகவும் வகுத்தார் நம்பியாண்டார் நம்பிகள்; இராசராச சோழனின் மகன். முதல் இராசேந்திர சோழன், தன் தந்தையாரைப் போலவே சிவபத்தி பூண்டு, திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, திருமந்திரம் முத-

லான தெய்வப் பாக்களை மேலும் சில திருமுறைகளாக வகுக்கச் சொல்லியதற்கேற்ப, அதே நம்பியாண்டார் நம்பிகள், ஒன்பது, பத்து, பதினோராம் திருமுறைகளை வகைப்படுத்தினார்! அதன் பின்னர்த் தில்லை நடராசப் பெருமான் அடியெடுத்துக் கொடுக்கச் சேக்கிழாரால் இயற்றப்பட்ட இத்திருத்தொண்டர் புராணம், அரங்கேற்றஞ் செய்யப்பட்ட காலத்து ஆங்கிருந்த சான்றோர் அனைவராலும் இது, 'முன்னுள்ள திருமுறைப் பாடல்களோடு ஒத்த திருவருட்பாடல்' என்று ஒப்புக்கொள்ளப் பட்ட காரணத்தால், பன்னிரண்டாந் திருமுறையாகச் செப்பேடு செய்யப் பெற்றது. இதனோடு 'திருமுறைகள் பன்னிரண்டு' என்னும் வரையறை பெற்று விளங்குகின்றன. முதல் திரு-முறையாகிய சம்பந்தர் தேவாரத்தில் முதற்பாடல் 'தோடுடைய செவியன்' என்பது. இதில் ஓகாரம் (த்+ஓ=தோ) அமைந்-துள்ளது; பன்னிரண்டாம் திருமுறையாகிய இத்திருத்தொண்டர் புராணத்தின் இறுதிப் பாடல் 'உலகெலாம்' என்பது. இதில் 'மகரம்' (ம்) ஈற்றில் அமைந்துள்ளது. எனவே இப் பன்னிரு திருமுறைகளில் அமைந்துள்ள தத்துவம் 'ஓம்' என்பதாகும்!'' இவ்வாறு திருமுறைகள் வகுக்கப்பட்ட சிறப்பினை விதந்து போற்றுவர் அறிஞர்.

இத் திருத்தொண்டர் புராணம் இரண்டு காண்டங்களை-யும் பதின்மூன்று சருக்கங்களையும் கொண்டது. முதற்காண்டத்தில் உள்ள சருக்கங்கள் ஐந்து. அவையாவன, திருமலைச் சருக்கம், தில்லைவாழந்தணர் சருக்கம், இலை மலிந்த சருக்கம், மும்மையால் உலகாண்டசருக்கம், திருநின்றசருக்கம். இரண்டாம் காண்டத்தில் உள்ள சருக்கங்கள் எட்டு. அவை-யாவன: வம்பறாவரிவண்டுச் சருக்கம், வார்கொண்ட வன-முலையாள் சருக்கம், பொய்யடிமையில்லாத புலவர் சருக்கம், கறைக்கண்டன் சருக்கம், கடல் சூழ்ந்த சருக்கம், பத்தராய்ப் பணிவார் சருக்கம், மன்னிய சீர்ச் சருக்கம், வெள்ளானைச் சருக்கம். செய்யுட்களின் மொத்த எண்ணிக்கை 4253 ஆகும். சில பதிப்புக்களில் மேலும் 33 செய்யுட்கள் உண்டு (அவை இடைச் செருகல் என்பர்.) இவை தவிரப் பாயிரச் செய்யுட்கள் பத்து, நூலின் தொடக்கத்தில் உள்ளன. இச்செய்யுட்கள் அனைத்தும் 'விருத்தம்' என்னும் ஒண்பாவாலானது.

தமிழ்நாட்டில், பலகாலத்தில், பல ஊர்களில், பல்வேறு குடும்பங்களில் தோன்றிய மெய்யடியார் அறுபத்து மூவரின் உண்மை வரலாற்றை, இனிய, எளிய, தூய, செந்தமிழ்

நடையில் எடுத்துரைக்கும் காப்பியமாக இத் திருத்தொண்டர் புராணம் இலங்குகின்றது. "நம்பியாரூரரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு, திருநாட்டுச் சிறப்பு, திருநகரச் சிறப்பு முதலானவற்றைக் கூறுவதால் இதுவும் 'காப்பியம்' என்றே போற்றத்தகுவது" என்பர் அறிஞர், இந்நூலில் உரைக்கப்படும் சிவனடியார்கள் இடத்தானும் மரபானும் சாதியானும் தொண்டானும் தொழிலானும் கோலத்தானும் வேறுபட்டவராயினும், சிவத்தொண்டில் - சிவபெருமானிடத்துச் செலுத்தும் அன்பின் திறத்தில் ஒன்றுபட்டவராய் மாட்சிமையுற்று, இறுதியில் பேரின்பப் பெருவாழ்வு எய்தியோராவர்! இவருள் 'சரியை'த் தொண்டு செய்தவர் சிலர்; 'கிரியை'த்தொண்டு செய்தவர் சிலர்; 'யோகியரா'கவாழ்ந்தார்சிலர்;'ஞானிய'ராகத்திகழ்ந்தார் சிலர்; பிரமசாரியாயிருந்தார் சிலர்; இல்லறமேற்றார் சிலர்; துறவறந்தாங்கினார் சிலர்; வேடந்தரித்தார் சிலர்; வேடந்தரியாதார் சிலர்; வன்றொண்டரானார் சிலர்; மென்றொண்டரானார் சிலர்; மலரால் வழிபட்டார் சிலர்; கல்லால் அருச்சித்தார் சிலர்! இவ்வாறு தொண்டும் தொழிலும் சீலமும் கோலமும் பலவகையாயிருப்பினும், அன்பே அடிப்படையாய் அமைந்தது! 'அன்பே சிவம்' என்பது ஆன்றோர் முடிபன்றோ? அன்புச் சமயமாகிய சைவ சமயமே இவ்வடியார் கைக்கொண்டது! இச்சிவனடியாரனைவரும்' செயற்கரிய செய்வார் பெரியர்' என்பதற்கேற்பச் செயற்கரும் செயல்களைச் செய்தமையால் பேறு பெற்றவராவர்.

திருத்தொண்டர் புராணமாகிய இந்நூலினைப்பயில்வார், பத்திச்சுவையுடன், இன்பச்சுவை வீரச்சுவை முதலான சுவைநலங்களையும் கண்டு இன்புறலாம். இது, அரசியல் தத்துவ நூலாக—உலகியல் நீதி நூலாக —வரலாற்று ஆதரவு நூலாக—சைவசித்தாந்த நுண்பொருளை விளக்கும் சமய நூலாக விளங்குவதைக் காணலாம். இச் சிவனடியார்களிற் பெரும்பாலோர் இல்லற நெறியின்கண் நின்று, தவமியற்றித் திருவருட்பேறு பெற்றவர். இவர்கள், ஒல்காப்பெரும்புகழ்த் தொல்காப்பியனார் உரைத்த,

> "காமஞ் சான்ற கடைக்கோட் காலை
> ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
> அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
> சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே"
>
> (தொல் : கற்பியல் 51)

என்னும் நூற்பாவிற் குறித்த உயர்நெறியில் நின்று வீடெய்தியவராவர் !

அரசியல் ஆட்சிக்கு அறநெறியே அடிப்படை என்பதும் ; ('அரசியல் நெறியின் வந்த அறநெறி வழாமல் காத்து' மெய்ப்பொரு : 2) ;நல்ல அரசாட்சியின் கீழ் வாழும் பேறு பெற்ற குடிகளின் பண்பு இத்தகையது என்பதும் ; ('அரசுகொள் கடன்கள் ஆற்றி மிகுதி கொண்டறங்கள் பேணி' : திருநாட்டுச் சிறப்பு : 26) நாட்டுக்குக் கேடு சூழ்வாரை ஒறுத்தல் வேந்தர் அல்லது அமைச்சர் கடன் என்பதும் ('மன்னு மந்திரிகட்குமேலாகியார், ஒன்னலர்ச்செற் றுறுதிக்கண் நின்றுளார்' : குலச்சிறை : 8) நூலில் ஆங்காங்கே சுட்டப்படுகின்றன. 'இருந்தமிழ் நாடுற்ற இடர் நீக்கிய தெய்வப் பாவை மங்கையர்க்கரசி' போன்றோர் தம் மாண்பும், இராச தந்திரங்களை நன்கறிந்து செயலாற்றும் குலச்சிறையார் போன்ற அமைச்சர்களின் இயல்பும், நீதி மன்றத்தே நடாத்தும் வழக்கு ஆய்வு, சான்று கூறுவோர் திறம், வழக்கு நாட்டப்படும் பண்பு, துலாக்கோல் போல் நீதி வழங்கும் முறை ஆகியனவும் (தடுத்தாட்கொண்ட புராணம்), அக்காலச் சாதிகளின் நிலை, சமூக நிலை, மணமுறைகள், உடன் உண்ணு நிலை முதலாயினவும், இந்நூலின்கண் விரிவாக உணர்த்தப்படுகின்றன.

வரலாற்றாராய்ச்சிக்கும் இந்நூல் பெரிதும் துணை புரிவதாக அமைந்துள்ளது. ''மன்னவர்க்குத்தண்டுபோய் வடபுலத்து வாதாவித் தொன்னகரந் துகளாக . . . . . . கொணர்ந்தார்'' (சிறுத்தொண்டர் : 6), ''வீடறியாச் சமணர் மொழி . . . . . . . குணபரவீச் சரமெடுத்தான்'' (திருநாவுக்கரசர் : 146) முதலான செய்யுட்கள், சிறுத்தொண்டர், திருநாவுக்கரசர் முதலானோர் காலத்தை அறிய அகச்சான்றாய் இருப்பன இவ்வாறே திருஞானசம்பந்தர், சுந்தரர் முதலானோர் வரலாறுகள், தேவாரப் பாக்களால் உறுதிப்படுத்தப்படுகின்றன ; மற்றுஞ்சில செய்திகள் கல்வெட்டுக்களால் நிலைநாட்டப்படுகின்றன.

எல்லாவற்றிற்கும் மேலாகச் சைவசித்தாந்த உண்மைகள் பல, நூலில் ஆங்காங்கு விளக்கம் பெற்றுள்ளன. சிவனுக்காளாகி உய்திபெற்று உயரும் தன்மையில் சாதி, குலம், செல்வம், ஆண் பெண் பாகுபாடு, வருணம், ஆச்சிரமம் முதலான வேறுபாடுகள் குறுக்கிடுவதில்லை. தில்லை வாழ் அந்தணர்-

முதல், புலையர் ஈறாக எல்லா வகையினரும் வேறுபாடின்றிச் சிவனைச் சேர்ந்தவர்களாக வணங்கப்படுகின்றனர். இருவினைகளைச் செய்கின்ற உயிர்களும், அவ்வுயிர்களாற் செய்யப்படும் நன்மை தீமைகளாகிய வினைகளும், அவ்வினைகள் காரணமாக உயிர்களைச் சேர்தற்குரிய இன்பதுன்ப நுகர்ச்சிகளும், அவ்வுயிர்கள் செய்த வினைப் பயன்களைச் செய்த உயிர்களே நுகருமாறு நியமித்து அங்ஙனம் நுகரச் செய்பவனாகிய இறைவனும் எனச் சைவசமயச் சான்றோரால் ஆராய்ந்து உறுதிசெய்யப்பட்ட பொருள்கள் நான்காகும். இதனை இந்நூல்,

> ''செய்வினையுஞ் செய்வானும் அதன்பயனுங் கொடுப்பானும்
> மெய்வகையால் நான்காகும் விதித்தபொருள் எனக் கொண்டே
> இவ்வியல்பு சைவநெறி அல்லவற்றுக் கில்லையென
> உய்வகையாற் பொருள்சிவனென் றருளாலே உணர்ந்தறிந்தார்''

என உணர்த்துகின்றது. (சாக்கியநாயனார் : 5) இவ்வாறே, கண்ணப்ப நாயனார் புராணத்துள் வரும்,

> ''நாணனும் அன்பும்முன்பு நளிர்வரை ஏறத் தாமும்
> பேணுதத் துவங்க ளென்னும் பெருகுசோ பானம் ஏறி
> ஆணையாம் சிவத்தைச் சார அணைபவர் போல ஐயர்
> நீணிலை மலையைஏறி நேர்படச் செல்லும் போதில்''

என்ற பாட்டும் சைவசித்தாந்த உண்மைகளை விளக்குவதாம்.

ஆன்மா, சிவத்தோடு கூடும் நிலையில் ஒன்றாகி உயிர் என்ற பொருள் கெட்டழிவதுமில்லை ; இரண்டாகப் பிரிவதும் இல்லை. இரண்டற்ற நிலையில் நுகரும் என்பதை, உமாபதிசிவம் தனது 'திருவருட் பயன்' நூலில் ''ஒன்றாலும் ஒன்றாதிரண்டாலும்ஒசையெழா, தென்றாலொன் றன்றிரண் டும்மில்'' எனக் கூறுவர். சைவசித்தாந்த முத்தி நிலை பற்றிய இவ்வுண்மை, ''நண்ணரிய சிவானந்த ஞானவடிவேயாகி, அண்ணலார் சேவடிக்கீழ் ஆண்டஅரசமர்ந்திருந்தார்'' (427) எனத் திருநாவுக்கரசு நாயனார் புராணத்துட் சொல்லப்படுகின்றது

''சைவ ஞான சாத்திரங்களின் முடிந்த முடிவுகளாக உள்ள உண்மைகளைத் தொகுத்துச் 'சைவசித்தாந்தம்' என்ற பெயரால் மெய்கண்ட நூல்கள் பேசும். அவை, இறைவன் உயிர்களின் உய்தி கருதி வகுத்தருளிய வேத சிவாகமங்களின் சாரங்கள் எனப் பெறும். அந்த உண்மைகளை இலக்கிய வகையால் நாயன்மார்களின் வாழ்க்கை வரலாறு மூலமாய்ப் பெரியபுராணம் எடுத்துக்காட்டுகிறது! இவ்-வுண்மைகளைச் சைவ சித்தாந்தத்தில் பன்னிரண்டாக வகுத்துள்ளனர். அவைதாம் மெய்கண்ட சாத்திரங்களுட் சிறந்த சிவஞான போதத்தினுள் பன்னிரண்டு சூத்திரங்-களாகப் பேசப்படும். சீவன் முத்தர்களாகிய அணைந்தோர் தன்மை 12ஆம் சூத்திரத்தில் இலக்கணவகையாற் கூறப்-பட்டுள்ளன. சைவத் தெய்வத் திருமுறைகளும் தேவார முதலாகப் பன்னிரண்டாக வகுக்கப்பட்டுள்ளன. அவற்றுள் பன்னிரண்டாவது பெரிய புராணம். ஞான சாத்திரங்களுள் இறுதியாக இலக்கண வகையால் வகுக்கப்பட்ட சீவன் முத்தர்களாகிய சிவனடி யணைந்தோர்களை இலக்கிய வகை-யால் உதவின முகத்தாலே பன்னிரண்டாவதாகிய இத்-திருமுறை எடுத்துக்காட்டுதல் பொருத்தமாகும்!''- இவ்வாறு சிவக்கவிமணி சுப்பிரமணிய முதலியார் கூறுவர்.

இந்நூலில், உவமை, உருவகம், சிலேடை முதலான பொருளணிகளும், மடக்கு முதலான சொல்லணிகளும் அமைந்துள்ளன; தேவாரப் பதிகங்களின் சொற்பொருள் நலங்களும் மிளிர்கின்றன. சுருங்கச் சொன்னால் தமிழ் இலக்கியவுலகிலும், சைவ உலகிலும், தன்னிகரில்லாத தனிப் பெருங் காவியமாக இலங்குவது இத் திருத்தொண்டர் புராணம் எனலாம்! (இலக்கிய நயங்களை எடுத்துக் கூற இக்கட்டுரை இடந்தராது; நூலினுட் கண்டு கொள்க.)

இனி, இந்நூலில் தனியடியார் அறுபத்துமூவரை-யன்றித் தொகையடியார் ஒன்பதின்மரைப் பற்றிய வரலாறும் உரைக்கப்படுகின்றது. அத்தொகையடியாராவர் :- தில்லை வாழந்தணர், பொய்யடிமையில்லாத புலவர், பத்தராய்ப் பணிவார்கள், பரமனையே பாடுவார், சித்தத்தைச் சிவன்-பாலே வைத்தார், திருவாரூப் பிறந்தார்கள், முப்போதும் திருமேனி தீண்டுவார், முழுநீறு பூசிய முனிவர், அப்பாலும் அடிச்சார்ந்தார். பெரியபுராண காலத்திற்குப் பின்னுள்ள காலத்திலும் வாழ்ந்து, திருவருள் பெற்றுச் சிவப்பேறு

அடைந்த அடியார்களும், 'அப்பாலும் அடிச்சார்ந்தார்' என்ற பட்டியலில் இடம் பெறுவர்!

இத் திருத்தொண்டர் புராணம், வடமொழியிலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. அங்ஙனம் வெளிவந்த நூல்கள் உபமர்நிச பக்த விலாசம், அகத்திய பக்த விலாசம் என்பன.

நூலாசிரியர் குறிப்பு

திருத்தொண்டர் புராணம் என்னும் பெரியபுராணத்தை இயற்றிய ஆசிரியர் சேக்கிழார் பெருமான் ஆவர். "தெண்ணீர் வயற் றொண்டைநன்னாடு சான்றோருடைத்து" என்று ஆன்றோரால் புகழப்படும் தொண்டை நாடு 24 கோட்டங்களை உடையது. அவற்றுள் ஒன்று புலியூர்க்கோட்டம்; அக்கோட்டத்தின் உட்பிரிவுகளில் ஒன்று 'குன்றத்தூர் வளநாடு'; இவ் வளநாட்டில், பெருமை பெற்ற ஊர் 'குன்றத்தூர்' - இவ்வூரில், சைவசமயத்தைச் சார்ந்த தொண்டை மண்டல வேளாண் மரபில், 'சேக்கிழார்' மரபில் தோன்றியவரே சேக்கிழார். இவர்தம் இயற்பெயர் அருண்மொழித் தேவர் என்பது. 'அருண்மொழி' என்பது இறைவரது திருப்பெயர். அக்காலத்துச் சோழ மன்னர்க்கும், குடும்பத்தார்க்கும் இப்பெயர் வழங்கிவந்துள்ளது. பின்னர், அவ்வரசர்பால் அன்புடைய ஏனையோரும் இப் பெயரினை வைத்துக் கொள்வாராயினர். அம்முறையில் சேக்கிழாருடைய பெற்றோர்கள், தம் மகனுக்கு 'அருண்மொழி' என்று பெயர் சூட்டினர். 'தேவர்' என்பது உயர்ந்தோரைக் குறிக்கும் திருவள்ளுவருக்குத் 'தேவர்' என்ற பெயருமுண்டு என்பதைத் 'தேவர் குறளும்' என்ற தொடரால் அறியலாம். ஆனால் அறிஞர் சிலர் 'அருண்மொழித் தேவர்' என்பது, சேக்கிழாரது தெய்வ வாக்குப் பற்றிப் பின்னால் எழுந்த சிறப்புப் பெயர் என்றுங் கூறுவர் மற்றுஞ் சிலர், திருமழபாடிச் சிவன் கோயிலிற் காணப்படும் கல்வெட்டொன்றில், 'குன்றத்தூர்ச் சேக்கிழான் மாதேவடிகள் இராமதேவனான உத்தம சோழப் பல்லவராயன்' என்று குறித்துள்ளமை கொண்டு, சிவ-பெருமானின் திருப்பெயராகிய 'இராமதேவர்' என்பதே இவர்-தம் இயற்பெயர் என்றுங் கூறுவர். இயற்பெயர் எதுவாயினும் இவரது சிறப்புப் பெயர்களுள் ஒன்றாக விளங்குவது 'சேக்கி-ழார்' என்பதாகும் சங்க காலத்தே 'கோவூர் கிழார்' விளங்கி-

யமைபோலப் பிற்காலத்தே 'சேவூர் கிழார்' திகழ்ந்தார். சேவூர் என்பது வடஆர்க்காடு மாவட்டத்தில் ஆரணி சாகீரை அடுத்துள்ள ஒரு சிற்றூர் என்றும், அவ்வூர்ப் பெயரால் 'சேவூர் கிழார்' (கிழார் - உரியவர்) அழைக்கப் பெற்றனர் என்றும், 'சேவூர் கிழார்' என்பதே 'சேக்கிழார்' ஆக மருவியது என்றும் சிலர் கூறுவர். சேக்கிழாருக்குத் தம்பி ஒருவர் உண்டு. அவரது பெயர் பாலறாவாயர் என்பர் அறிஞர்.

அக்காலத்தே, சோழவள நாட்டை ஆட்சிபுரிந்த அரசன் குலோத்துங்க சோழன் ஆவான். சேக்கிழாரது நுண்மாண் நுழைபுலமறிந்த சோழன், அவரை வரவழைத்து, முதன்மந்திரியாக ஆக்கியதோடு 'உத்தமசோழப் பல்லவன்' என்ற உயர்பட்டமுங் கொடுத்திட்டான். சேக்கிழாரும், தெய்வப் புலவர் திருவள்ளுவர் மொழிந்த பொய்யாமொழிக்கேற்பத் தம் அமைச்சுத் தொழிலைத் திறம்பட நடாத்தி வந்தார். சோழ நாட்டில் உள்ள திருநாகேச்சுரத்தில் எழுந்தருளியுள்ள சிவ பெருமானிடத்துப் பத்திபூண்டு வழிபட்டு வந்தார். நடராசரது திருச்சபை, மண்டபம் ஆகிய திருப்பணிகளும் செய்தார்; தாம் பிறந்த ''குன்றத்தூரில் மடவளாகந் தானாக்கித், திருக்கோயில் தாபித்து அங்கண் 'திருநாகேச்சுரம்' எனவே, திருப்பேர் சாற்றி, அம்புவியில் அங்காங்க வைபவங்கட்கான பரி கலந்திருநாள பூசை'' கற்பித்தார்.

அந்நாளில், சோழ அரசன், 'சீவக சிந்தாமணி' என்னும் சமண்சமயக் காவிய நூலைப் பலபடப் பாராட்டி மகிழ்ந்து வந்தான். அதுகண்ட சேக்கிழார், ''நெற் குத்துண்ணாதுமிக்குத்திக் கைவருந்துதல் போலும், கறவை நிற்க மலடுகூர்ந்து உளம் தளர்வது போலும், குளிர்பூஞ்சோலை வழியிருக்கக் குழியில் விழுந்து அளறு பாய்வது போலும், விலைதருமென் கரும்பு இருக்க இரும்பை மெல்வது போலும், விளக்கு இருக்க மின்மினித் தீக்காய்வது போலும்'' நொந்து திரிகின்றனரே என வருந்தினார்; அரசனைப் பார்த்துச் ''சமணர் பொய்ந்நூல் இது மறுமைக்காகாது; இம்மைக்கு மற்றே; வளமருவு கின்ற சிவகதை இம்மைக்கும் மறுமைக்கும் உறுதி'' என்றார் அதுகேட்ட வளவன், ''அம்மையும் இம்மையும் உறுதி பயக்கத் தக்க சிவகதை ஏது?'' எனக் கேட்க, ''ஞாலத்து அம்பலவர் திருத்தொண்டர் பெருமை ஆரூர் அடிகள் முதல் அடி எடுத்துக் கொடுக்க நாவல்,

நம்பிபதி னொரு திருப்பாட்டாகச் செய்த நலமலி தொண்டத் தொகைக்கு நாரையூரில், தும்பிமுகன் பொருளுரைக்க நம்பியாண்டார் சுருதிமொழிக் கலித்துறை அந்தாதி செய்-தார்; அக்கலித்துறை அந்தாதிதன்னைச் சேய திருமுறை கண்ட இராசராச தேவர் சிவாலய தேவர் முதலாயுள்ள, ஏயகருங் கடல்புடைசூழ் உலகமெல்லாம் எடுத்தினிது பாராட்டிற்று'' என்றார் சேக்கிழார். அப்போது சோழன், ''அந்தத் தூய கதை அடைவுபடச் சொல்வீர்!'' என்று கேட்கக் குன்றை-வேந்தரும், ''தில்லைவாழ் அந்தணரே முதற்பண் பாடுதிரு நீலகண்டத்துப் பாணர்ஈறாச், ''சொல்லிய தொண்டத் தொகை நூல் வகை அந் தாதித் தொடர்ச்சியினை'' விரித்துரைத்-தார். அதனைக் கேட்ட வளவன், மெல்லியலாள் பங்கர் திருவருளை நோக்கி வியந்து, அடியார் தொண்டு செய்து பேறு பெற்ற செல்கதியை நினைந்து உருகினான்; ''கதை கற்க, நிற்கத், தப்பில் பெருங் காவியமாய் விவரித்துச் செய்து தருவீர்!'' எனச் சேக்கிழாரை வேண்டிக் கொண்ட-தோடு, அவருக்குச் செப்பரிய திரவியமும் கொடுத்தனுப்பி-னான். சேக்கிழாரும் திருத்தில்லை சேர்ந்து நடராசப் பெரு மானைப் பணிந்து. 'அடிகளே! உனதடியார் சீர் அடியேன் உரைத்திட அடிஎடுத்து, இடர்கெடத் தருவாய்!'' என இறைஞ்சினார்; அப்போது, இலகு மன்றினில் ஆடுவார் திருவருளினால் அசரீரி வாக்கு 'உலகெலாம்' என அடிஎடுத்து உரைசெய்த பேரொலி ஓசைமிக்கு எங்கும் நிறைந்தது. அவ் 'உலகெலாம்' என்பதையே தம் நூலின் தொடக்கமாகக் கொண்டு காண்டம் இரண்டாக வகுத்துக் கதைப்பரப்பைத் தொகுத்துக், கருதரிய சருக்கங்கள் பதின்மூன்றா நிலையிட்டுத் திருவிருத்தம் நாலாயிரத்திருநூற் றைம்பத்து மூன்றாக அமைத்துத் 'திருத்தொண்டர் புராணம்' எனப் பெயருமிட்டார் சேக்கிழார்.

புராணம் பாடி முடித்த செய்தியறிந்த சோழப் பேரரசன், தில்லை நகர் புக்கு அம்பலவர் பாத தாமரை பணிந்து நின்றான். அப்போது. ''சேக்கிழான் நமது தொண்டர் சீர் பரவ நாம் மகிழ்ந்து 'உலகம்' என்று நம்வாக்கினால் அடி எடுத்து உரைத்திட வரைந்து நூல் செய்து முடித்தனன்; காக்கும் வேல் வளவ! நீ இதைக் கடிது கேள்!'' எனக் கனக வெளியிலே ஊக்கமான திருவாக்கு எழுந்தது; திருச்சிலம்பொலியும் உடன் எழுந்தது! அரசன் மகிழ்ச்சியுட்டிளைத்து, 'சேக்கிழார் முனி

விரித்துரைத்த கதை கேட்பதற்கு அண்டர் வாணர் அடியா-ரெலாம் கடுக வருக!' என்று திசைதோறும் ஆளும் ஓலைகளும் ஏவினான். அங்ஙனமே யாவரும் வந்து திரண்டனர்; ஆயிரக் கால் மண்டபத்தே ஆசிரியர் சேக்கிழார் அமர்ந்து கொண்டு, தாம் பாடிய திருத்தொண்டர் புராணத்தின் பொருள்தன்னை விரித்துரைத்தார். இங்ஙனம் விரித்துரைக்கத் தொடங்கிய நாள் சித்திரைத் திங்கள் திருவாதிரையாகும் இவ்விரிவுரை சரியாக ஓராண்டு நிகழ்ந்தது. புராணத்தைக் கேட்ட மறை-யோர், 'இதுவும் ஒரு தமிழ் வேதம் ஐந்தாவது' என்று போற்றினர்; சோழ மன்னனோ ஆசிரியரையும் நூலையும் யானைமேல் ஏற்றித் தானும் அருகே அமர்ந்து, தன் இணை-யிலாத் துணைக்கரத்தால் கவரி வீசி, 'இதுவன்றோ நான் செய்த தவப்பயன்!' என்று இசைத்தான்! பின்னர், அவன் சேக்கிழாருக்குத் 'தொண்டர் சீர் பரவுவார்' எனப் பெயர் சுமத்தி, ஞான முடி சூட்டி, அவரை வணங்கினான் என்னின், சேக்கிழார்தம் தெய்வப் புலமையை வியப்பதா? அன்றி, வற்றா வளஞ்சுரக்கும் பொன்னிநாடாளும் வளவனின் பெருந்-தகைமையினைப் போற்றுவதா?

திருத்தொண்டர் புராணமாகிய இப் பெரியபுராணத்தை முன்னர்த் தொகுத்த பதினொரு திருமுறைகளுடன் சேர்த்துப் பன்னிரண்டாம் திருமுறை என அமைத்துச் செப்பேடு செய்து நடராசர் திருமுன் வைத்தான் சோழன்! பின்பு, சேக்கிழா-ருடைய தம்பியார் பாலறாவாயரை அழைத்து, அவருக்குத் 'தொண்டைமான்' என்று பட்டம் அளித்து அவரைத் தனக்கு மந்திரியாக அமர்த்திக் கொண்டான். சேக்கிழார் பெருமான், தூய தில்லை நகர்தன்னிலே இருந்து, பண்டு மூவர் பதிகத்து வந்த அறுபத்து மூவர் கதைகளை உணர்ந்து, அண்டவாணர் அடியார்கள் தம்முடன் அருந்தவந்தன்னில் இருந்து பின், இண்டை வைத்த சடை அம்பலத்தவர் எடுத்த பாத நிழல் எய்தினார்!

சேக்கிழார் வாழ்ந்த காலத்தைப் பற்றிப் பலர் பல வித-மாகக் கூறுவர் 'திருத்தொண்டர் புராண அவையடக்கத்தில்' ஆய சீர் அநபாயன் அரசவை' என வந்துள்ளது. அநபாயன் என்பவன் இரண்டாம் குலோத்துங்க சோழனாவான்; எனவே இவன் வாழ்ந்த காலம் கி.பி. 12ஆம் நூற்றாண்டின் முற்பகுதி (கி.பி. 1133-1146) என்பர் சிலர். இலக்கிய வரலாற்றாசிரிய-ராகிய கா. சு. பிள்ளை, முதலாம் இராசேந்திரனின் காலமே

(கி.பி. 1012-42) இவர் காலம் என்பார். ''கலிங்கத்துப்பரணி பாடிய செயங்கொண்டார், சேக்கிழார் காலத்துக்கு முன்னும் ஒட்டக்கூத்தர் அவர் காலத்து உடனாயும், கம்பர் அவர் காலத்துப் பின்னரும் வாழ்ந்திருந்தனர்'' என்பர் சிவக்கவிமணி சுப்பிரமணிய முதலியார்.

சேக்கிழாருக்குரிய திருநட்சத்திரம் - வைகாசிப் பூசம் ஆகும். பதினான்காம் நூற்றாண்டில் வாழ்ந்த சைவசித்தாந்த சந்தனாசிரியரும் உயர்ந்த ஞானியும் ஆகிய கொற்றவன்குடி உமாபதிசிவாசாரியார், 'திருத்தொண்டர் புராண வரலாறு என்னும் சேக்கிழார் சுவாமிகள் புராணம்' பாடியுள்ளார் மாதவச் சிவஞான முனிவரும் சேக்கிழாரைப் போற்றியுள்ளார்; மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை 'சேக்கிழார் பிள்ளைத் தமிழ்' என ஒரு பிள்ளைத் தமிழே பாடியுள்ளார்; இவையனைத்தும் சேக்கிழாரின் பெருமைக்குச் சான்றாய் நிற்பன!

தமிழகத்தில் 'தெய்வப் புலமை' சான்ற பெரும் புலவராகப் பாராட்டப் பெறுபவர் இருவர். ஒருவர் திருவள்ளுவர்; மற்றவர் சேக்கிழார். அவ்வாறே 'தேவர்' எனத் தொழுதற்குரியாரும் இவ்விருவரே! திருவள்ளுவரைத் 'தேவர்' எனவும், சேக்கிழாரை 'அருண்மொழித் தேவர்' எனவும் போற்றுவர் சான்றோர். இவ்விரு பெரும் புலவரும் கருத்-தாலும் ஒன்றுபட்டவரேயாவர்! வள்ளுவர்பால் சேக்கிழார் பெரு மதிப்பும் பேரன்பும் உடையவர்; திருக்குறளில் ஆழ்ந்த புலமையும் ஈடுபாடுமுடையவராயுமிருந்தார்! தாம் முதன் முதலாகச் சோழப் பேரரசனால் அமைச்சராக அமர்த்தப்படும் போது, அவ்வரசன் கேட்ட 'கடலிற் பெரிது எது? ஞாலத்திற் பெரிது எது? மலையிற் பெரிது எது?' என்ற வினாக்களுக்குச் சேக்கிழார், ''பயன்றூக்கார் செய்த உதவி நயன்றூக்கின் நன்மை கடலிற் பெரிது'', ''காலத்தி னாற்செய்த நன்றி சிறி-தெனினும், ஞாலத்தின் மாணப் பெரிது'', ''நிலையிற் றிரியா தடங்கியான் றோற்றம், மலையினும் மாணப் பெரிது'' என்ற குறட்பாக்களையே விடையாக இறுத்தார் என்னும் வழிவழிச் செய்தியால், திருக்குறளிடத்து இவர் கொண்டிருந்த பெரு-மதிப்புப் புலனாகும்! ''வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந் தெய்வத்துள் வைக்கப்படும்'' என்ற குறட்பா-

வுக்கு இலக்கியமாகவே இத்திருத்தொண்டர் புராணத்தை இயற்றினார் என்று கூறினும் இழுக்கில்லை!

சேக்கிழார், தமது நூலில் தொல்காப்பியம் முதல் தம் காலத்து நூல் ஈறாகவுள்ள செந்தமிழ்த் தொன்னூல்களின் கருத்துக்களையும் சொற்பொருள் நலங்களையும் பொன்னே போற் போற்றி எடுத்தாண்டுள்ளார் என்பதை நூலைப் பயில்வார் உணர்தல் கூடும்!

> ''ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
> ஒன்றி யுயர்ந்த பால தாணையின்
> ஒத்த கிழவனுங் கிழத்தியும் காண்ப''

என்பது தொல்காப்பிய நூற்பா, (களவியல்;2) இந்நூற்-பாவிற் சொல்லப்படும் கருத்தை நம் சேக்கிழார். நங்கை பரவையாரைச், சுந்தரர் முதன்முதலிற் கண்டு காதல்கொண்ட-விடத்து அமைக்கும் திறம் அறிந்து இன்புறற்பாலது. புற்றி-டம் விரும்பினாரைப் போற்றித் தொழும் பொருட்டுச் சென்ற நம்பியாரூரர், ஆங்கு நங்கை பரவையாரைக் கண்டதும், ''கற்பகத்தின் பூங்கொம்போ காமன்தன் பெருவாழ்வோ'' எனப் பலவாறு எண்ணி வியந்தார்; அவ்வேளையில், நங்கை பரவையாரும், நம்பியாரூரரைக்கண்டு காதல்மீக்கூர்ந்தார். இது 'பாலது ஆணை' (வ்தி முறை) ஆகும் என்பதைத் தெய்வச் சேக்கிழார்,

> ''அண்டர்பிரான் திருவருளால் அயலறியா மனம் விரும்பப்
> பண்டைவிதி கடைகூட்டப் பரவையா ருங்கண்டார்''
> (தடுத்:142)

என்கின்றார்.

சங்க இலக்கியங்களிற் பேசப்படும் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நால்வகை நிலவளப்பங்களைச் சேக்கிழார் சொல்லும் திறம் காண்க:

> ''குழல்செய் வண்டினங் குறிஞ்சியாழ் முரல்வன குறிஞ்சி
> முழவு கார்கொள முல்லைகள் முகைப்பன முல்லை
> மழலை மென்கிளி மருதமர் சேக்கைய மருதம்
> நிழல்செய் கைதைசூழ் நெய்தலங் கழியன நெய்தல்''
> (திருக்குறிப்புத் தொண்டர் : .0)

இத்தகைய பாக்கள் பலவற்றில் தம் உள்ளத்தைப் பறி-கொடுத்த மாதவச் சிவஞான சுவாமிகள், தாம் பாடிய காஞ்சிப் புராணத்தில்,

> ''திருத்தொண்டை நன்னாட்டு நானிலத்தைத்
> திணைவளத்தைத் தெரித்துக்காட்ட
> மருத்தொண்டை வாய்ச்சியர்சூழ் குன்றைநகர்
> குலக்கவியே வல்லான்''

என்று விதந்து போற்றுகின்றார். இவ்வாறு நிலங்களின் வளப்பத்தை எடுத்துரைக்க வந்தபோதும், அந்தந்த நிலங்களில் இருக்கும் திருக்கோயில்களையும் இணைத்துப் பாடி இத்தகு திருத்தலங்களாலன்றோ இந்நிலங்கட்குப் பெருமை என்றும் கூறுகின்றார் சேக்கிழார். ''உம்பர் நாயகர் திருக்கழுக்குன்ற-மும் உடைத்தால் கொம்பர் வண்டுசூழ் குறிஞ்சிசெய் தவக்குறை உளதோ'' எனச் சேக்கிழார் கூறுவது, அவரது தெய்வப் புலமைக்குத் தக்க சான்று!

தெய்வத் தமிழ்த் தேவாரப் பாக்களில் தம் நெஞ்சைப் பறிகொடுத்தவர் சேக்கிழார் என்பதை நூலைப்படித்த அளவி-யே அறிந்து கொள்ளலாம். பல பாடல்கள், தேவாரங்களுக்கு விரிவுரை போல அமைந்துள்ளன. சில பதிகங்கள் பாடப்பெற்ற சந்தத்திலேயே அப்பதிகங்களின் வரலாற்றையும் சொல்லிச் செல்கின்றார் ஆசிரியர். வியத்தகு நிகழ்ச்சிகள் நடந்தமைக்குரிய காரணங்களைப் பொருத்தமாக எடுத்துரைக்கும் சேக்கிழாரது திறம் எண்ணுதற்குரியது. அப்பருக்கு நஞ்சு அமுதாயதைச் சொல்ல வரும்போது, ''பசுபதியார் தம்முடைய அடியார்க்கு நஞ்சமுதம் ஆவதுதான் அற்புதமோ?'' என்றும், கடலினுட் கல் மிதந்ததை ''இக்கடல் ஒரு கல் மேல் ஏற்றிடல் உரைக்க வேண்டுமோ'' என்றும் குறிப்பிடுதல் காண்க.

உவமை கூறுவதிலும் சேக்கிழார் வல்லவர் என்பதற்கு இரு சான்று. திருநாட்டுச் சிறப்பினைச் செப்ப வருங்கால், ''நெல்விளைந்தது; நன்கு முற்றியது; காற்றினால் முன்னும் பின்னும் அசைந்தது'' என்று கூறுகின்றார். அப்போது அழகான உவமை மூலம் விளக்குவது சிந்தனைக்கு விருந்து :

> ''பத்தியின் பாலராகிப் பரமனுக் காளாம் அன்பர்
> தத்தமிற் கூடினார்கள் தலையினால் வணங்கு மாபோல்

மொய்த்தநீள் பத்தி யின்பால் முதிர்தலை வணங்கி மற்றை
வித்தகர் தன்மை போல விளைந்தன சாலி யெல்லாம்!"
(22)

இவ்வாறே திருமுனைப்பாடி வளநாட்டைப் பின்வருமாறு உவமை வாயிலாக விளக்குவது அவரது அரசியலறிவையும் காட்டுவதாக அமைந்துள்ளது :

"கருங்கதலிப் பெருங்குலைகள் களிற்றுக்கைம் முகங்காட்ட
மருங்குவளர் கதிர்ச்செந்நெல் வயப்புரவி முகங்காட்ட
பெருஞ்சகடு தேர்காட்ட வினைஞர் ஆர்ப்பொலி பிறங்க
நெருங்கியசதுரங்கபல நிகர்ப்பனவாம் நிறைமருதம்!"
(திருநாவுக்கரசு : 6)

—இவைபோன்ற எண்ணிலா உவமைகளை எடுத்தாள்கின்றார் சேக்கிழார்!

நாயன்மார்களின் வரலாற்றைச் சொல்வதன் வாயிலாகத் தமிழக வரலாற்றையே அழகுபட இலக்கிய நடையில் எடுத்து மொழிந்துள்ளார் இவர் எனலாம். அப்பர் காலத்துப் பல்லவ மன்னன், சமணத்தினின்று சைவஞ் சார்ந்து குணதரவீச்சரம் எடுத்தமை, பல்லவர் வாதாபியை அழித்தமை, நாட்டில் ஏற்பட்ட பஞ்சங்கள், புறச் சமயத்தார் செயல்கள், சாதிப் பிரிவு-கள், திருக்கோயில் அமைப்பு முறைகள், வழிபாட்டு நிலைகள், அமைச்சர் முதலானோர் கடமைகள், அரசிமார்களின் பணிகள், நாட்டின் பல்வேறு பிரிவுகள், வளப்பங்கள், மக்களின் பழக்க வழக்கங்கள் ஆகியனவற்றை, அமைச்சுத்தொழில் பூண்டு அடியாராய் விளங்கிய அருண்மொழித் தேவர் ஆங்காங்கே அழகுறச் சித்திரித்துள்ளார்!

தில்லை நடராசப் பெருமான் அடிஎடுத்துக் கொடுத்த 'உலகெலாம்' என்பதைச் சேக்கிழார், தமது நூலின் தொடக்க மாக மட்டுமன்றி, இடையிலும், இறுதியிலும், அமைத்துள்-ளார். "சோதிமுத்தின் சிவிகை...... உய்ய உலகெலாம்" (216) எனத் திருஞானசம்பந்தர் புராணத்திலும், "என்றும் இன்பம்.. ...நிலவி உலகெலாம்" (53) என 'வெள்ளானைச் சருக்கத்'திலும் கூறுவது நோக்குக. இங்ஙனம் நூலின் முதல் நடு இறுதியிற் கூறிய பான்மையினைப் பெரியோர் வியந்து போற்றுவர். அன்றியும், இப்பெரியபுராண வரலாறு திருக்-

கயிலையில் தொடங்கித், திருத்தொண்டத் தொகை வரிசை-யிலேயே அமைந்து, இறுதியில் திருக்கயிலையிலேயே நிறைவு எய்துகிறது. இதுவும் ஆசிரியரின் புலமைக்கும் சிவபக்திக்கும் எடுத்துக்காட்டு!

சேக்கிழாருக்குப் பின்னர் வாழ்ந்த புலவர்களும், திருத்-தொண்டர் புராணக் கருத்தை ஆங்காங்கு ஆண்டுள்ளனர். சான்றுக்கு ஒன்று கூறலாம்.

> ''மாநிலங்கா வலனாவான் மன்னுயிர்காக் குங்காலைத்
> தானதனுக் கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால்
> ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால்
> ஆனபயம ஐந்துந்தீர்த் தறங்காப்பான் அல்லனோ''
> (திருநகரச்சிறப்பு:36)

என்பது, அறிநெறி நிற்கும் அரசனின் கடமைகளைச் சேக்-கிழார் எடுத்துக் கூறும் திருப்பாட்டாகும்! இப்பாட்டின் பொருளை உட்கொண்டே பரிமேலழகர். ''உற்றநோய் நீக்கி யுறாஅமை முற்காக்கும் பெற்றியார்ப் பேணிக் கொளல்'' (442) என்ற குறட்பாவுக்கு உரைவிளக்கங் கூறினாராதல் வேண்டும் என்பர் நல்லறிஞர்!

''பொங்கிய இருளை ஏனைப் புறஇருள் போக்குகின்ற, செங்கதி ரவன் போல் நீக்கும் திருத்தொண்டர் புராணத்'தை இயற்றிய இத்தெய்வப் புலமைச் சேக்கிழாரைப்பற்றி, உமாபதி சிவாசாரியார், 'சேக்கிழார் அடிபோற்றி' என்றும், ''சேக்கி-ழார் வாய்மலர்ந்த புராணம்'' என்றும் போற்றவாராயின், சேக்கிழாரது பெருமை நம்மாற் சொல்லுந் தரத்ததோ?

திருநாளைப்போவார் நாயனார் வரலாறு

அறுபத்துமூன்று நாயன்மாருள் ஒருவர் திருநாளைப் போவார் நாயனார். இவரது இயற்பெயர் நந்தனார். இவரைப் பற்றிய வரலாறு இந்நூலின் முதற்காண்டத்துள் நான்காவது சருக்கமாகிய 'மும்மையால் உலகாண்டசருக்கத்'தில் இடம் பெற்றுள்ளது 'மும்மையால் உலகாண்ட' என்பது, சுந்தரர் பாடிய திருத்தொண்டத்தொகையில்வரும் மூன்றாவது பாட்டின் தொடக்கமாகும் இத்தொடர், மூர்த்தி நாயனாரைக் குறிப்பது. 'மும்மை' என்பது திருநீறு, உருத்திராக்கக் கண்டிகை, சடை என்ற சிவசாதனம் மூன்றைக் குறிக்கும். இம்மூன்றினாலும் உலகையாண்டவர் மூர்த்தி நாயனார் என்பது பொருள். இச் சருக்கத்தில் முதற்கண் நிற்பது மூர்த்தி நாயனார் புராணம்.

எனவே, இது 'மும்மையால் உலகாண்ட சருக்கம்' எனப்படுவ-தாயிற்று! இதில் சொல்லப்படும் ஏனைய நாயன்மார்களாவர்: முருக நாயனார், உருத்திர பசுபதி நாயனார், திருநாளைப் போவார் நாயனார், திருக்குறிப்புத் தொண்ட நாயனார், சண்டேசுர நாயனார்.

திருநாளைப் போவார் நாயனார் புராணம் 37 செய்யுட்-களைக் கொண்டது. இப்புராணத்துள் சொல்லப்படும் திரு-நாளைப் போவார் நாயனாரின் வரலாற்றுச் சுருக்கம் வருமாறு:-

உலகு போற்றும் பழைய வளம்பதிகளுள் ஒன்று ஆதனூர். இது, கொள்ளிட நதி பொன்னும் மணியும் கொழிக்கும் புனல்-நாடாகிய சோழநாட்டைச் சார்ந்த 'மேற்கா நாடு' என்னும் பகுதியைச் சேர்ந்தது. அவ்வூரில் நீறுபூசும் நெற்றியினை-யுடைய சிவனடியார் திருக்கூட்டம் மிகுந்திருந்தது.

அவ்வூரில் கரும்புத் தோட்டங்களும், நெல்வயல்களும் நெருங்கி நிற்கும்; கருப்பஞ் சாறு வயல்களிற் பாய, நெற்-குலைகள் அலையும்; எருமைபூட்டப்பட்ட ஏர்கள் உழுதலால் உண்டான சால்வழியே, சேற்றில் வாழும் கருவுற்ற நண்டுகள் நடக்க முடியாமல் மெதுவாக அசைந்து சென்று பின்பு மேடான இடத்தில் ஏறிக் கரு ஈனும்; அக்கரு உண்ணு மாறு, தாமரை மலர்கள் தேனைச் சொரியும்! ஒருபக்கத்தே, மரங்கள் அடர்ந்த சோலைகள் உண்டு. அம்மரங்கள், அரும்பு நிறைந்த கொம்பு-களையும் தளிர்களையும் கொண்டவை; சூரிய மண்டிலத்தை-யும் தொடுமளவுக்கு உயர்ந்தவை; ஆதலின் மேகங்கள் அங்குத் தங்கி அசையும்; தேன் உண்ண வண்டுகள் சூழ்ந்திருக்கும்; மேகங்கள் மழைபொழியும்போது தேனும் கலந்திருப்பதால் 'தேன் மழையோ' என்று சொல்லுமாறு இருக்கும்! மற்றொரு பக்கம், தென்னைகள், பாளைகளை விரித்துப் பசியகாய்க் குலைகளைத் தாங்கி நிற்கும். அவற்றிற்கு அருகே ஆழமான நீர்க் கிடங்கில் வாளை மீன்கள் இருக்கும்! அம்மீன்கள் மேலே துள்ளிப் பாய்ந்து தென்னையின் அடிப்பகுதியை முட்டும்; அப்-போது மரத்தின் உச்சியிலிருந்து தேங்காய் நெற்றுக்கள் கீழே விழ, அதனால், வாளை மீன்கள் சேற்றுக்குள் புதையுண்டு கிடக்கும்; அப்போது அருகே உள்ள பலா மரங்களிலுள்ள பலாப் பழங்கள் முதிர்ச்சியால் வெடிக்க, ஆங்கிருந்து தேன் பெருகும்; அப் பெருக்கத்தால் தென்னை நெற்றுக்கள் மிதக்கச், சேற்றில் புதையுண்ட வாளைமீன்களுக்கு விடுதலை கிடைக்கும்.

இவ்வாறு வயல் வளப்பமும், தோட்ட வளப்பமும் மிகுந்துள்ளமையால் பெரிய செல்வங்களைப் பெற்றுத்திகழ்ந்தன அவ்வூர் மாடங்கள்! இவை, மேகம் தங்குதற்கேற்ப உயர்ந்து தோன்றின. இவற்றிற்கு அருகே குடும்பங்கள் நெருக்கமாக அமைந்திருந்தன.

இவ் ஆதனூருக்கு வெளியே நிறைய வயல் நிலங்களும், அவற்றின் அருகே மேட்டுப் பாங்கான பகுதிகளும் இருந்தன. இம்மேட்டு நிலத்தே, புலையர் வாழ் சேரி ஒன்று இருந்தது. புல்லால் வேயப்பட்ட சின்னஞ்சிறு குடிசைகளில்மேல் பசுமையான சுரைக் கொடிகள் படர்ந்திருந்தன. வீட்டின் முற்றத்தே கூரிய நகமும் மெல்லடியும் கொண்ட பெட்டைக் கோழிகளும் அவற்றின் குஞ்சுகளும் இங்குமங்கும் திரியும்; முற்றங்களில் தோல் வார்களும் வலைகளும் தொங்கவிடப்பட்டிருக்கும்; கூரிய நகமுடைய நாய்க்குட்டிகள் துள்ளியோடும்; இரும்பினாற் செய்யப்பட்ட 'சரி' என்ற வளையலையுடைய கைகளால், அக்குட்டிகளைப் பற்றிக் கொண்டு, புலைச்சிறுவர் விரைந்து ஓடுவர்! அப்போது நாய்க் குட்டிகள் சூரைக்கும்; அவ்வொலியை, அச்சிறுவர் இடுப்பிலுள்ள கிண்கிணி மணியோசை அடக்கிவிடும்! குடிசையைச் சுற்றிலும் மருதமரம், வஞ்சிமரம், மாமரம், தென்னைமரம் முதலானமரங்கள் உண்டு. மருதமரத்து நிழலில், உழத்தியர், தம் குழந்தைகளைத் தோலின்மேல் உறங்க வைப்பர்; வஞ்சி மர நிழலில், பெரியபானைகள் புதைக்கப்பட்டிருக்கும்; அவற்றினுள் பெட்டைக் கோழி, குஞ்சுகளோடு ஒடுங்கிப் படுக்கும்; மாமரத்தில் வாரினால் ஆன பாறைகள் தொங்கவிடப்படும்; தென்னை மரத்தருகே உள்ள சிறியபள்ளங்களில் நாய்க்குட்டிகள் தங்கியிருக்கும்! மற்றொருபுறம், பெரிய காஞ்சி மரங்கள், குளிர்ந்த கிளைகளைத் தாங்கிப் பரந்த நிழலைத் தந்து நிற்கும். இந் நிழலில், நெறி குழல் மகளிர் நெற் குற்றுவர்; அப்போது பாட்டுப் பாடுவர்; இம்மரத்தின் ஓரத்தே செங்குடுமி வாரணம் தங்கியிருக்கும்; திண் கடைஞர், வினைச் செயல் புரியும் பொருட்டு வைகறை யாமப் பொழுதை அளந்துகாட்டு முகத்தான், அவை கூவியழைக்கும். இத்தகு குடிசைகட்கருகே பொய்கைகள் உண்டு; ஆங்கே, பறவைகள் தண்புனலில் ஓசை எழுப்பும்; தள்ளாடித் தள்ளாடி நடக்கும்; அவற்றின் கால்கள் படுவதால் பூங்குவளை, தளை அவிழ்த்து மலரும்; தேனையும் சொரியும், இக் குவளை மலரையும் நெற்கதிர்-

களையும் புலைச்சியர், தம் தலையிற்சூடி, மது அருந்தி மகிழ்ச்சியால் ஆடுவர்; அவ்வாட்டத்திற்கேற்பப் பறை ஒலிக்கும்!

இப்படித்தாகிய புலைஞர்வாழும் எல்லையில் 'நந்தனார்' என ஒருவர் திகழ்ந்தார், இவர், மெய்யன்பு சிவன் கழற்கே என்னும் உணர்வொடும் தோன்றியவர். அவ் ஆதனூரிலே, வழிவழியாக உரிமையுடன் ஊர்ப் புலைமைத் தொழில் செய்து வந்தார். தமக்கு நல்லறிவு தொடங்கிய நாள்முதல், பிறைக் கண்ணிப் பெருந்தகைபால் சிறந்த பெருங் காதல் பூண்டவராய்ச், செம்மைபுரி சிந்தையராய், மறந்தும் பிற சிறு தெய்வத்தை நினையாதவராய்த் தாம் பிறந்த மரபுக் கேற்பச் சிவ அறங்களைச் செய்யும் கொள்கையராய்ச், சிவபிரானின் அடித்தொண்டின் நெறியிலேயே நின்றார்! அவ்வூர் மக்களால், வெட்டிமைத் தொழில் செய்வதற்காக மானியமாக விடப்பட்ட நிலத்தினின்று உண்டாகும் விளைபொருட்களை உணவாகக் கொண்டு, தொழில் செய்பவராகித் திருத்தொண்டில் தலைநின்றார் அன்றியும் கூர் இலைய முக்குடுமிப் படையண்ணல் கோயில்தொறும் பேரிகை முதலானவற்றிற்கும் பிற இசைக் கருவிகட்கும் தேவையான போர்வைத்தோல், விசி வார் முதலியனவும், வீணை, யாழ் முதலானவற்றிற்கு உரிய நரம்புகளும், சிவபிரான் அர்ச்சனைகட்குக் கோரோசனையும் ஆர்வத்துடன் அளித்து வந்தார். இவ்வகையால், தம் குலத் தொழிலுக்கு ஏற்றவாறு இறைவனுக்குத் திருத்தொண்டு செய்து வந்தார்; மேலும் கோயில்களின் திருவாயிற்புறம் நின்று, மெய்விரவு பேரன்பு மிகுதியினால் ஆடுதலும் அவ்வாட்டத்திற்கேற்பப் பாடுதலுமாய் இருப்பார்!

இங்ஙனமாக இருந்து வந்தபோது, திருப்புன்கூரில் எழுந்தருளியுள்ள சிவலோகநாதனை நினைந்து, ஆங்கும் தம் பணிகள் செய்ய வேண்டும் என விழைந்தார். அதனால் தம் ஊராகிய ஆதனூரிலிருந்து புறப்பட்டு, இறைவனைக் கண்டு வணங்க முடியுமோ முடியாதோ என்ற வருத்தத்தோடு நடந்து, திருப்புன்கூரை அடைந்தார். சிவபெருமானைப் புகழ்ந்து பாடி, அவ்வூர்த் திருக்கோயிலுக்கு முன்னே வாயிலருகே நின்று கொண்டார்; எதிரே இருந்த நந்தி மறைத்திருந்ததால், ஆண்டவனை நேரே கும்பிடமுடியவில்லையே என ஏங்கினார். அவரது எண்ணமுணர்ந்த எம்பெருமான் நேரே காட்சிதரத் திருவுளம் கொண்டு, போர் ஏற்றை (நந்தியை)ச் சற்றே விலகியிருக்க அருள் புரிந்து தம்மை

நந்தனாரது கட்புலனாற் கண்டு மகிழுமாறு செய்தார்! பவ-லோகங்கடப்பவராகிய நந்தனார், அப்போது கொண்ட மகிழ்ச்சிக்கு அளவே இல்லை! கீழே விழுந்தார்; பணிந்தார்; தொழுதார்; ஆடினார்; பாடினார்; பின்பு, அத்திருக்கோயி-லருகே பள்ளமான இடம் ஒன்று இருத்தலைக் கண்டு, அதைத் திருக்குளமாகத் தோண்ட நினைத்தார்; இறைவனரு-ளால், தடங்கொண்ட குளத்தளவு சமைத்து விட்டார்! பின்னர், அக்கோயிலை வலங்கொண்டு பணிந்து எழுந்து, நடங்கொண்டு, இறுதியில் இறைவன்பால் விடைகொண்டு, தம்மூருக்குத் திரும்பினார்!

இவ்வாறாகச் சிவபிரான் மகிழ்பதி பலவும் சென்று, இறைஞ்சித், தம்மாலான போர்வைத் தோல், விசிவார், தந்திரி, கோரோசனை முதலான பொருள்களைத் திருக்கோயில்கட்குத் தந்து, மெய்த்த திருத்தொண்டு செய்து வரலானார் நந்தனார்! திருத்தில்லை என்னும் சிதம்பரம் சென்று, ஆங்கு வீற்றிருக்கும் நடராசப்பெருமானைக்கண்டு தொழவேண்டும் என்ற பேரார்வம் அவரைப் பிடர் பிடித்து உந்திக்கொண்டிருந்தது. இதே சிந்த-னையில், இரவு முழுவதும் கண் துஞ்சார்; புலர்ந்ததற்பின் 'தில்லைத் திருக்கோயிலினுட் சென்று நடராசப் பெருமானைக் காணும் தன்மை, யான் பிறந்த குலத்தோடு பொருந்தாததாக உள்ளதே!'' என எண்ணி, 'இதுவும் எம் பெருமான் ஏவலே' என முடிவுகொண்டு, போகும் எண்ணத்தைக் கைவிடுவார். எனினும் தில்லை செல்லும் ஆசை அவரை விடாது; அவ்வாசை மேலும் மேலும் பெருகும்; எனவே 'நாளைப் போவேன்' 'நாளைப் போவேன்' என்பார் இங்ஙனம் சொல்லிச் சொல்லி நாட்கள் பல கழிந்தன. எனவே மனம் பொறாமல், ஒரு நாள், தில்லை செல்லத் துணிந்தவராய்ப், பாளைப் பூங்கமுகு சூழ்ந்த பழம்பதியாம் அவ் ஆதனூரினின்றும் புறப்பட்டுச் சென்று, வாளைப்போத்து எழும் பழனம் சூழ் தில்லையருகே வந்து சேர்ந்தார்! திருத்தில்லை எல்லையடைந்ததும் அதனைப் பணிந்து எழுந்தார். அவ்வூரில், திருத்தில்லைவாழ் அந்தணர்-கள் வளர்க்கும் செந்தீ வேள்விச் சாலையினின்றும் ஆகுதிப்புகை எங்கும் சூழ்ந்திருந்தது; அந்தணச் சிறார், கூட்டங்கூட்டமாக மறை ஓதுகின்ற திருமடங்கள் நெருக்கமாகக் காட்சியளித்தன. இவற்றைக் கண்ட நந்தனார், தாம் பிறந்த குலத்தை எண்ணி, அவ்வூருக்குள் செல்ல அஞ்சியவராய், ஊர்ப்புறத்தே தங்கி-விட்டார்! அங்ஙனம் தங்கிய அவர், ''இவ்வெல்லையையும்

கடந்து, ஊர்சூழ் எயில் திருவாயிலை அடைவோர், குன்றனைய மாளிகைதொறும் வேள்வித் திண்ணைகள் ஒன்றிய மூவாயிரம் ஆகுதிகளைக் காணலாம் எனப் பெரியோர் கூறுவரே!'' என்று எண்ணி, அதனை எய்துதற்கு அரிய பெருமை குறித்துச் சிந்தித்தார். 'எனக்கு எய்தல் அரிது' என அஞ்சிய நந்தனார், அப்பதியின் மதிற்புறத்தே, ஆராத பெருங்காதல் ஒப்பரிதாய் வளர்ந்தோங்க, உள்ளுருகிக் கைதொழுதே, செப்பரிய அத் திருவெல்லையை வலமாகச் சுற்றி வரலானார்! இவ்வண்ணம் இரவுபகலாக வலம் வருவார்; அதனால் உள்ளம் அழிவார்; அயர்வு கொள்வார். ''மைவண்ணத் திருமிடற்றார் மன்றில் நடங்கும்பிடுவது எவ்வண்ணமோ?'' என ஏங்குவார்; அவ்வேக்கத்தோடு கண் துயில்வார். நந்தனாரின் அந்நிலையை அம்பலத்துள் ஆடுவார் அறிந்து, அவர்தம் வருத்தமெலாம் தீர்ப்பதற்கு, அருள் கொண்டு, அவரது கனவின்கண் தோன்றி. ''இப்பிறவி போய் நீங்க எரியினிடை நீ மூழ்கி, முப்புரிநூல் மார்பருடன் முன் அணைவாய்!'' என மொழிந்தார்; அங்ஙனமே தில்லை வாழ் அந்தணர்தம் கனவிலுந் தோன்றி 'எரியமைக்க' க் கூறினார். தம் பெருமான் பணிகேட்ட தவமறையோர் எல்லாரும், அம்பலவர் திருவாயில் முன்பு அச்சமுடன் ஈண்டினர்; 'எம்பெருமான் அருள் செய்த பணியினைச் செய்வோம்' என்று ஏத்தினர்; திருத்தொண்டராம் நந்தனார் இருக்குமிடஞ் சார்ந்தனர். நந்தனாரைக் கண்டு, ''ஐயரே! அம்பலவர் அருளால் வெய்ய அழல் அமைத்து உமக்குந் தரவேண்டி இப்பொழுது இவண் வந்தோம்'' என விளம்பினர். அதுகேட்ட நந்தனார் 'நான் உய்ந்தேன்' எனத் தொழுதார்; பின்பு அவர், தென்திசையின் மதிற்புறத்தே திருவாயிலின் முன்னர்ப், பிஞ்ஞகர்தம் நிறையருளால் மறையவர்கள் நெருப்பு அமைத்த குழியினை அடைந்தார்; இறையவர் தாள் மனத்துட்கொண்டே எரிசூழ வலம் வந்தார்!

அவ்வாறு வலம் வந்த நந்தனார், கைதொழுது. நடமாடும் கழல் உன்னி அழலினுள் நுழைத்தார்; அங்ஙனம் நுழைத்த அப்பொழுதே இம்மாயப் பொய்தகையும் உருவினை ஒழித்துப் புண்ணிய மாம்மறைமுனி வடிவாய் மெய் திகழ் பூணூல் விளங்கச் சடைமுடி தாங்கி மேல் எழுந்தார்! அவர் எழுந்த தோற்றமானது, செம்மலர் மேல் வந்து எழுந்த அந்தணனாம் பிரமதேவன் போலிருந்வது! அப்போது அந்நகரத்தே துந்துபி

நாதம் வந்து எழுந்தது; வானவர் மகிழ்ந்து ஆர்த்தனர்; மந்தார மரத்தின் பனிமலர் மாரி பொழிந்தனர்! அத்திருக் காட்சியினைக் கண்குளிரக் கண்ட திருவுடைய தில்லைவாழ் அந்தணர்கள், அம்மாமறை முனிவராம் திருநாளைப்போவா-ரைக்கைதொழுது போற்றினர்; பரவரிய தொண்டர்கள் பணிந்து வணங்கினர்! நந்தனாரோ அருமறை சூழ் திருமன்றில் ஆடுகின்ற அம்பலவாணர் தம்அடிக்கமலம் வணங்க விரைந்து வந்தார்! தில்லைவாழ் அந்தணரும் உடன் வந்தனர். கோபுரத்தைத் தொழுது இறைஞ்சிய நந்தனார், திருக்-கோயிலுனுட் புகுந்தார்; உலகுய்ய நடமாடும் அத்திருச்-சிற்றம்பல எல்லையைத் தலைப்பட்டார். அவ்வளவே! அவரை எவருமே காணவில்லை! அந்தணர் அதிசயித்தனர்; அருமுனிவர் துதி செய்தனர்! அந்தமிலா ஆனந்தப்பெருங்கூத்தராகிய அம்பலவாணர், தம்மை வந்தணைந்த நந்தனார்தம் வினை-மாசுகளைப் போக்கித், தம்முடைய சுந்தரத் தாமரைபுரையும் துணையடிகளை அவர் என்றும் தொழுது கொண்டே இருக்கு மாறு திருவருள் சுரந்தார்!

இவ்வாறாக. நந்தனார், மாசுபொருந்திய இவ்வுடம்பை விட்டுவிடும் பொருட்டுத் தீயிலே திருமஞ்சனம் செய்து, அருளோடு மேல்எழுந்து. ஆசில் மாமறை முனிவராகி, அம்பலவர் திருத்தாள் அடைந்தார்!

— 'திருநாளைப் போவார் நாயனார் புராணத்'தில் சேக்-கிழார் பெருமான் சொல்லிய செய்திகள் இவையே!

ஒவ்வொரு நாயனாருக்குமெனத் திருநட்சத்திரம் உண்டு; அந்தந்த நாளில் அந்தந்த நாயனாருக்கு எல்லாச் சிவன் கோயில்களிலும் குருபூசை செய்துவருவது. தொன்றுதொட்ட மரபாக இருந்துவருகினறது. அம்முறையில் திருநாளைப்போவா ராகிய நந்தனாரின் திருநட்சத்திரம்-புரட்டாசித் திங்களில் வரும் உரோகிணி ஆகும். அன்று இந்நாயனாருக்குக் குருபூசையும் வழிபாடும் செய்யப்பெறும்!

நந்தனார் தோன்றிய ஆதனூர் என்னும் ஊர், *திருப்புன்கூருக்கு வடமேற்கில் கொள்ளிடத்தைக் கடந்தால் ஆறுநாழிகை அளவில் உள்ளது. இவ்வூருக்கு மண்பாதை உள்ளது. இப்போதும், நாற்பது வேலி தனிவட்டமாகத் 'திரு-நாளைப்போவார்காணி' என வழங்கும் நிலப்பகுதியுமுண்டு

என்பர் அறிஞர். இவ்வூர் இக்காலத்தே 'மேலாதனூர்' என்றும் 'மேலநல்லூர்' என்றும் வழங்கப்படுகிறது.

சேக்கிழார் செய்யுள் நலம்

திருநாளைப் போவார் நாயனார் புராணம் மிகமிகச் சிறியது; முப்பத்தேழு செய்யுட்களே கொண்டது எனினும் தெய்வச் சேக்கிழார், தமது சொல்லோவியத்தால் பல அழகிய காட்சிகளை நம்முன் கொண்டு வந்து நிறுத்துகின்றார். ஈண்டுச் சில காண்போம்.

இயற்கையின் எழில்நலங்களை எடுத்து விளக்குவதில் சேக்கிழார் இணையற்றவராய்க் காட்சியளிக்கின்றார். மேற்கா-நாட்டாதனூரைச் சிறப்பிக்க வந்தபோது, ''திகழ்ந்த புனற் கொள்ளிடம்பொன் செழுமணிகள் திரைக்கரத்தால், முகந்துதர இருமருங்கும் முளரிமலர்க்கையேற்கும்'' என்று கூறுவது எத்துணைச் சுவை பயப்பதாக உள்ளது? இயற்கையின் எழிலை மட்டுமா கூறுகின்றார் ஆசிரியர்? கொள்ளிடநதி, பொன்னும் மணியும் வாரி இறைத்து உலகு புரப்பதுபோல், வள்ளல்-களாயுள்ளோர், தம்பாலுள்ள செல்வத்தைப் பிறர்க்கு அள்ளித் தந்து, பொன்றாப் புகழ்பெற வேண்டுமென்னும் உயரிய கருத்தையுமன்றோ கூறுகின்றார்! நெல் வயல்களையும், கரும்புத் தோட்டங்களையும், பூஞ்சோலைகளையும் தென்னை, பலாக்-களையும் பலவாறாக வருணிக்கின்றார் இவர்! இங்ஙனம் வருணிக்கும் போதும், உலகியலில் மக்கள் கைக்கொள்ளத்தக்க அறநெறிகளையும் இடையிடையே சுட்டிச் செல்வது இவர்தம் தனி மாண்பாகவுள்ளது. 'பாளைவிரிமணங்கமழும்' என்ற பாட்டில், தென்னை மரத்தின் அடிப்பகுதியை வாளைமீன பாய்ந்து தாக்க, அதனால் சினங்கொண்ட அத்தென்னையின் நெற்று, மேலிருந்து கீழேவிழ, அதனால் அவ்வாளைமீன் சேற்றுக்குள் புதையுண்டதாகக் கூறுகின்றார்; அதோடு நின்றாரில்லை தெய்வச்சேக்கிழார்! பக்கத்தே உள்ள பலாப் பழம் வெடித்துத் தேன் பெருக்கொடுத்தோட, அதில் தென்னை நெற்று மிதக்க. இறுதியில் வாளைமீன் சேற்றினின்றும் விடுதலை பெற்றது என்றும் உரைக்கின்றார். இதன் மூலம் ஓர் அரிய அறத்தை உணர்த்துகின்றதாக நாம் எண்ண வேண்டியுள்ளது. குற்றம் செய்தவர்க்குத் தண்டனை கொடுப்பது நேர்மையே; ஆனால் குற்றம் என்று உணர்ந்தோர்க்குக் கருணையும் காட்டுவதே பண்பு; தன்மீது மோதிய வாளைமீது

சினந்த தென்னை, அதற்குத் தண்டனை தருவதுபோல், தனது நெற்றால் சேற்றில் ஆழ்த்தியது; ஆனால் பலாப்பழச்-சாறு பாய்ந்ததும். அந்த நெற்று, அருள்கொண்டு, வாளையை மீட்டது! இவ்வாறு தண்டனையும் கருணையும் காட்டும் தனிப் பண்பை மரங்களின் வாயிலாகக் காட்டும் சேக்கிழார்தம் மாண்பை என்னென்பது! மேலும், பலாப்பழத் தேனினால், சேற்றில் சிக்குண்ட வாளைமீனுக்கு உய்வுகிடைத்தது என்பதை உள்ளுறை உவமமாகக் கொண்டால், எல்லாம் வல்ல சிவ பெருமானின் திருவடிப் பேறாகிய ஆனந்தத் தேனில் மூழ்கு-வார்க்கே, பிறவியாகிய சேற்றினின்று விடுதலை கிடைக்கும் என்ற சைவ சித்தாந்த நுண்பொருளையுமறியலாம்!

இங்ஙனமே, புலைப்பாடியின் இயல்பை உள்ளது உள்ள-வாறே எழுத்தோவியத்தால் சித்திரித்துக்காட்டும் சேக்கிழாரது ஆற்றலும் எண்ணி மகிழ்தற்குரியது. ''பைங்கொடிச் சுரைமேற் படர்ந்த பழங்கூரையுடைப் புற்குரம்பைச் சிற்றில் - சுழலும் அளகின் குறும் பார்ப்புக்குழு - வள்ளுகிர்நாய்த் துள்ளு பறழ் - காரிரும்பின் சரிசெறிகைக் கருஞ்சிறார் - வன்சிறுதோல் மிசை உழத்தி மகவுறக்கும் நிழல் மருதம் - பெடையொடுங்கும் தடங்குழிசிப் புதைநிழல்மென் சினைய வஞ்சி விசிப்பறை தூங்கினமா - செங்குடுமி வாரணச்சேக்கைத் தண்சினைக்காஞ்சி-புலைமகளிர்நெற்குறு பாட்டொலி - கள்ளுண்டு களிதூங்கக் கறங்கு பறையொலி'' - இவ்வாறாகப் புலைப்பாடியைப் புனைந்துரைக்கின்றார்!

இத்தகு புனைந்துரைகளின் இடையிடையே தன்மை, தற்குறிப்பேற்றம், உவமை, உருவகம், உயர்வு நவிற்சி முதலான பல்வகை அணிநயங்களையும் அமைத்துச் செல்-கின்றார் ஆசிரியர். 'பகர்ந்துலகு சீர்போற்றும்' என்னும் பாட்டில் தற்குறிப்பேற்றவணியும் உருவகவணியும் அமைந்-துள்ளன. 'நனைமருவுஞ் சினைபொதுளி' என்ற பாட்டில் உயர்வு நவிற்சியணி வந்துள்ளது. 'வயல் வளமும்' என்ற பாட்டிலும், புலைப்பாடியின் இயல்புகளைச் சொல்லும் பிற பாடல்களிலும் தன்மையணி யின்றுள்ளது. இனி, நந்த-னார், தில்லையம்பதியில் எரியினிடை மூழ்கி எழுப்போது, 'செம்மலர்மேல் வந்தெழுந்து அந்தணன் போல் தோன்றி-னார்'. எனச் சேக்கிழார் குறிப்பிடுவது உவமையணியாகும்!

நந்தனார்தம் வரலாற்றைமட்டும் வாளா எடுத்துரைப்-பது ஆசிரியரின் நோக்கமன்று! இவ்வரலாற்றின் வாயிலாக

மன்பதைக்குச் சிறந்த குறிக்கோளினையும் எடுத்துரைக்க வேண்டுமென்பதே சேக்கிழார்தம் திருவுள்ளக் குறிப்பாகும்! அத்தகு சிறந்த குறிக்கோள்தான் யாது? சேக்கிழாரே நூலின் தொடக்கத்திற் கூறுகின்றார்:

> ''இங்கிதன் நாமம் கூறின் இவ்வுல கத்து முன்னாள்
> தங்கிருள் இரண்டில் மாக்கள் சிந்தையுட் சார்ந்து நின்ற
> பொங்கிய இருளை ஏனைப் புறஇருள் போக்கு கின்ற
> செங்கதி ரவன்போல் நீக்கும் திருத்தொண்டர் புராணம் என்பாம்!''

இத்தகைய குறிக்கோளை நூலினுள் ஒவ்வொருவரது புராணத்திலும் காணலாம். நந்தனார் தோன்றிய ஆதனூரைச் சொல்லவந்தவிடத்திலேயே ''நீற்றலர் பேரொளி நெருங்கும் அப்பதி'' என்கின்றார். ''யாண்டும் திருநீற்றின் மணமும் ஒளியும் பரந்தும் நெருங்கியும் விளங்கும் பழம் பதி'' என்னும் போதே சிவனடியார்தம் சிறப்பை உணர முடிகின்றது. புலையர்தம் வாழ்வைச் சிலர் இழிந்ததாக எண்ணினும், அவ்வாழ்விலும் செம்மை உண்டு. நேர்மை உண்டு சிவபத்தி உண்டு என்பதை நந்தனார் வரலாற்றால் ஆசிரியர் சுட்டிக்காட்டுகின்றார். ''ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும், கங்கைவார் சடைக் கரந்தார்க் கன்பராகில், அவர் கண்டீர் நாம் வணங்குங் கடவுளாரே!'' என நாவரசர் மொழிந்த நன் மொழிக்கு இலக்கியமாக நந்தனார் வாழ்வு அமைந்துள்ளது! ''எக்குலத்திற் பிறந்தாலும், யாவராயிருந்தாலும், எந்நிலையில் நின்றாலும், எத்தொழிலைப் புரிந்தாலும், அக்குலத்திற்கும் அந்நிலைக்கும் அத் தொழிற்கும் ஏற்ப எம்பெருமானை நினைந்து, அவனடித் தொண்டு செய்யலாம். அத் தொண்டின் பயனால் இறையடி இன்பம் எய்தலாம்! இறைத் தொண்டுக்குச் சாதி, பிறப்பு, குலம் முதலாயின இல்லை!'' என்பதை நந்தனார் வாழ்வு நமக்கெடுத்துக் காட்டுகின்றது! ஆனால், அங்ஙனம் தொண்டு செய்தற்கும், இறையடி எய்தற்கும் முற்பிறப்பில் தவம் செய்திருக்க வேண்டும்; அத்தகு தவத்தை நந்தனார் செய்திருந்தார் என்பதை, ''மெய்ப்பிரிவு சிவன் கழற்கே விளைத்த உணர்வொடும் வந்தார்... வருபிறப்பின் வழிவந்த அறம்புரி கொள்கையராயே அடித்தொண்டின் நெறிநின்றார்'' என்னும் தொடர்களால் சேக்கிழார் குறிப்பிடுகின்றார்!

அக்காலத் தமிழ்ச்சமுதாயத்தினரிடையே சாதி வேறுபாடுகள் பல்கியிருந்தன; உயர்வு தாழ்வும் இருந்தது. இவற்றையும் இப்புராண வாயிலாக நாம் அறிய முடிகிறது. ஒருபுறம், சமுதாயத்தே மிகமிகப் பிற்பட்ட நிலையில் இருக்கும் புலைஞர்கள், மற்றொருபுறம், சமுதாயத்தின் மிகமிக உச்சநிலையில் இருக்கும் தில்லைவாழ் அந்தணர்கள்! இவ்விரு திறத்தாரையும் இணைக்கவல்லது 'சிவனன்பே' எனச் சைவத்தின் மேன்மையைத் தெய்வச் சேக்கிழார் நுட்பமாய் எடுத்துரைத்துள்ள திறம் நினைந்து நினைந்து போற்றத்தக்கது! திருப்புன்கூரில் நந்தியை விலக்கிய சிவலோகநாதன், திருத்தில்லையிலும் அதுபோன்ற ஒன்றை நிகழ்த்தியிருக்கலாம்! நந்தனாரின் மெய்த்தொண்டைத் தில்லைவாழ் அந்தணர் மட்டுமன்றி உலகமே அறியவேண்டுமென ஆண்டவன் திருவுள்ளங் கொண்டார். 'எரியினிடை நீமூழ்கி முப்புரிநூல் மார்பருடன் முன்னணைவாய்' என நந்தனாரிடம் மொழிந்த அம்பலவாணர், தில்லைவாழ் அந்தணரிடமும் அப்பரிசே மொழிந்தார். அங்ஙனமே எரியமைத்த அந்தணர் யாவரும், நந்தனார் இருக்குமிடந் தேடிச்சென்று, 'ஐயரே!' என விளித்தும், 'எரியினுள் மூழ்கவேண்டுமே' எனச் சிறிதும் கவலையுறாது. 'நான் உய்ந்தேன்' என நந்தனார் நவின்றதும், எத்தகைய உயர்ந்த இடங்கள்? நாவுக்கரசரைக் 'கற்றுணைப் பூட்டி ஓர் கடலிற் பாய்ச்சிய' போதும் 'நற்றுணை யாவது நமச்சிவாயவே' எனக் கூறி உய்ந்தாரன்றோ? அதுபோல் நந்தனாரும் ''கைதொழுது நடமாடும் கழல் உன்னி அழல் புக்கார்' ஆதலின், இம்மாயப் பொய் தகையும் உருவொழித்துப் புண்ணிய மாமுனிவராய்த் தோன்ற எழுந்தார்! புலையர் குலத்தில் தோன்றிய நந்தனாரைப் புண்ணிய மாமறை முனிவராய் ஆக்கிய தில்லைநடராசர்தம் திருவருளை என்னென்பது? அதனினும் மேலாகத், தம்மை வந்தணைந்த திருத்தொண்டர்தம் வினைமாசு அறுத்துச், சுந்தரத் தாமரை புரையும் துணையடிகள் தொழுதிருக்கவும் அருள் புரிந்தாரன்றோ? திருத்தொண்டர்தம் பெருமைதான் என்னே? சிவபெருமானின் பேரருட்டிறந்தான் என்னே? இதனை இனிது எடுத்து மொழிந்த தெய்வச் சேக்கிழார்தம் சிறப்புத்தான் என்னே!

வாழ்க சேக்கிழார் சேவடிகள்!

3

# திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதியும், திருக்கருவைக் கலித்துறையந்தாதியும்

## க. திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி

### 1. நூலாசிரியர் சிறப்பு

சீரும் சிறப்புமுற்றிருந்த செந்தமிழ்ப் பாண்டி நாடு, கி.பி.பதினான்காம் நூற்றாண்டின் முற்பகுதியில் தாழ்நிலை அடையத் தொடங்கிற்று. தில்லி அரசரின் படைத் தலைவனாம் மாலிக்காபூர், பாண்டி நாட்டின் மீது படையெடுத்துப் பல நகரங்களைக் கொள்ளையிட்டுப் பெரும் பொருள் திரட்டிச் சென்றனன். பாண்டி மன்னர்கள், தம் நாட்டைக் காத்தற்குரிய ஆற்றலின்றி வாளா விருந்தனர். அன்னவர்க்குத் திறைப் பொருள் தந்து வந்த குறுநில மன்னரும், ஆங்காங்குக் கலாம் விளைத்துத் தம் விருப்பம் போல் ஆளத் தொடங்கினர். இந்நிலையில் விசயநகர வேந்தன் குமார கம்பண்ணன் என்பான், பெரும் படையுடன், தமிழகம் போந்து, மதுரைமா நகரில் நிலைபெற்றிருந்த மகமதியராட்சியை ஒழித்துக் கட்டினான்; மகமதியர்களை வென்ற அவன் எந்தப் பாண்டிய அரசனிடம் நாட்டை ஒப்பித்துச் சென்றான் என்பது தெரியவில்லை. ஆயினும், அவன், பாண்டியர்க்கு உற்றுழி உதவுமாறும், அறநிலையங்களைக் கண்ணுங் கருத்துமாய்க் கண்காணித்து வருமாறும் ஆணையிட்டுச் சில தலைவர்களை ஆங்காங்கு அமர்த்திவிட்டுச் சென்றனன். அத்தலைவர்களும் பாண்டிய அரசைக் கைப்பற்றிக் கொண்டு, தாமே அரசாள வேண்டுமென்ற எண்ணத்தால், அதற்குரிய காலத்தைக் கருதிக் கொண்டிருந்தனர். கி.பி. பதினான்காம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அத்தலைவர்கள், மதுரை நகரையும் அதனைச் சூழ்ந்திருந்த பகுதிகளையும் இழந்து நெல்லை மாவட்டத்திற்குச் சென்று தங்கினர் எனக் கருத முடிகின்றது. (பண்டாரத்தார் - பாண்டியர் வரலாறு)

கி.பி. பதினான்காம் நூற்றாண்டின் பிற்பகுதி முதல் பதினேழாம் நூற்றாண்டின் பிற்பகுதி வரையில், செந்தமிழ் மணக்கும் தென்பாண்டி நாட்டில், பாண்டிய மன்னர் சிலர் ஆட்சிபுரிந்து வந்தனர் இவர்கள், மதுரையில் ஆண்டு வந்த விசய நகர நாயக்க மன்னர்கட்கு அடங்கியிருந்தனர். இவர்களுள் ஒருவரே அதிவீரராம பாண்டியர் ஆவார். இவர் ''கோசடிலவர்மன் திரிபுவன சக்கரவர்த்தி கோனேரின்மை கொண்டான் திருநெல்வேலிப் பெருமாள் வீரவெண்பாமாலையான் தன்மப் பெருமாள் குலசேகர தேவர் நந்தனாரான அழகம் பெருமாள் அதிவீரராமரான சீவல்லப தேவர்'' என்று கல்வெட்டொன்றில் அழைக்கப் பெறுகின்றார். 'சீவல்லபன் என்னும் பெயர் 'சீவலன்' என்று சிதைந்து காணப்படுகின்றது. இதைப் பற்றிச் 'சீவலமாறன் கதை' என்ற ஒரு நூலும் உண்டு என்பர். இவருக்கு இராமன், வீரமாறன் அழகன், சீவலவேள் என்ற வேறு பெயர்களும் உண்டு. (கலைக் களஞ்சியம்)

அதி வீரராம பாண்டியர், தம் தந்தையாகிய நெல்வேலி மாறனின் (கி பி. 1552 - 1564) நினைவுக் கறிகுறியாகத் தென்காசியில் 'குலசேகர முடையார் கோயிலை'யும் அதனருகே திருமால் கோயில் ஒன்றையும் கட்டுவித்தார் என்று வரலாற்றாசிரியர் உரைப்பர் இதனால் இவரது சமயப் பொது நோக்குத் தெற்றெனத் தெரியும்!

இவர், தம் தந்தையைப் போலவே புலவரைப் போற்றினார்; செந்தமிழைச் சிறக்கக் கற்றார்; பாக்கள் பல புனையும் ஆற்றல் பெற்றார்; நாளும் நற்றமிழால் நம் பெருமானை வழுத்தினார்! சேறை ஆசுகவிராசர், திருவண்ணாமலைப் புலவர் சிதம்பர நாதர், புதுக்கோட்டை நைடதம் இராம கிருட்டிணர் முதலியோர் இப் பாண்டியரால் ஆதரிக்கப் பெற்றவராவர். ஆசுகவிராச சிங்கம் என்ற சேறை ஆசுகவிராசரைக் 'காளத்திநாதர் கட்டளைக் கலித்துறை' என்ற நூலைப் பாடுமாறு செய்வித்தவர் இவரே என்றும் கூறுவர். இவர்களேயல்லாமல் சிவந்த கவிராசர் என்ற புலவரும், இப் பாண்டியர் அவையில் இருந்தனர் என்பர்.

தந்தையை மறவாத் தகவுடையவராய்ச் - செய்ந்நன்றி போற்றுஞ் சிந்தையராய்ச் - சிவனை வழுத்தும் செந்தமிழராய்ப்-

புலவர்ப் புரக்கும் புவியரசராய்க்-கவிபல பாடுங் கவிவாணராய்-அருந்தமிழ் உணர்ந்த பெருங் கலைவாணராய் விளங்கிய இவ் அதிவீரராம பாண்டியர் இயற்றிய நூலே 'திருக்கருவைப் பதிற்றுப் பத்தந்தாதி'!

இவ்வினிய நூலன்றித் 'திருக்கருவைக் கலித்துறையந்தாதி', 'திருக்கருவை வெண்பாவந்தாதி', 'நைடதம்' 'கூர்ம புராணம்', 'இலிங்க புராணம்', 'காசிக் காண்டம்', 'வெற்றி வேற்கை' முதலான நூல்களையும் இவர் இயற்றியுள்ளார்.

இவரியற்றிய நூல்களால் இவர்தம் செந்தமிழ், வடமொழிப் புலமையினை அறிவதோடு, அப்புலமையும் இவருக்கு இயற்கையில் அமைந்ததொன்று என்பதையும் கண்டு களிக்கலாம். இவர், முதன்முதல் இயற்றிய நூல் நைடதம் என்றும், இறுதியில் இயற்றிய நூல் இத் 'திருக்கருவைப் பதிற்றுப் பத்தந்தாதி' என்றுங் கூறுவர். இளமையில் இவர், சிற்றின்பத்திலீடுபட்டு உழன்றதாகவும், அதனால் தொழுநோயுற்றுத் துன்புற்றதாகவும், அதனைப் பொறுக்கலாற்றாது திருக்கருவைச் சிவபிரான் மீது நூல்கள் பாடி உய்ந்தனர் என்றும் கூறுவர்!

இவருக்குக் கல்வி கற்பித்த ஆசிரியர் சுவாமிநாத தேவர் என்றும், தீக்கை செய்வித்த ஆசிரியர் அகோர சிவாசாரியார் என்றும், இவர் பாடிய நூல்களானறியலாகும். இவரின் நூல்கள் அனைத்தும் சிறந்தனவெனினும், இத் 'திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி'யே தலைசிறந்ததாய்க் - கற்போர்க்குக் கழிபேருவகை தருவதாய் இலங்குகின்றது! அதுபற்றியே ஆன்றோரனைவரும் இந்நூலைக் 'குட்டித் திருவாசகம்' என்றனர் போலும்!

இத்தகைய அருட்பெருங் கவிஞராம் அதிவீரராம பாண்டியர், அரசுகட்டிலேறி ஆட்சிபுரிந்த காலம் கி.பி. 1564 முதல் 1603 வரை என்பர் நல்லோர்! இவருக்குப் பின் பட்டமெய்தியவர் இவருடைய பெரிய தந்தையின் மகன் வரதுங்க பாண்டியராவார்.

## 2. நூலமைப்பும் சிறப்பும்

முன் நின்ற செய்யுளின் இறுதி எழுத்தாயினும், அசையாயினும், சீராயினும், அடியாயினும் பின்வரும் செய்யுளின் முதலாக வர, ஈறும் முதலும் மண்டலித்து முடியப் பாடும் ஒருவகைச் சிற்றிலக்கியமே 'அந்தாதி' எனப்படும். எனவே இதில் வந்துள்ள செய்யுட்களனைத்தும் அந்தாதியாகத் தொடர அமைந்துள்ளனவாதலின் 'அந்தாதி' என்னும் பெயரை இந்நூல் பெற்றது. அன்றியும், இந்த நூல் சந்த வேறு-பாட்டால் அறுசீர் ஆசிரிய விருத்தம், கலி விருத்தம், கொச்சகக் கலிப்பா, எழுசீர் ஆசிரிய விருத்தம், கலிநிலைத் துறை, எண்சீர் ஆசிரிய விருத்தம் முதலான பத்துவகைச் செய்யுளால் நூறு பாடல்கள் அந்தாதியாகத் தொடர அமைந்துள்ளது. அது பற்றியே 'பதிற்றுப்பத்தந்தாதி' (பத்து + இற்று + பத்து + அந்தம் + ஆதி) எனப்பட்டது.

'கருவை' என்பது 'கரிவலம் வந்த நல்லூர்' என்ற ஊர்ப் பெயரின் மரூஉ வாகும். இது, பாண்டிய நாட்டில், நெல்லை மாவட்டத்தில், சங்கரன் கோயிலுக்கு அருகே அமைந்துள்ளது. குலசேகர பாண்டியன் என்பான், ஒருகால் வேட்டையாடச் சென்ற போது, யானை ஒன்று எதிர்ப்பட்டது; அதனை அவன் துரத்த, அது மிகவும் அச்சங் கொண்டு, ஒரு புதரைச் சுற்றி வந்து, திடுமெனத் தன் உருமாறிச் சிவகணமாக நின்றது; அரசன் அப்புதரில் சிவலிங்கம் இருக்கக் கண்டு அதைப் பூசித்தான். அதனால் இவ்வூர் இப்பெயர் பெற்றது என்பர். 'கருவை' என்பதனுடன் 'திரு' என்னும் அடைமொழி சேர்ந்து 'திருக்கருவைப் பதிற்றுப் பத்தந்தாதி' என்னும் பெயர் இந்த நூலுக்கு அமைந்தது.

இவ்வூரில் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள சிவபெரு-மானின் திருப்பெயர்கள், பால்வண்ணநாதர், திருக்களாவீசர், முகலிங்கர் என்பனவாகும். படிகலிங்கமாதலின் பால்வண்ண நாதர் என்றும், களாமரநிழலில் அமர்ந்தவராதலின் திருக்-களாவீசர் என்றும், திருமுகம் இலங்கித் தோன்றும் இலிங்க வடிவமாதலின் முகலிங்கர் என்றும் பெயர்கள் வழங்கப் பெற்றன. அம்மையின் பெயர் 'ஒப்பிலம்பிகை' என்பதாகும்.

இத் 'திருக்கருவைப் பதிற்றுப் பத்தந்தாதி' காப்புச் செய்யுள் ஒன்று நீங்கலாக நூறு செய்யுட்களைக் கொண்டது.

'ஆன கருணைப் பதிற்றுப்பத் தந்தாதிச் சொல் அலங்கல் முற்றும்' என்று தொடங்கும் காப்புச் செய்யுளில் "திருமேனி முற்றும் ஞானவடிவாம் களவீசனது தாமரை மலர் போன்ற திருவடிமீது திருக்கருவைப் பதிற்றுப் பத்தந்தாதியான சொல்-மாலையைச் சாத்த, மதத்தை அருவிபோலச் சொரியும் நீண்ட துதிக்கையையும், அஞ்சாமையையும், சிறிய கண்களையும், புள்ளிவாய்ந்த முகத்தையும், வளைந்த இளமையான வெள்ளிய பிறை போன்ற தந்தங்களையுமுடைய குணவிநாயகருடைய திருவடிகளை வணங்குவோம்" என்று கூறப்பட்டுள்ளது. இதில், இறைவனது திருவடியைத் தாமரை மலர் என்றும், அந்தாதியைச் சொன்மாலை என்றும் ஆசிரியர் குறிப்பிடுவது கற்பார்க்கு இன்பந்தருவதாம்.

நூலின் தொடக்கச் செய்யுள் 'சீரார் கமலச் சேவடி' என்று தொடங்கி இறுதிச் செய்யுள் 'சீர்கள் போற்றியே' (100) என்று முடிந்து அந்தாதி இலக்கணத்திற்குப் பொருந்த வந்துள்ளன. தொடக்கத்தில் மங்கல மொழி கூறும் மரபுபற்றி இந்நூலாசிரியரும் 'சீர்' என்னும் செம்மொழியை அமைத்துள்ளார்!

"சீரார் கமலச் சேவடிஎன்
சிந்தை இருத்தி உனதுதிருப்
பேர்ஆ யிரமும் எடுத்தோதிப்
'பெம்மான்! கருவை எம்மான்'!என்(று)
ஆரா அமுதம் உண்டவர்போல்
அனந்தா னந்தத் தகம்நெகிழ
வாரா இன்பம் அறிவித்தாய்
அறியேன் இதற்கோர் வரலாறே" (1)

என்பதே அப்பாட்டு!

இறைவனின் தண்ணருளைப் பெற்ற அதிவீரராம பாண்டியர், 'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்' என்பதற்கேற்ப உலகத்தார் உய்யும் பொருட்டு இவ்வினிய நூலை யாத்தருளினார். மனமாகிய தாமரை மலரில் வீற்றிருப்-பவன் இறைவனாதலின் அவனைக் 'கமலச் சேவடி என் சிந்தை இருத்தி' என்றார். நாவினைப் பெற்ற பயன், இறைவனின் திருப்பெயரை இடைவிடாமல் ஓதுவதே என்பதை அறிவித்தற் பொருட்டுப் 'பேர் ஆயிரமும் எடுத்தோதி' என்றார். தாம்

பெற்ற இன்பம் எத்தகையது என்பதை எடுத்துக்காட்ட 'ஆரா அமுதம் உண்டவர்போல்' என்றார்; தன் அனுபவத்துட்படாத ஒன்றைப் பிறர் அறிவிக்க அறிந்து அனுபவித்தல் இயல்பாத-லின் 'ஆராவின்பம் அறிவித்தாய்' என்றார்;'பேரின்ப நிலையை எனக்கு நீ அறிவித்தது எனது முற்பவ நல்வினைப் பயனாலோ அன்றி நினது பேரருட் பெருக்கத்தாலோ அறியேன்' என்பார் 'வரலாறு அறியேன்' என்றார்.

பேரருட்டிறத்தினைத் தமக்குத் தந்தருளிய அவ்விறை-வனை அதிவீர ராமபாண்டியர், "அப்பன், ஐயன், ஆதி முதல்வன், இளநிலாப் பசுங்கொழுந்தணிந்த சோதி, ஈசன் உம்பர் நாயகன், ஒருதனி முதல்வன், எழிலார் களாவின் முதல்வன், ஞானத்துரு, கொவ்வை வாயுமை கொண்கன், பௌவ நஞ்சமுண்டவன், பிறையணிந்த சடிலன், கறை யிலங்கு மிடற்றன், பணராசச் சிலம்பணிந்த பழமறை, மழ-விடையான், வானவர்தம் கோமான், கும்பமுனிக் கருள் புரியுங் கொற்றவன், மூன்றுலகுந் தொழுதேத்தும் முகலிங்கன், கண்-ணகன் ஞாலம் போற்றும் களா நிழலமர்ந்து வாழும் அண்ணல், குழவி வெண்ணிலா வனைய வெண்ணகைக் கொடியிடத்து வாழ் குரிசில், பழைய தீவினைப் பகை தொலைத்திடும் பாவநாசன், செந்தமிழ்க் கழுமலப்பதிக் கவுணியன் புகழ்க் களவின் நீழலிற் கடவுள், காலகாலன், இமயமால் வரைக் குமரி ஒப்பனைக்கினிய காதலன், தீநிறச் செய்யன், கருணை-யங் கடற்கடவுள்'' எனப் பலவாறு போற்றிப் புகழ்கிறார்!

ஆதிசீர் பரவும் வாதவூரண்ணல் மலர் வாய்ப் பிறந்த வாசகத் தேனை ஒருகாற் பருகின், 'கருங்கல் மனமும் கரைந்-துகக் கண்கள் தொடுமணற் கேணியிற் சுரந்துநீர் பாய, மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி, அன்பராகுவர்'! அதுபோன்றே அதிவீர ராமபாண்டியர், அறிந்து, உணர்ந்து உணர்ந்து, நெகிழ்ந்து நெகிழ்ந்து, ஊற்றெழுங் கண்ணீரதனால் உடம்பு நனைந்து நனைந்து, 'பெம்மான்! கருவை எம்மான்!' என்று ஓராயிரந் தடவை ஓதிய இப்பதிற்றுப் பத்துச் செய்-யுட்களைப் பயில்வார் எவரும், எவ்வுயிர்க்கும் இரங்கும் எம் பெருமானுக்கு அடித் தொண்டராவர் என்பது உறுதி! அதனா-லன்றோ, ஆன்றோரனைவரும் இந்நூலைக் 'குட்டித் திருவாச-கம்' எனக் கூறிக் கும்பிடுகின்றனர்!

## 3. சொல் நயமும் பொருள் நயமும்

இவ் வந்தாதியுள் வரும் செய்யுட்கள் எளிமையுடையன-வாய், இறைவனின் ஈடிலாத் தன்மைகளை இயம்புவனவாய்க்-கல்லான நெஞ்சையுங் கரைந்துருகச் செய்வனாய்க் - கற்பனை நயமும் கருத்துச் செறிவும் நிறைந்தனவாய்ச் - சொல் நயமும் பொருள் நயமும் பெற்றனவாய்- உவமை முதலான அணி நலன்களைக் கொண்டனவாய்ப்- புராண நூற் கருத்துக்கள் பலவற்றை உரைப்பனவாய்ப் -பிற நூலாசிரியர் உரைகளோடு தொடர்புடையனவாய்க் காணப்படுகின்றன. நூலின் இடை-யிடையே செந்தமிழின் ஒப்பரிய சீர்மையும், கருவை மாநகரின் மாண்புறு மேன்மையும் கூறப்படுகின்றன. காட்டாகச் சில வற்றைக் கீழே காண்போம்:

அடியார் பொருட்டு ஆண்டவன் அடைந்த இன்னல்கள் எண்ணில! தொண்டர்தம் பெருமையைத் தொல்லுலக மக்கட்கு உணர்த்தற் பொருட்டு, அவன் செய்த திருவிளையாடல்கள் கணக்கில!

அவற்றுள் ஒன்று, சீர்த் தொண்டத் தொகை செய்த சுந்தரர் பொருட்டு, யாருமறியா நள்ளிரவில் பரவையாரிடம் தூது சென்றமை! சென்றவன் யாவன்?'தேவரும் சென்றிடந்தும் காண்பரிய முடியாதவன்; அண்ட கோளமும் அகிலலோகமும் மண்டு செந்தழல் வடிவமானவன்; முத்திக்கு வித்தானவன்; அடியார் சிந்தை முளரிக்கு அருக்கன்; மொழியெண் சித்திக்கு மூலமானவன்; தவயோகிகட்குத் தெளிகன்னல் ஊறும் அமிர்த மானவன்!' - இத்தகையான், சுந்தரர் பொருட்டுத் தூது சென்றானே? அது தகுமா? ஆம், தகும், தகும்! அவன்தான் 'பத்திக்கு இரங்கும் பரமன்தானே?' ஆனால் ஒரு விந்தை! ''பாடுதல் ஒன்றே புரிந்த சுந்தரர், பெண் மகள்பால் உன்னைத் தூது செல்ல ஏவினார்! அவருக்கு அருள் புரிந்தாய்! யானோ உன்னைப் பாடுவதோடு மட்டும் நிற்கவில்லை! துதிக்கின்றேன்; உன் திருவடிக்குத் தொண்டு பூண்டொழுகுகின்றேன்; உன்னை ஏவிப் பணிகொள்வேனல்லேன்; என் பாசத்தைப் போக்கி என்னை ஆட்கொள்ள வேண்டுகின்றேன். நீயோ எனக்கு அருள் செய்யாதிருக்கிறாய்! உன் பெருந்தகைமைக்கு இச்செயல் அழகாகுமோ?'' என்று வேண்டுகின்றார் அதிவீர ராமர்!

''நாதனே! கவிஞன் ஏவ நள்ளிருட் போதிற் சென்ற
தூதனே! இமயவல்லி துணைவனே! கருவை யானே!
போதநே யத்தி னால்நின் பொலன்கழற் றொண்டு பூண்டும்
ஏதம்நீ அகற்றி டாமல் இருப்பதும் இசைய தாமோ?'' (70)

ஒரு கவிஞன் ஏவல்வழி நின்று, ஒரு பெண்மகள்பால் தூது சென்றமையால் அவன் இறைமைக் குணம் பழுது படாதோ என்ற ஐயம் எழுமன்றோ? அவ் ஐயத்தைப் போக்கு-வான்வேண்டியே பாட்டின் தொடக்கத்தில் 'நாதனே' என்றார். அவ்வாறு தூது சென்றதும் தன்னோடு பிரிவற நிற்கும் தேவியின் பெருந்தகைமையால் என்பது தோன்றத் தூத னென்றதையடுத்து 'இமயவல்லி துணைவனே' என்றார். அன்பினில் விளைந்த ஆரமுதாக விளங்கும் ஆண்டவனை, அவ்வன்பின் துணை கொண்டே வழிபடல் வேண்டும் என்பதை அறிவித்தற்பொருட்டுப் 'போத நேயத்தினால்' என்றார். தன்க்குவமையில்லாத் தன்மையனான இறைவனின் திருவடிக் கமலங்களை வழிபடுவார்க்கு மனக்கவலை இல்லை, அங்ஙன மிருக்க நானும் அவன் கழல் பணிந்தும் ஏதம் அகற்றாமல் இருப்பது அவனது பெருந்தன்மைக்கு அழகன்று என்பதை விளக்க 'ஏதம் நீ அகற்றிடாமல் இருப்பதும் இசைய தாமோ?' என்றார் ''நாதனே, தூதனே, துணைவனே!'' என்று அவர் கருவையம்பதிக் கடவுளை அழைப்பது நம் காதிலும் கேட்கத்-தான் செய்கின்றது. இவ்வாறு சொல் நயமும் பொருள் நயமும் இப்பாடலின்கண் ஒன்றையொன்று பின்னிச் செல்லும் பான்மை, கற்றோர்க்குக் கவின் விருந்து!

## 4. சிவன் சீர்மை

திருக்கருவையில் எழுந்தருளியுள்ள சிவபெருமானின் சீர்மைகளைச் சிந்தை குளிரச் செந்தமிழ்ப் பாக்களில் பாடிப் பரவுகின்றார் பாண்டியனார்.

''அருட் கண்ணால் அடிமைகொண்ட அறிவாசிரியன், அல்லல் தரும் பிறவியை வேரோடு அறுப்பவன், அடியவர் விரும்பும் பதவி தருபவன், வெளிவீட்டின்பம் அளிப்பவன், தூண்டாத மணிவிளக்கு, படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முததொழில் புரியும் மூத்தோன், காணுதற்கு அரிய பேரொளி (7), பாம்பணியை அணிந்த திருமார்பினை உடைய-வன், உமையம்மையாகிய ஒப்பனாம்பிகையின் இடப்புறத்தே

பொருந்தியவன், பிரம கபாலங்களால் தொடுத்த மாலை-யுடையவன், புரியைப் போன்ற சடையை உடையவன், செம்மை சான்ற வாயினை உடையவன், கறைமிடற்றை உடையவன், அடியார்க்கு அடைக்கலம் அருளும் திருக்கர-முடையவன், தாமரை மலர் போன்ற திருவடி உடையவன், திருக் கருவையில் உள்ள இறையவன் (9) அகக்கண்ணினின்றும் நீங்காத ஞானச் செல்வன், அழகு நிறைந்த களாவின் நிழலில் அமர்ந்த முதல்வன், வன்கண்ணர் நெஞ்சில் குடியேறுதல் சிறிது முணராத தலைவன், அடியார் மனக்குற்றத்தை ஒழிக்கும் பெருமான், பிறவித் துன்பத்தைப் போக்கி அடியார்களைப் பேரின்ப வீட்டில் குடியேற்றும் இறைவன் (56), அடியவர் செய்யும் தவமும் அத் தவத்தால் வரும் பயனும் ஆகிய பரமன், எல்லா உலகங்களும் அவனே, அவ் வுலகங்களிலுள்ள உயிர்க் கூட்டங்களும் அவனே, அவ் வுயிர்க்கூட்டங்கள் நுகரும் போகங் களும் அவனே, நாள் முதலாக வரும் கால தத்துவங்களும் அவனே (57),'' — இவ்வாறு சொல்லு மிடமெல்லாம் சிவனின் சீர்மைகளைச் செப்புகின்றார் அதிவீர ராமர்.

இத்தகு சிவனின் திருவருளைத் தாம் பெற்ற தன்மை-களைப் பல பாக்களில் விதந்தோதுகின்றார். ''உடல்உள்-ளளவும் உடனிருந்து உடலையும் உணர்வையும் அழிக்கும் இயல்புடையது 'காமம்'. எனவே அது 'ஆறாக் கொடிய கனல்' ஆகும். அக் கனலை வளர்ப்பவை, சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐம்புலன்களேயாம். 'சார்ந்ததன் வண்ணம்' என்பதற்கேற்ப இப்புலன்களால் என் மனம் கேடுற்று நீறாய் வெந்துகிடந்தது. ஆனால் உன் திருவருள் எனக்குத் துணை செய்ய, உன்னைத் துதிக்க, என் மனம் துணிந்தது. உன-தருளாலே உன்தாள் வழுத்தும் வரத்தை இப்போது பெற்று-விட்டேன்!'' (2).

''திருக் கருவை வாழும் முன்னோனே! பொய்யான இவ்வுடலை எடுத்தேன்; நல்ல நாட்கள் யாவும் வீணே கழிய நடித்தேன்; இளமைப் பருவங் கழிந்த இக்காலத்தில்தான், உன் திருப்பெயர்களை ஓதினேன்; அவ்வாறு ஓதுதல் ஒன்றி னாலேயே எனது பழவினையின் தொடர்பை விலக்கினேன்; நெடுங்கடலைப் பெரும்புணை கொண்டன்றிக் கடத்தல் ஆகா தாகலின், பெரும் பிறவிக் கடல் கடக்க நினதடியினும் பெரிய புணை வேறில்லை யென்றறிந்து உன் திருவடிகளை ஒரு

தெப்பமாகக் கொண்டேன்; இவ்வாறு என் உள்ளக் கருத்-தனைத்தையும் நிறைவேற்றிக் கொண்டேன். இனி எனக்-கென்ன குறை''? (5)

''களாநீழல் இருந்த கோவே! அவா என்னும் பாரையால் வினை என்னும் நிலத்தைத் தோண்ட உண்டாகும் குழியே பிறவிக் குழியாகும். தான் தோண்டிய குழியில் தானே விழுதல் போலத் தனது வினைப் பிறவிக் குழியில் தானே விழ, அறியாமை என்ற மண் தன் மீது சரிந்து விழுந்து தன்னை ஆணவம் என்ற அதிகாரத்துக்குள்ளாக்கும். அவ்வந்தகாரத்-தால் மீளும் வழி அறியாது துன்புற்றுத் தடுமாறும். இத்தகு துன்பத்தில் உழலும் என்னை, உன்னை நினைந்துய்யுமாறு ஏவினாய்! நீயே உண்மையான கருணையங் கடல்! என் உயிர்க்கு உற்ற பெருந்துணை! உன்னையன்றி வேறொரு தெய்வத்தைக் கனவிலும் காணவோ கருதவோ செய்யேன்?''(3

''தேவனே! உன்னையல்லாமல் பிறிதொரு பாவனை பற்றுதலும் இல்லேன்! அதனாலன்றோ, உன் தன்மையனைத்-தையும் நீயே உணர்த்த யான் உணர்ந்தேன்! என் உள்ளத்தே உன்னைக் கண்டுகொண்டேன்! இத் திருக் காட்சியன்றி வே-றொரு காட்சியுமுளதோ?'' (64)

''கருவை மாநகரில் வாழ்பவனே! எந்நாளும், அமரரும் முனிவரும் உன்னைக் கண்டறிகிலார்; நாயிற் கடையாய்க் கிடந்த அடியேன், உன்னைக் கடல் சூழ்ந்த உலகமுற்றுந் தேடினேன்; காணவில்லை; நீயோ களாநிழலில் இருக்கின்றாய்; இப்போது கணடுகொண்டேன்''! (65)

''கடைத்தேற ஒரு பற்றுக் கோட்டை நாடி, உலகில் வழங்கும் புறச் சமயங்களென்னும் கொடிய கடலில் வீழ்ந்து அழுந்தி, கொடிய துன்பத்தில் வருந்துகின்ற எனக்கு. உமை யம்மையை இடப்பாகத்தில் வைத்துத் தமிழ் வழங்கும் திருக் கருவைப் பதியில் வாழும் இறைவன் எழுந்தருளிவந்து என்னை அடிமைகொண்ட செய்தி, நினைக்குந் தோறும் நினைக்குந் தோறும் நனிபெரு வியப்பை விளைக்கும் வகையதாம்!'' (68)

''புகலிடம் என்று உலகு துதிக்கக் களாநிழலில் எழுந்-தருளியுள்ள இறைவன் என் மனத்தில் வியப்பினைக் காட்டி-னான்; உள்ளும் புறமும் தானாகவே நிற்கும் நிலைமையைக்

காட்டினான்; கவியால் துதிசெய்ய நாவைக் காட்டினான்; இடையறாத அன்பைக் காட்டினான்; மனத்தில் களிப்பையுங் காட்டினான்; இம்மட்டோடுமட்டும் நின்றானில்லை, என்னை அடிமையாகவும் ஆட்கொண்டான்!'' (69)

— இவ்வாறு தம்மை ஆட்கொண்ட ஆண்டவ னருட்டிறத்தை வியந்து பல பாக்களில் பாடுகின்றார் அதிவீர ராமர்!

5. யானுணரும் தரத்ததோ?

ஆணவத்தின் வலியைக் கெடுத்து ஆன்மாவை இறைவனடியிற் சேர்த்தற்குக் கருவியாக இறைவனால் கொடுக்கப்பட்டதே இந்த உடம்பு; இதைப் பெற்றதொன்றே மனிதர்மாட்டு இறைவன் வைத்திருக்கும் அருட்பெருக்கைப் புலப்படுத்தப் போகிய சான்றாம். இவ்வரிய அருளைப் பெற்றிருந்தும், பெறாதார் போல ஏம் நோதல் எத்தன்மைத்து? தாம் விரும்பியன முன்னமே கிடைத்துவிட்ட பொருளாகக் கையில் இருக்க அதனை அறியாமல் 'விரும்பியன கிடைக்கவில்லையே' என்று மனந்தளர்ந்து வருந்தும் மக்களைப் போலல்லவா இச்செயல் உள்ளது? இதுவும் ஒரு மாயந்தான் போலும்!

''கிடைத்தபொருள் கரத்திருக்கக்
கிடைத்திலவென் றயர்வர்போல்
படைத்தநின தருள்பெற்றும்
பெற்றிலர்போற் பரிவுற்றேன்!
முடைத்தலையிற் பலிகொள்ளும்
முகலிங்கா முகிழ்த்தநிலாச்
சடைத்தலையாய் நின்மாயம்
யானுணருந் தரத்ததோ?'' (41)

6. சிந்தை உன்பாலதாமே!

''பெற்ற அன்னையுங்கூட அழுத மகவுக்கே அமுதூட்டுவள். அதுபோல, இறைவனே, நின் திருவடிஞானத்தை விரும்பினார்க்கே நீயும் அதனை அருள்வை! யானோ, நின்னை விரும்பிலேன்; மாறாகப் பொருளே பெரிதெனப் போற்றினேன்; நிலமே உயர்ந்ததெனக் கொண்டேன்; பூவையர்தம் புணர்கலவியே புவியிற் சிறந்ததெனப் பூரிப்படைந்தேன்; இவற்றால் உண்டானது துன்பமே யன்றி இன்பமன்று! அதனால் மனவலி

கெட்டுச் சோர்வுற்றேன். இத்தகு இழிந்த நாயினுக்கு நின்னருள் கிட்டுமாறு யாங்ஙனம்? எனக்கு உய்யும் வழிதான் கிட்டுமோ? (49)

''நன்று இது. தீது இது என்பன அறியேன். ஒருகால் அறிந்தாலும் தீதினை நீக்காது அதனையே செய்யும் பாவ-முடையேன்; அப்பாவத் தொழிலன்றி வேறு சிறிதும் செய்யேன்; ஆடவரை மயக்கித் தம் வலையிற் சிக்குவிப்பதே தம் பெரு நோக்கமாகக் கொண்டு, தம்மை நறுமலர் முதலியவற்றால் ஒப்பனை செய்துகொள்ளும் பொதுமகளிரிடத்து மிகவும் விருப்பங் கொண்டேன்; அதனால் பெரிதும் மெலிவுற்றேன்! அங்ஙனமிருந்தும், தெளிவுறா நெஞ்சத்தைத் தெருட்டி நின் நிலையை எனக்குக் காட்டினாய்; அருளினால் என்னை ஆண்டாய்! உண்மை அருட்குன்று நீயே! உருகாதிருக்கும் என் உளத்தை உருக்கினாய்! உன் திருவடியைப் பாடவைத்-தாய்! இத் திருக்கதையினை உரையால் உரைக்க முடியாது! (60)

''ஓரிடத்தே அமர்ந்து இறைவனைச் சிந்தித்தலினும் நின்று கொண்டு சிந்தித்தல் அரிது; அதனினும் அரிது படுக்கையிற் கிடந்து சிந்தித்தல்; அதனினும் அரிது, நடந்து கொண்டு சிந்திந்தல்; அதனினும் அரிது. சுவைப் புலன் வழியே மனத்தைச் செலுத்தி உணவு கொள்ளும் போது சிந்தித்தல்; அதனினும் அரிது, ஐம்புலனையும் காம நுகர்ச்சியிற் செலுத்தி மனமழிந்து நிற்கும்போது இறைவனைச் சிந்தித்தல்! யானோ இவ்வெல்லாக் காலத்தும் நின்னையே என் சிந்தையில் வைத்தேன்! எனவே என் சிந்தை உன்-பாலதே!''

''இருக்கினும் நிற்கும் போதும் இரவுகண் துயிலும் போதும்
பொருக்கென நடக்கும் போதும் பொருந்தியே துய்க்கும் போதும்
முருக்கிதழ்க் கனிவா யாரை முயங்கிநெஞ் சழியும் போதும்
திருக்களா வுடைய நம்பா! சிந்தையுன் பால தாமே!'' (62)

## 7. கொடுத்ததும் கொண்டதும்

யாரேதுமொருவர் யாதானுமொரு பொருளை விரும்-பினால், அவர்க்கு அதனைக் கொடுத்து அதற்கு ஈடாகத் தாம் விரும்பும் பொருளைப் பெறுவர். இஃது இவ்வுலகத்-

தியல்பு! அங்ஙனம் கொடுத்து வாங்குங்கால், உயர்ந்த பொருட்கு மாறாகத் தாழ்ந்த பொருளைப் பெறுதலுமுண்டு; தாழ்த்த பொருட்கு மாறாக உயர்ந்த பொளைப் பெறுதலு முண்டு. அஃது அவரவர் தன்மைக்கு ஏற்ப அமையும். அதிவீரராம பாண்டியரோ இழிந்தவற்றை இறைவனிடத்தே கொடுத்து உயர்ந்தவற்றை அவன்பாற் பெற்றதாகக் கூறுகின்றார்.

> ''சிந்தனை உனக்குத் தந்தேன், திருவருள் எனக்குத் தந்தாய்;
> வந்தனை உனக்குத் தந்தேன், மலரடி எனக்குத் தந்தாய்;
> பைந்துணர் உனக்குத் தந்தேன், பரகதி எனக்குத் தந்தாய்;
> கந்தனைப் பயந்த நாதா! கருவையி லிருக்குந் தேவே!'' (63)

''முருகக் கடவுளைத் தந்தருளிய தலைவா! திருக் கருவையில் எழுந்தருளியுள்ள தேவனே! என் மனத்தை உனக்குக் கொடுத்தேன்; நீயோ உன் திருவருளினை எனக்குத் தந்தாய்; வணக்கத்தை உனக்குத் தந்தேன்; நீயோ தாமரை மலர் போன்ற திருவடியை எனக்குத் தந்தாய்; பசுமையான பூங்கொத்தை உனக்குத் தந்தேன்; நீயோ முத்தியை எனக்குத் தந்தருளினாய்'' என்பது இதன் பொருள்.

தெய்வம் ஒன்று உண்டு என்று உணர்ந்து சிந்திக்கு மளவும் திருவருள் வெளிப்பட்டுத் தோன்றாதாதலின் 'சிந்தனை உனக்குத் தந்தேன், திருவருள் எனக்குத் தந்தாய்' என்றார். அவனை வணங்குவதற்கும் அவன் அருளே காரண-மாதலினாலும், அடியார் வணங்குதற்கு உரியது இறைவன் திருவடியே யாதலினாலும் திருவருள் பெற்றமை கூறியபின் 'வந்தனை உனக்குத் தந்தேன்' 'மலரடி எனக்குத் தந்தாய்' என்றார். இறைவன் திருவடிக்கு அடியார் செய்யத் தக்கது வழிபாடேயாதலாலும் அடியார் விழையும் முத்திப் பேறு இறைவன் திருவடியிற் கலத்தலே யாதலாலும், திருவடி பெற்றமை கூறியபின் 'பைந்துணர் உனக்குத் தந்தேன் பரகதி எனக்குத் தந்தாய' என்றார். சிந்தனையாவது உள் நினைத்தல்; வந்தனையாவது வணக்கம்; அடிக்கு மலரிடுதல் வழிபாடு; ஆதலின், உள் நினைத்தலால் திருவருளும், வணக்-கத்தால் திருவடிப்பேறும், வழிபாட்டால் முத்தியும் சித்திக்கும் என்றார்!

## 8. நெஞ்சமே கேள்!

உலக மக்கள் உய்வதற்கு உரிய வழியினை உரைக்க வந்த அதிவீரராமர், தம் நெஞ்சுக்குக் கூறுவது போல் சில செய்திகளைச் செப்புகின்றார்:

''ஏ நெஞ்சமே! யான் சொல்லுவன சிறிதுகேள். நீயோ, வாட்டத்துடனும் சோர்வுடனும் காணப்படுகின்றாய்! இவ்விரண்டும் நீங்க வேண்டுமா? நீண்ட சிவந்த சடையினையுடைய இறைவனது வற்றாத பெரிய அருளாகிய அருவியில் நன்றாக நீராடு; அப்போது, நீ வாடுதற்கும் சோர்தற்கும் காரணமான துன்பத்தை அவன் போக்கி அருள் செய்வான்! (74)

''கலங்கும் நெஞ்சமே! நீ துன்பம் அடையா வண்ணம் செய்தி ஒன்று சொல்வேன்! வளம் அமைந்த செந்தமிழ் வழங்கும் திருக்கருவை என்னும் அழகிய பெரிய திருப்பதியில் எழுந்தருளி விளங்கும் பால்பேன்ற வெள்ளிய நிறம் வாய்ந்த திருமேனியை உடைய சிவபெருமானின் திருவடிகளை வணங்கு! அப்போது, அளந்து காண்பதற்கு அரிய துறக்க வாழ்வினை இப்பிறவியிலேயே தந்தருள்வான்.''

''துளங்கு நெஞ்சமே! துயருறா வகையொன்று சொல்வேன்
வளங்கொள் செந்தமிழ்க் கருவையம் பெரும்பதி மருவி
விளங்கு பானிற மேனியன் திருவடி தொழுதால்
அளந்து காண்பருந் துறக்கவாழ் விம்மையின் அளிப்பான்''(81)

## 9. துறவு எதற்கு?

இறைவன் திருவருட் பேற்றினை யடைவதற்குத் துறவு ஒன்றே சிறந்தது என்பர் சிலர். ஆனால் அத்துறவும் உண்மைத் துறவாயமைதல் வேண்டும்; புறத்துறவால் பயன் ஏதுமில்லை! ஈசனடிக்கு அன்பு எதுவுமின்றி, மனைவாழ்வைத் துறந்து வனம் புகுதலாற் பயன் சிறிதுமில்லை! அவனடியைப் பற்றின் அவனருள் தானாகவே தோன்றும்; தோன்றின் அதுவே பிற பற்றுக்களை அறுக்கும்; பிறவியை மாய்க்கும்; பேரின்பப் பெருவாழ்வினை நல்கும்! ஆதலின் 'ஈசனென்று அறையும் முன்னமே அனைத்தும் எய்தும்!' - இவ்வுயரிய கருத்தினை நான்கடிப் பாடலுள் நயம்பட மொழிகின்றார் பாண்டியனார்!

''பிறவி மாயவும் அருள்பெ ருக்கவும்
துறவி யாய்வனம் துன்னல் வேண்டுமோ?
இறைவன் எம்பிரான் களவில் ஈசனென்(று)
அறையும் முன்னமே அனைத்தும் எய்துமே!'' (77)

10. வேண்டுவது ஒன்று!

நற்றமிழால் நம்பெருமானை நாவாரப் புகழ்ந்து பா-மாலை சூட்டிய பாண்டியனார், தம் விருப்பத்தினையும் வெளியிடாமல் விட்டாரில்லை!

''மலவிருளை யோட்டும் தூண்டாத மணிவிளக்கே! களா நிழல் அமர்ந்த சோதியே! கருவை நாயகனே! ஒரு பற்றுக் கோடுமில்லாத அடியேன் நின்பால் வேண்டுவதொன்று உண்டு! அது யாது என்னில், எப்பிறவி பெற்றாலும், வெந்-தழல் நரகிடை நுழைந்தாலும், அரம்பையர் சூழக் கற்பக நிழலில் நின்றாலும் உன் திருவடிக் கமலத்தின் கீழ் வைக்கும் அன்பென்று சொல்லப்பட்ட அழிவில்லாத பொருள் ஒன்றே-யாகும்! (12)

''பாம்பினைத் தரித்த பால் வண்ணனே! யான், நரகில் வீழ்ந்து வருந்தினாலும் உன்னிடத்தே இடையறாத பத்தி செய்திருத்தல் என்ற ஒன்றே வேண்டுவன்! அஃது அல்லாமல். வீடு பேற்றையும் விரும்பிலன்; துறக்கமும் விரும்பிலன்; முனிவ-ரால் எய்தப்படும் எண்வகைச் சித்திப் பேற்றையும் விரும்பிலன்; திக்குப் பாலகர்க்குரிய சிறப்புக்களையும் விரும்பிலன்!''

''உத்தி வாளரா முடித்தபால் வண்ணனே! உனது
பத்தி வேண்டுவ தன்றியே நரகிடைப் படினும்
முத்தி வேண்டிலேன்; துறக்கமும் வேண்டிலேன் முனிவர்
சித்தி வேண்டிலேன்; வேண்டிலேன் திசாதிபர் சிறப்பே'' (88)

11. வம்மின்காள்!

'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்பதற்-கேற்ப இறைவன் இன்னருள் பெற்ற அதிவீரராமர், அவ்-வருளை மாந்தரனைவரும் பெறல் வேண்டுமென விரும்புகிறார்! அதனால் 'வம்மின்காள் நமரங்காள்!' என நம்மவரை அழைக்-கின்றார். அவரழைக்கும் குரல் கேண்மின்!

''கோமானே! கருவைவரும் குணக்குன்றே மலரிதழித்
தேமாலை புனைந்தசடைச் செழுஞ்சுடரே! என்றென்று
பாமாலை வாய்பாடிக் கைகொட்டிப் பதம்பெயர்த்து
நாமாட வம்மின்காள்! தொண்டராய் நமரங்காள்!''
(44)

'பாமாலை பாட வேண்டும்; கைகொட்டி ஆடவேண்டும்!' என்று அழைக்கும் அதிவீரராமர், அதனாலுண்டாகும் பயன்களைக் கூறாமல் விடுவரோ? அவற்றையும் அழகுறக் கூறிவிடுகின்றார் :

''திருக்கருவை மேவிய சிவனின் புகழைப் பாடினால், அது, செல்வந் தரும்; திருவினைத் தரும்; அசைவிலாத சிவஞானந் தரும்: இசையினைத் தரும்; முத்தியினையுந் தரும். (71)

''முகலிங்கப் பெருமானுடைய திருநடனஞ் செய்த திருவடிகளையும் விளக்கும் அழகிய முறுவலையும், வியர்வை அரும்பும் திருமுகத்தையும், மேலேறும் திருப்புருவங்களையும் அருள்கனியும் திருக்கண்களையும், குளிர்ந்த இளம் பிறை வேணியையும், மழுமான் இவற்றை எந்திய திருக்கரங்களையும் கண்டால், இப்புவியிடை மீண்டும் பிறவார்!'' (84)

-இவ்வாறு. இறைவனைப் பாடுவதால், காண்பதால் உண்டாகும் நன்மைகளை மட்டும் கூறி அமைந்தாரிலர் அதிவீரராமர்! இதற்கு முன்னர் இத்தகு பயன் பெற்றோர் இன்னாரின்னாரெனச் சான்றும் காட்டுகின்றார்!

''முறைகள் புகழும் திருக்களா நீழலில் எழுந்தருளியிருக்குந் இறைவனது தாமரை மலர் போன்ற திருவடியை வணங்கித் திருத்தொண்டு செய்து பூசித்து, முன்பு பயன்களைப் பெற்றவர்கள். அமரர்க்குத் தலைவனாகிய இந்திரனும், நான்கு முகங்களையுடைய பிரமனும் ஆகிய இவர்களாவர்! அவ்வாறாயின் இறைவனது திருவடிப் புகழைப் பேசுதற்கு வலியற்றமனிதர்க்கு இயலுமா? எண்ணிப் பாருங்கள்!'' (45)

இவையெல்லாம் உள்ளத்துட் கொண்டுதான் 'வம்மின்காள்!' என வாய்குளிர, மனங்குளிர அழைக்கின்றார் பாண்டியனார்!

## 12. செந்தமிழ்த் தொண்டர்

எம்பெருமானின் ஈடிலாப் புகழை இயம்ப வந்த அதிவீரராமர், எத்திக்கும் புகழும் தித்திக்கும் செந்தமிழை

கன்னித்தமிழைச் சிறிதும் மறந்தாரிலர்! செல்லுமிடமெல்லாம் செம்மைத் தமிழ்மொழியின் சீர்மையினைச் செப்புகின்றார்!

கருவையம்பதியைக் கூறுமிடமனைத்தும் 'தமிழ்க் கருவை' என அடைமொழி தந்தே பாடிச் செல்கின்றார். சான்றாக ஒன்று காண்போம்:

''உள்ள தில்லதென் றுரைத்திடும் பொருளையுய்த் துணராக்
கள்ளர் நாவினில் இருத்திடாக் களாநறுங் கனியைத்
தெள்ளு செந்தமிழ்க் கருவையிற் சினகரம் புகுந்து
மெள்ள நான்சென்று காண்டலும் தீர்ந்தது விடாயே!'' (86)

தெளிவும் செம்மையும் வாய்ந்த தமிழைத் 'தெள்ளு செந்தமிழ்' எனச் சிறப்பித்தார் ''ஆரியம்போல், முப்ப-தெழுத்துக்களை ஐம்பத்து மூன்றாக விரித்தலும், ஒருமை பன்மைகளை ஒருமை இருமை பன்மையென விகற்பித்தலும், உவமை ஒன்றினையே எண்ணிறந்தனவாகப் பெருக்கலும் முதலாயின செய்யாது வரையறைப்படும் இலக்கணமே கொண்டதாகலின் 'தெள்ளு தமிழ்' எனவும், உயர்திணை அஃறிணை என்ற பாகுபாடும், வினையாற்றிணைபாலாதிய உணர்த்தலும், அகம்புறம் என்ற பொருட்பாகுபாடும், இவை போல்வன பிறவும் கொண்டு முற்ற முடிந்த இலக்கணமுடை-யதாதலின் 'செந்தமிழ்' எனவும் கூறினார்!'' - இவ்வாறு இவ் அந்தாதி நூலுக்கு உரை எழுதிய, நாகை தண்டபாணிப்பிள்ளை கூறும் நயம் உன்னற்பாலது!

மேலும், தென்பொதிய மலையிற்றங்கிய தமிழ்முனிவராம் அகத்தியரிடத்தும், சைவசமய குரவர் நால்வரிடத்தும் ஆராக் காதலுடையவர் அதிவீரராமர் என்பதை அவர்தம் பாக்கள் விளக்குகின்றன.

இறைவன் திருவிளையாடலைப் பற்றிக் கூற வந்த ஆசிரியர், ,'தென்புலச் சந்தமால்வரைத் தமிழ்முனிக்கு உமை தனை மணந்த மெய்க்கோலங் காட்டினாய்'' (95) என்று தமிழ்-முனிவரைக் குறிப்பிடுகின்றார். ''செந்தமிழ்க் கழுமலப் பதிக் கவுணியன்புகழ் களவின் நீழலிற் கடவுள் போற்றியே'' (92) எனத் திருஞானசம்பந்தரைக் குறிப்பிடுகின்றார். ''காதல் நண்புடைக் கவிஞன்'' எனச் சுந்தரரைக் குறிப்பிடுகின்றார். நாவுக்கரசரும், மணிவாசகரும் கையாண்ட தொடர்களையும், கருத்துக்களையும் நூலின் பலவிடங்களிலும் கையாண்டு செல-

கின்றார். எனவே, இவரைச் 'செந்தமிழ்த் தொண்டர்' எனச் செப்புவதில் குறைவேதுமில்லை.

13. புராணக் கருத்து

இந் நூலின் இடையிடையே, புராணக் கருத்துக்கள் பல காணக் கிடக்கின்றன. சிலபட்டும் ஈண்டுக் காண்போம் :

பிருங்கி முனிவர் என்பார், நாடோறும் சிவபெருமானை வலம்வந்து வழிபட்டு வந்தார். அங்ஙனம் வழிபடுபவர், உமா-தேவியை நீக்கிச் சிவபெருமானை மட்டுமே வலம் வந்ததனைக் கண்ட தேவியார், இறைவனிடம், முனிவர், தம்மை வலம் வராமையின் காரணம் யாதென வினவினார். அதற்குச் சிவபெருமான் ''இட்ட சித்தி பெற விரும்புவோர், உன்னை வலம் வருவர்; முத்தி பெற விரும்புவோர், என்னை வலம் வருவர்'' என்றார். அதுகேட்ட தேவியார், சிவபெருமானை என்றும் பிரியாதிருக்கத் தவஞ்செய்தார். அத் தவத்திற்கு இரங்கிய சிவபெருமான், தம் இடப்பாகத்தைத் தேவிக்கு அளித்தார்.

இக் கருத்தை, ''ஒப்பனை மைப்பரந் தெறிக்கும், விழி-யினா ளுருகு, ஒருபுறம் அளித்த விமலனே'' (13) என்ற தொடர் காட்டுகின்றது.

ஒருகால், பிரமன், தானே முதற்கடவுள் என்று பெருமை கொள்ள, அதனை அடக்க உளங்கொண்ட சிவபெருமான், பிரமன்முன் தோன்றினர். அப்பொழுதும் பிரமன், 'அவரே தனிமுதல்வர்' என்பதை உணராது, அவரை இகழ, அவர், தம் அமிசமாகிய வைரவக் கடவுளை நோக்கினர் அவ்வளவில் வைரவர், பிரமனது ஐந்து தலைகளில், நடுவண் அமைந்த தலையைத் தம் இடக்கை விரலாற் கொய்தனர். கொய்த தலை, அவர் விரலோடு ஒட்டிக் கொண்டது. அப்பொழுது சிவபெரு-மான், அறத்தினை உலகினர் அறிந்து நடக்கத் தாமே அதை நடாத்திக் காட்டத் திருவுளங்கொண்டு, வைரவரை நோக்கி, ''இப் பாவந் தொலையப் பிச்சையெடுத்தல் வேண்டும்'' என்று கூற, அவரும் அங்ஙனமே, அப் பிரம கபாலத்தில் பிச்சை எடுத்தனர். இச் செய்தி,

''முடைத்தலையிற் பலிகொள்ளும் முகலிங்கா'' (41) என்ற தொடர் குறிப்பிடுகிறது.

முன்னம் ஒரு யானை, சீகாளத்தியில் பொன்முகலி யாற்றில் நாள்தோறும் நீராடித் துதிக்கையில் நீர் கொண்டு வந்து சிவபெருமான் திருமுடிமேற் சொரிந்து வழிபாடு செய்து-வந்தது. சிவபெருமான், அவ் யானை முன்பொருகால் கைலையில் தம் தேவியாரது கடுஞ் சொல்லால் யானை யுருக் கொண்ட 'அத்தி' என்னும் கணநாதன் என்பதுணர்ந்து, தேவியோடு காளைஊர்தியில் எழுந்தருளி, அவ் யானைக்குக் காட்சி தந்து முத்தியும் அளித்தருளினார். இஃது 'அத்திக்கு முன்னம் வரயேயளித்த சருவேச' (54) என்ற தொடரால் அறிய முடிகிறது.

இவையேயன்றி, குமரப் பெருமான் சூரனைக் கொன்-றமை, சிவபெருமான் முப்புரமெரித்தமை, காலனைக்காலால் உதைத்தமை, பௌவ நஞ்சினை உண்டமை, தக்கனால் கேடுற்ற நிலாவுக்கு அருள் காட்டியமை, கடவாரணத்தின் உரி-போர்வை கொண்டமை, கவிஞன் ஏவ நள்ளிருட்போதிற் றூது சென்றமை முதலியனவும் இந்நூலில் குறிக்கப்படுகின்றன.

## 14. ஒப்புமைப் பகுதி

மணிவாசகனாரின் திருவாசகத்தோடு இக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி பல்லாற்றானும் ஒத்து விளங்கும் பான்மை யினைப் பலவிடங்களிலும் கண்டு களிக்கலாம்.

''நடித்தேன் பொய்க்கூடெடுத் தவமே நன்னாள் கழிய'' (5) என்று அதிவீரராமர் கூறுவது, மணிவாசகனாரின் 'நாடகத் தால் உன்னடியார் போல் நடித்து' என்ற தொடரினை நினைவு படுத்துகின்றது. கருவையில் வாழும் இறைவனை 'முன்னோன்' என்று கூறுவது, மணிவாசகனாரின் 'முன்னைப் பழம் பொருட்கு முன்னைப்பழம் பொருளே' என்ற தொடரை நினைவு படுத்துகின்றது. 'வெந்தழல் நரகிடை விழினும் ... திருவடிக் கமலத்து அன்பெனும் அழிவிலாப் பொருளே' (12); 'மறைவாய் உய்த் துணரார்க்கு மறைபயிலுங் கருவையில் வாழ் இறைவா'; (50) 'பிறந்தயாக்கைகள் அளப்பில' 'கறிந்த பால் நிறவண்ணனைக் கருத்துற இருத்திச் சிறந்தயாக்கையீது' (85) முதலான தொடர்கள் முறையே பின்வரும் மணிவாசகர் திருவாக்குடன் ஒப்புநோக்கத்தக்கன: 'எரிவாய் நரகம்புகினும் எள்ளேன் திருவருளாலே இருக்கப் பெறினே', 'புறத்தார்க்குச் சேயோன்' 'புல்லாகிப் பூடாகிப் புழுவாய் ... எல்லாப் பிறப்பும்,' 'கறந்தபால் கன்னலொடு நெய் கலந்தாற் போலச் சிறந்தடியா ருள்ளத்தில் தேனூறி நின்று''.

திருவாசகத்தைப் போல நெஞ்சை உருக்குந் தன்மையினாலும், வாசகத் தொடர்களையும், கருத்துக்களையும் தன்பாற் கொண்டமையாலும், மணிவாசகர் தம் பட்டறிவனைத்தும் திரட்டித் திருவாசகத்துள் பெய்தமை போல, அதிவீரராமபாண்டியரும் தம் பட்டறிவினை இவ்வந்தாதி நூலுள் காட்டியமையாலும் இந்நூலுக்குக் 'குட்டித் திருவாசகம்' என்னும் பெயர் அமைந்தது எனக் கொள்ளலாம்!

> ''சிறக்கத் தக்கது கருவையான் திருவடி நேயம்
> மறக்கத் தக்கது மற்றுள சமயத்தின் மயக்கம்
> துறக்கத் தக்கது இவ்வுடம்பையான் என்றுறு தொடர்பு
> பிறக்கத் தக்கது சிவானந்த வாரியின் பெருக்கே''
> (89)

என்று அதிவீரராமர் பாடுவது, 'ஓடக் காண்பது பூம்புனல் வெள்ளம், ஒடுங்கக் காண்பது யோகியர் உள்ளம்' எனத் திரிகூடராசப்பக் கவிராயர் பாடுவதை நினைவூட்டுகிறது.

'தொண்டு செய்து வழிபட்டு' (45) என்ற பாடற் கருத்துப் பரஞ்சோதியாரின் 'வண்டுளருந் தண்டுழாய் மாயோன்' என்ற கருத்துடன் இயைந்து நிற்கிறது. 'உருவாகி நிற்றி அருவாகி நிற்றி. உயிரோடே வைக்கும் உறவாய், மருவாகி நிற்றி மலராகி நிற்றி' (52) என்ற பாடல், அருணகிரிநாதரின் 'உருவாய் அருவாய் உளதாய் இலதாய் மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்' என்ற பாடலை நினைவுபடுத்துகிறது. 'துறவியாய் வனம துன்னல் வேண்டுமோ' (77) என்ற பாடல், திருநாவுக்கரசரின், ''கான நாடு கலந்து திரியிலென், ஈனமின்றி யிருந்தவஞ் செய்யிலென்' என்ற தேவாரத்தோடு பொருந்த நிற்கின்றது. 'இனிய பாடலால் களவின் ஈசனென்(று) ஏத்த நாத்தரும் இறைவபோற்றி' (91) என்று அதிவீரராமர் கூறுவது, தாயுமானவரின் 'பாமாலைக்கே நீ தான் பட்சமென்று நன்மாலை மாலையா எடுத்துச் சொன்னார்', என்று கூறுவதை நிகர்ப்பது. 'பண்டை வினையின் பற்றறுத்தேன், பிடித்தேன் பிறவிக் கடல் நீந்தப் பெரிய புணையா உனதடியை முடித்தேன்' (5) என்று பாண்டியர் பாடுவது, வள்ளுவப் பெருந்தகையாரின் 'பற்றுக பற்றற்றான் பற்றினை' 'பிறவிப் பெருங்கடல் நீந்துவர்' என்ற குறட் பாக்களை நினைவுபடுத்துகிறது.

## 15. பிற செய்திகள்

இந்நூல் வாயிலாக நாம் காணக்கிடக்கும் பிற செய்திகளும் உள. அவற்றுள் சில காண்போம் :

பகலவன், திங்கள், உலகு, அனல், வானம், நீர், காற்று, உயிர் என்று சொல்லப்பட்ட எண்வகை மூர்த்தங்களும் சிவ பெருமானுக்கு உரியன (20). சித்திகள் எண்வகைய. அவை: அணிமா, மகிமா. இலகிமா, கரிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்பன (54). திக்குப் பாலகர்கள் எண்மர் அவர்: இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்போர் (88). புறச் சமயங்கள் ஆறு அவை: உலோகாயதம், சௌந்திராந்திகம், யோகாசாரம், மாத்திமீகம், வைபாடிகம், ஆருகம் என்பன (53).

## 16 அணிநயங்கள்

இந்நூலின்கண் உவமையணி, ஏகாங்கவுருவகவணி, மாற்றுநிலையணி, செம்மொழிச் சிலேடையணி, பூட்டுவிற்பொருள்கோள் முதலிய அணிநயங்கள் பல ஆங்காங்கு மிளிர்ந்து, கற்போர்க்குச் சுவை நல்குகின்றன.

நெடும்பல்லாண்டுகளாக நாடகக்கலை நந்தமிழகத்தில் தலைசிறந்து விளங்கியமை அனைவரும் அறிவர். பலருங் கூடுதற்கேற்ற இடத்தில் அரங்கம் அமைக்கப்படும்; திரைச் சீலைகள் தொங்கவிடப்படும். நாடகத்தினைக் காண்பார் தம் கட்புலனுக்குத் தெரியா வகையில் பாவைகளைக் கயிற்றின் வழியே தம் விருப்பப்படி ஆடச் செய்வர். இக் கருத்தினை உளத்துட் கொண்ட அதிவீரராமர், ஆண்டவன் இயல்பினை அழகுறக் காட்டுகின்றார். "சிவபெருமான் ஒருவன், மாயையாகிய திரையால் உயிர்களின் கட்புலனுக்குப் புலப்படாமல் சிதாகாயத்தில் மறைவுபட்டு நின்று, கட்புலனாக அமைந்த உடலோடு கூடிய உயிர்களைக் கன்மத்தின் வழியே தன் விருப்பப்படி ஆடச் செய்ய, மக்கட் கூட்டமெல்லாம் ஆடாநிற்கும்! இச்செயல், நாடக மாந்தர்தம் செயலினைப் போன்றுள்ளது!"

> "மருவி அம்பரம் மறைந்துநின் றாட்டுவான் போல
> உரக கங்கணக் கருவையான் ஒருவன்நின் றாட்ட"
> (83)

என்று அவர் கூறுவது 'உவமையணி'க்கோர் எடுத்துக் காட்டாம்!' 'ஆரா அமுதம் உண்டவர் போல்' (1), 'கன்னற் பாகிற் கோற்றேனிற் கனியிற் கனிந்த கவிபாட' (6), 'உலையிடு மெழுகென உருகி' (18), 'சூழல் குயவன் திகிரியைப் போல் பவக்கடலிற் சுழல்வேனோ?' (43), 'ஆடு மட்கலத் திகிரியொத்தலைந்து' (75), 'நடுக்கடலுட் கலங்கவிழ்த்து, வெம்புதுயர் மனத்தார் போல் மெலிகின்றேன் நெடுநாளா'(47), 'செம்பிலுறை களிம்பு போல் அகலாமல்' (48) என்ற தொடர்கள் உவமையணிக்கு எடுத்துக் காட்டுக்களாய் வந்துள்ளன.

கருவேசன் அம்பொன் அடிமையைக் கூறவந்த அதிவீரராமர், அதனை முத்திக்கு வித்தாக, முளரிக்குப் பகலவனாக, யோகிகட்கு அமிழ்தமாக, பத்திக்குக் கொண்டலாக உருவகிக்கின்றார். எனவே இஃது ஏகாங்கவுருவகவணியாம்! 'சிந்தனை உனக்குத் தந்தேன் திருவருள் எனக்குத் தந்தாய்' (63) என்ற செய்யுள், பூட்டுவிற்பொருள்கோள் உடையது.

> ''பாசம் நீக்கிமு வகைப்ப சுக்களை
> மாசில் முத்தியாம் வனத்தில் மேய்த்திடும்
> ஈசன் மின்னைநேர் இடைச்சி காதலன்
> ஆசில் பால்வணத் தண்டர் நாதனே!'' (79)

— இப்பாடல் இருவகைப் பொருள்களை உடையது.

''விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்னும் மூவகை யான்மாக்களை மலபந்தத்தினின்று நீக்கிக் குற்றமற்ற முத்தியாகிய சோலையில். ஈசனும், மின்னலை யொத்த இடையையும் உடைய உமையம்மைக்கு அன்பனும், அதரர்களுக்குத் தலைவனும் ஆகிய, குற்றமில்லாத பால் போலும் நிறத்தையுடைய இறைவன், பேரின்பம் துய்த்து மகிழும்படி சேர்ப்பான்''.

''மாடும் எருமையும் ஆடுமாகிய மூவகைப் பசுக்களையும் கட்டவிழ்த்துக் கொண்டு போய்க் குற்றமற்ற மூவகையாகாக்கினி வளர்வதற்கிடமாகிய காட்டில், அப் பசுக்களுக்குத் தலைவனும், மின்னற்கொடியைப் போன்ற கோகுல மகளுக்குக் காதலனும், குற்றமில்லாத பாலமுதால் பொலிவு வாய்ந்த இடையர்களுக்குத் தலைவனுமானவன் மேய்த்திடுவான்.''

இவ்வாறு சொற்கள் ஒரே வகையாய் நின்று இரு பொருள் பயத்தலின் இச் செய்யுள் செம்மொழிச் சிலேடை-யணியின் பாற்படும்!

## 17. கருத்து வேறுபாடு

இதுகாறும், திருக்கருவைப் பதிற்றுப்பத் தந்தாதியின் சிறப்புக்களையும், பல்வேறு நயங்களையும், அதிவீரராம பாண்டியரின் அழகான செய்யுட் டிறத்தையும், கண்டு களித்தோம். இனி, இவ்வந்தாதியினை இயற்றிய ஆசிரியரைப் பற்றிய கருத்து வேறுபாட்டைக் காண்போம்.

திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி, திருக்கருவைக் கலித்துறையந்தாதி, திருக்கருவை வெண்பா வந்தாதி எனும் இந்நூல்களை அதிவீரராம பாண்டியரே இயற்றியுள்ளார் என்று புலவர் பலர் உரைக்கின்றனர். அண்மையில் வெளிவந்த 'கலைக்களஞ்சியமும்' இக்கூற்றை வலியுறுத்துகின்றது. ஆனால் வரலாற்றுப் பேராசிரியரும், கல்வெட்டாராய்ச்சி-யாளருமான தி. வை. சதாசிவ பண்டாரத்தார், தம் 'பாண்டியர் வரலாறு' என்ற நூலில், வரதுங்கராம பாண்டியன் என்பானே இவ்வந்தாதி நூல்களை இயற்றியவன் என்றும், அதீவீரராம பாண்டியன் இயற்றியன என்று கூறுவது தவறு என்றும் கூறுகின்றார். இவர் கூற்றுக்கு எதிராகப் பேராசிரியர் இராமகிருட்டிணஐயர் என்பார், தாம் எழுதிய **'அதிவீரராம பாண்டியரின் வாழ்வும் காலமும்'** (The Life and Times of Ativeerarama Pandya) என்ற ஆங்கில நூலில் பின்வருமாறு கூறுகிறார்:- "Ativeerarama's literary reputation is also evidenced by his other works Kurma Puranam, KasiKandam, Tirukaruvai Antadis etc." (Page 17)-

'இலக்கிய வரலாறு' தந்த பேராசிரியர் கா. சுப்பிரமணியபிள்ளை, "பாண்டிய மன்னருள் இறுதியாகப் புலமை பூண்டவர் அதிவீரராம பாண்டியரே! இவர் கூர்ம-புராணம், காசிக்காண்டம், இலிங்கபுராணம், மாகபுராணம் என்னும் மதுரகாவியங்களையு மியற்றினர். இன்னும் இவர் கரிவலம் வந்த நல்லூர் என்னும் தலத்தில் வீற்றிருக்கும் சிவ-பிரான் மீது கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி இயற்றினர். இது 'குட்டித்திருவாசகம்' என்று புகழப்படுகிறது" என்று குறிப்-பிடுவதும் ஈண்டு நோக்கத்தக்கது.

இவற்றையெல்லாம் ஆராய்ந்து இந்நூலாசிரியர் யாவர் என்பது பற்றிய திட்டவட்டமான முடிபினை அறிதல் அறிஞர் பெருமக்களது கடனாகும்!

18. முடிவுரை

திருக்கருவைப் பதிற்றுப்பத் தந்தாதி என்னும் நூல், நூறுபாடல்களைக் கொண்ட சிறு நூலேயாயினும் சொல் நயமும் பொருள்நயமும் உடையதாய், அணிகள் பலவற்றைக் கொண்டதாய், உள்ளத்தை உருக்கும் இயல்பினதாய், இறைவனின் இயல்பினை எடுத்து விளக்குவதாய்ச், செந்தமிழ்த் தேனைச் சொரிந்து இன்பம் பயப்பதாய்க் 'குட்டித் திருவாசகம்' என்னும் கவின்பெயரைப் பெற்றதாய் இலங்குகின்றது. இத்தகு நூலைத் தமிழ்ப் பெருமக்கள் நாளும் ஓதியும், உணர்ந்தும், பிறர்க்குரைத்தும் பேரின்பப் பெரு வாழ்வு பெறுவார்களாக!

## உ. திருக்கருவைக் கலித்துறையந்தாதி

1. நூலமைப்பும் சிறப்பும்

இதுவும் கருவையில் எழுந்தருளியுள்ள சிவபெருமானைப் பற்றிப் பாடப் பெற்ற நூலாகும். கட்டளைக் கலித்துறையால் பாடப் பெற்றதாதலின் கலித்துறையந்தாதி என்னும் பெயரைப் பெற்றது.

'தீட்டும் பனுவற் கருவையந் தாதித் தெரியலெந்தை' என்று தொடங்கும் காப்புச் செய்யுள், பிள்ளையார் வணக்கமாக அமைந்துள்ளது. நூலின் தொடக்கம் 'சீரணி' என்றும், இறுதி 'சீர் பெற்றதே' என்றும் பெற்று, அந்தாதியாக அமைந்துள்ளன.

பதிற்றுப் பத்தந்தாதியுள் வந்துள்ள கருத்துக்களே பெரும்பாலும் இதில் வந்துள்ளன. எனினும், ஓசை நயமும், சொல்லுந் திறமும் மாறுபட்டனவேயாம்.

அதிவீரராமர், தம் நெஞ்சைப் பார்த்துப் பேசும் பாட்டினைப் பாருங்கள் :

"வாழ்த்திட நாவுண்டு பாவிக்க நீயுண்டு மண்ணிலுறத்
தாழ்த்திடச் சென்னியு முண்டுகண் டாய்தண்
களவின்மல

ரூழ்த்திட நீழ லுறைவா ரடியுண் டுனைநிரையம்
வீழ்த்திடு வாருமுண் டோநெஞ்ச மேயென்
மெலிவதுவே!''

''ஏ நெஞ்சமே! களாநீழலமர்ந்த கண்ணுதற் பெருங்-கடவுளை வாழ்த்துதற்கு நா உண்டு; அவனைக் கருத நீ உண்டு; நிலத்தில் படிந்து அவனை வணங்கத் தலை உண்டு. அங்ஙனமிருக்க உன்னை நரகத்தில் வீழ்த்துவார் எவரும் உளரோ?'' என்கின்றார் பாண்டியனார்.

''கருவைப் பிரானை என்னெஞ்சிற் கொண்டேன்; வாடிவருந்தும் உயிர் உய்யும்படிக்கு ஓர் உறுதி கண்டுகொண்டேன்; களாநிழலார் திருத்தொண்டின்மேல் அன்பு பூண்டவர்க்குத் திருவும், குலனும், மனையும், சிறாரும், சிறந்த செவ்வியுருவும், தவமும் கிடைக்கும்! யான் அவரடித் தொண்டு பூண்டேன்; அதனால் அயனும் அமரரும் அறியாச் சிவபெருமான், தமியனுக்கு ஆண்டவராகி வந்து திருக்காட்சியளித்தார்! அளவிறந்த களி-யும் காட்சியுங் காட்டிக் கருணை செய்தார்! என் உள்ளக் கமலத்தில் எள்ளத்தனையும் அகலாமல் குடிகொண்டார்; இருளறுத்து எளியனைக் காத்தளித்தார். அவரன்றோ வள்ளற் பெருந்தகை! அவரை எங்ஙனம் வாழ்த்துவேன்? அவரோ என்னைத் தடுத்தாட் கொண்டுவிட்டார்! எனக்கென் கவலை! எனக்கென் அச்சம்? மெலிவிக்கும் நோய்க்கும், மடவார் இழைத்த வினைக்கும், உயிர் நலிவிக்கும் காலபடர்க்கும் இனி ஒருகாலும் அஞ்சேன்! கல்லுங் குழைத்த புயத்தர் களாநிழற் கண்ணுதலார், அல்லும் பகலும் ஒழியாது, தம்புகழ் ஆதரித்துச் சொல்லும் படிக்குக் கவிநா அளித்து என்னைத் தொண்டு கொண்டார்! காணுமிட மெல்லாம் அவனே!

''விண்கொண்ட திங்கள் குடிகொண்ட வேணியை உடையவன்; வெண்ணகை உடையவன்; பண்கொண்ட வேதப் பவளச்செவ்வாயினை உடையவன்; பணைப் புயத்தை உடையவன்; தண்கொண்ட கொன்றைத் திருமார்பினை உடையவன்; தாமரைத் தாள்களை உடையவன்; அவன் உருவம் இருந்தவாறு என்னே! அவன் தாள்கள் கூற்றுவனை உதைத்தன; அவன் நகங்கள் நான்முகன் சென்னியைக் கொய்தன; அவன் மணிவலயத் தோள்கள் மாமேருவை வளைத்தன; அவன் நெற்றிச் சுடர் விழிகள் வேளை எரித்தன. அவன் வெற்றிச் செயல்களை எங்ஙனம் இயம்புவது? அம்மட்-டோ? ஒருசமயம் மன்றிடத்தே நின்று தாண்டவமாடுவான்;

ஒரு சமயம் வான் கயிலைக் குன்றிடத்தே அண்டர் போற்றிட நிற்பான்; ஒரு சமயம் அடியார் மனம் ஒன்றிடத்தே தன்னைத் தானாகப் பாவிப்பான்! எல்லாம் அவன் அன்றோ? இத்தகைய இறைவனிடம் அடியேன் வேண்டுவது ஒன்று உண்டு! அது யாது?

> ''பறியா வினையைப் பறித்திலன் மாற்றிநின் பாத மன்றி
> யறியா வறிவளித் தாண்டவ னேயடி யேனுக்குன்னைப்
> பிறியா வரமன்றி வேண்டுவ தில்லை பிரசமலர்
> வெறியார் களாவி னிழற்கீழ் நிலைபெற்ற மெய்ப் பொருளே!'' (99)

''ஆண்டவனே! மெய்ப்பொருளே! உன்னை என்றும் பிரியா வரம் ஒன்றே வேண்டுவன்! அதனைத் தந்தருள்க!''

—இவ்வாறு பாடிப்பரவும் பரமனடியாராக விளங்கும் பாண்டியனார், பிறரையும் அந்நிலைக்குக் கொணர மன்றாடு கின்றார்.

''சழக்கினரே! தீவினை செய்கின்றீர்; சிவதவங் கை-விடுகின்றீர்! சில்பகலில் சாவினை மேற்கொள்கின்றீர்! தண்டமிழ்க் கருவைக் கோவினை நாவினிற் கொண்டு ஏத்தாம லிருக்கின்றீர்! அவனது செம்பொற் குரைகழலில் பூவினை இட்டு இறைஞ்சாமலிருக்கின்றீர்! உங்கள் புல்லறிவை என்-னென்பது? (86)

''மனிதர்காள்! களவீசன், அழுக்கற்ற நெஞ்சினில் அமர்ந்திருப்பான்! பொன்னம்பலத்தும் வீற்றிருப்பான்! அவனடியினை எண்ணி அன்பு பழுக்கத் திருத்தொண்டு செய்யாதிருக்கின்றீர்கள்! காலபடர் நரகுக்கு இழுக்கக் கழுத்-தில் கயிறிடும்போது என் செய்வீர்கள்? (89)

''மானிடர்காள்! நுமக்குத் தளர்வு வந்தால் அப்போது விதியினை நொந்து கொள்வீர்கள்! தழைக்குஞ் செல்வக் கிளர்வு வந்தாலோ, தம்மைத்தாமே புகழ்ந்து கொள்வீர்கள்! களவு வந்தோனாம் கருணையங் கடவுள் செய்த கற்பனை இதுதான் என்பதைக் காண்கிலீரே! (93)

''கருவைப் பெருமானைக் காணப்பெற்றேன்; களா நிழற் கீழ்ப் பூணப்பெற்றேன்; பொன்னடித் தாமரை பூணும் அன்பு பேணப் பெற்றேன்; அவனது பேர் ஆயிரங்களும்

பேசப் பெற்றேன்! ஆதனால், கொடும்பாவங்கள் என்பால் வந்து நண்ணுதற்கு நாணப் பெற்றேன்! (94)

''புலவீர்காள்! யான் பெற்ற இன்பத்தை எடுத்துக் கூறினேன்! நீவிரும் அவ்வின்பம் அடைய எண்ணினால் அவன் புகழொன்றே பாடுங்கள்! அவனைப் பாடாமல், எழுநான்கு கோடி யழிநரகப் பங்கத்தில் வீழப் பொன்றுவார்தமைப் பாடுவது ஏனோ?''

> ''சங்கக் குழையனைத் தென்கரு வாபுரித் தாணுவை வான்
> கங்கைச் சடையனைப் பாடல்செய் யாது களிப்புலவீ
> ரங்கச் சுமைகொண் டெழுநான்கு கோடி யழிநரகப்
> பங்கத்தில் வீழவென் னோபொன்று வார்தமைப் பாடுவிரே''(56)

## 2. புராணக் கருத்து

பதிற்றுப்பத் தந்தாதி நூலில் வந்துள்ள புராணக் கருத்துக்கள் பல இந்நூலிலும் வந்துள்ளன. ஒன்று மட்டும் இங்கே காண்போம்:

முன்பு ஒருகால், அமரரும், அரக்கரும் தமக்கு இறப்பு நிகழாதிருக்க அமிழ்தம் வேண்டிப் பிரமனிடம் சென்று தம் விருப்பத்தைத் தெரிவித்தனர். பிரமன் அவர்களோடு திருமாலிடம சென்று பாற்கடலைக் கடைந்து அமிழ்தம் தந்தருளும்படி வேண்டினர். திருமால் அதற்கிசைந்து கருடனால் மந்தர மலையைக் கொண்டுவந்து அதைப் பாற்கடலில் மத்தாக நாட்டி, வாசுகி என்னும் அரவை அதில் தாம்பாகப் பூட்டி, ஒருபுறம் அமரரும் ஒருபுறம் அரக்கருமாக நின்று கடையச் செய்தனர். அவ்வாறு கடையும் பொழுது, வாசுகி வருத்தம் பொறாமல் விடத்தைக் கக்க, அஃது அங்கிருந்தார் அனைவரையும் கொல்ல எழுந்தது. அது கண்டஞ்சிய அமரரனைவரும் சிவபெருமானை அடைக்கலம் அண்டினர். சிவபெருமான் அமரரைக் காக்க உளங்கொண்டு அவ் விடத்தைத் தாமுண்டு தம் கண்டத்தில் நிறுத்திக் கொண்டனர்! இதனை,

> ''வருங்கால நஞ்சுண் டமரரைக் காத்த வரதமுத்தி
> தருங்கால தண்டமிழ்த் தென்கரு வாபுரிச் சங்கரனே'' (55)

என்ற அடிகள் எடுத்துக் காட்டுகின்றன.

### 3. ஒப்புமைப் பகுதி

''இல்லாமை துன்ப மிரவுகல் லாமை யிழிவுமிடி
பொல்லாத நோய்முத லானவெல் லாமென்று போர்விசயன்
வில்லா லடியுண்ட பால்வண்ண நாதர் வியன்புகழைச்
சொல்லா தவரையன் றோபிறப் பேழுந் துயர்செய்யுமே''(19)

இப்பாடலில் வந்துள்ள இரவு, கல்லாமை, இல்லாமை (நல்குரவு) முதலிய சொற்கள் திருக்குறளின் தலைப்புக்களை நினைவு படுத்துகின்றன. 'பிறப்பு ஏழும்' என்ற தொடர், 'எழுமை எழுபிறப்பும்' என்ற வள்ளுவர் குறளை நினைவுபடுத்து கின்றது. 'வேண்டிய வேண்டிய வெல்லா மெதிரும்' (59) என்ற அடி திருக்குறளில் வந்துள்ள 'வேண்டிய வேண்டியாங் கெய்தலால்' என்ற குறளுக்கு இணையாக வந்துள்ளது.

''உலகத்திலுள்ள மனைவாழ்வு சுற்றம் உறுபுதல்வர்'' (74) என்ற அதிவீரராமரின் பாடல், ''நீரிற் குமிழி இளமை நிறைசெல்வம்'' என்ற குமரகுருபர அடிகளாரின் பாடற் கருத்துக்கேற்ப அமைந்துள்ளது. 'முத்திக் கொருவித்து மோகா டவிக்கு முழங்கு செந்தீ' (81) என்ற பாடல், பதிற்றுப்பத்தந்தாதியில் வந்துள்ள 'முத்திக்கு வித்து' என்ற பாடலோடு பெரிதும் ஒத்து விளங்குகின்றது பதிற்றுப்பத்தந்தாதியில் இறைவன், சுந்தரர் பொருட்டுத் தூது நடந்ததை 'நாதனே' கவிஞன் ஏவ நள்ளிருட்போதிற் சென்ற தூதனே' (80) என்று கூறிய அதிவீரராமர், இக் கலித்துறையந்தாதியில் இன்னும் சிறிது நயமாகக் கூறுகின்றார். ''பாட்டுக்குருகும் பரமன், கவிஞன் பொருட்டு இரவுப் போதில் தூது சென்றான். அவன் கால்கள் படுமாறு அத்தெருவில் சிறு தூசியாய்க்கூடக் கிடந்தேனில்லையே? என் தீவினைதான் என்னே!'' என்று இரங்குகின்றார்.

''பரவைக் கிரவிற் றிருத்தூது சென்ற பதம்படவத்
தெருவிற் சிறுதுகளாய்க் கிடந்தேனில்லை தீவினையே'' (85)

### 4. உவமையணி

இவ்வுடம்பு நிலையற்றதென்பதை இயம்பவந்த அதிவீர ராமர் அழகான உவமைகளை ஆள்கின்றார். விண்ணிலே தோன்றும வில், புனல் மேல் தோன்றும் குமிழி - இவை போன்றது யாக்கை என்கின்றார். வில், வானத்தில் தோன்றிச்

சிறிது பொழுதே நிற்பது. குமிழி, நீரில் தோன்றிக் கணப்பொழுதே தங்குவது. அதுபோல, இவ்வுலகத்தில் தோன்றி அழியுந் தன்மையது இவ்வுடல் என அவர் கூறும் திறம் அழகுடையது!

''விண்ணிடு வில்லும் புனற்மேற் குமிழியு மின்னுமென்ன
மண்ணிடைத் தோன்றி யழியுமிக் காயத்தை'' (16)

பேய்க்காற்றில் சிறு சருகு அகப்பட்டால் அது என்ன பாடுபடும்? இருந்த இடங்கூடத் தெரியாமல் அழிந்து போகுமன்றோ? இறைவனடி போற்றிப் பணியும் அடியார் பழவினையும் அத்தகையதே என்கின்றார். காற்றிலே சருகு அகப்பட்டு மாய்வதுபோல, இறைவன் திருவடியில் பழவினை அகப்பட்டு மாய்ந்தொழியும் என்று கூறுவது எத்துணை உயர்ந்தது?

''போற்றிப் பணியு மடியார் பழவினை போகவெறி
காற்றிற் சருகென மாற்றும் பிரான்'' (60)

5. முடிவுரை

சங்ககாலத்தே ஆண்ட அரசர் பலர், கவிபாடும் வன்மை பெற்றுப் புவியரசராக மட்டுமன்றிக் கவியரசராகவும் விளங்கினர் என வரலாறு வாய்மையுடன் உரைக்கின்றது. அத்தகு வரிசையில் வைத்தெண்ணப்படும் பிற்காலத்தரசர் விரல் விட்டெண்ணக்கூடிய ஒரு சிலரேயாவர். அவருள்ளும் சிறந்தவராக அதிவீரராமபாண்டியர் விளங்குவது தமிழர்தம் தவப்பயனேயாகும்! தமிழ் வளர்த்த தென்பாண்டி நாட்டார் மட்டுமல்லாமல் உலக மக்கள் அனைவருமே உய்யும் வகையில் இவ் வந்தாதி நூல்களைப் பாடிக் கொடுத்த பாண்டியர் புகழ் பல்லாண்டு வாழ்வதாக!

# மதுரை மீனாட்சியம்மை குறம்

நூலாசிரியர் சிறப்பு

'மதுரை மீனாட்சியம்மை குறம்' என்னும் பெயர் கொண்ட இந்நூல், குறிஞ்சிக் கிழானின் அருளைப் பெற்ற குமரகுருபரரால் பாடப்பெற்றது.

'பாண்டிநாடே பழம்பதி' என்பது மணிவாசகர் திருவாக்கு. இப் பாண்டிநாட்டின் தென்பகுதி, 'தென்பாண்டி நாடு' எனப்படும். இதன் ஒரு பகுதியாகிய திருநெல்வேலி மாவட்டம், தமிழ் மணமும், தெய்வ மணமும் ஒருங்கே கமழுதற்கு நிலைக்களனாய்த் திகழ்வது. ''பொன் திணிந்த புனல் பெருகும் பொருநையெனும் திருநதி'' இப்பகுதியிற் பாய்ந்து, வற்றா வளனை வாரி வாரி இறைக்கிறது. இந்நதியின் கரையிலமைந்த கவின் பெறு நகரங்கள் பலவாகும். அவற்றுள் திருவைகுண்டம் என்னுந் திருப்பெயர் கொண்ட நகரமும் ஒன்றாகும். இவ் வைகுண்டத்தின் வடபால் அமைந்த பகுதி 'கைலாசபுரம்' ஆகும்.

இப்பகுதியில், 'இயல்பாகச் செப்பமும் நாணும் ஒருங்கு' கொண்ட ஒழுக்கத்தையும் வாய்மையையும் உயர்வெனக் கருதிய - 'தாளாண்மை யென்னுந் தகைமைக்கண் தங்கிய' — சைவ வேளாண் குலத்தில், இற்றைக்கு ஏறத்தாழ முந்நூறாண்டுகட்கு முன் சண்முக சிகாமணிக் கவிராயர் என்பார் விளங்கினார். இவர் ஆன்ற தமிழ்ப் புலமை பெற்று, வாலறிவன் நற்றாளை நாளும் வழிபட்டு, தமக்கேற்ற வாழ்க்கைத் துணைவியாம் சிவகாமசுந்தரி என்னும் கற்பின் மிக்க மங்கை நல்லாளொடு இல்லறமாம் நல்லறத்தை இனிது நடாத்தி வந்தார். இவ்விருவருக்கும் அருந்தவச் செல்வராகத் தோன்றியவரே அருள் குடி கொண்ட குமரகுருபரர்!

நாளும் நற்றமிழால் நம் பெருமானை வழுத்தும் சண்முக சிகாமணிக் கவிராயருக்குப் பிறந்த குமரகுருபரர், பிறந்தது முதல், வாய் பேசாமல் ஊமையாக இருந்தார். ஐந்தாண்டு-

களாகியும் மாற்றம் ஏற்படாததைக் கண்டு மனங்கவன்ற கவிராயரும், அவர்தம் துணைவியாரும் தம் குழந்தையுடன் சீரலைவாய் சென்று, 'செந்திப் பதிபுரக்குஞ் செவ்வேளை வேண்டிப் பன்னாள் பாடுகிடந்தனர். அடியவர் இடுக்கண் போககும் அருட்கடலாம் அறுமுகன், பேசும் ஆற்றலுடன், பழுத்த தமிழ்ப் புலமையுடன் பாவியற்றும் ஆற்றலையும் குமரகுருபரருக்கு அருளினான். அக்கணமே, செந்தில் முருகன்மீது 'கந்தர் கலி வெண்பா' வைப் பாடினார் குமரகுருபரர்!

அப்பால், தம் ஊரிலுள்ள கைலாசநாதர் மீது 'கைலைக் கலம்பகம்' பாடினார். பின்னர்த் திருத்தலங்களுக்குச் செல்லவேண்டுமென்னும் வேட்கையால் மதுரை வந்துற்றார். அங்கயற்கண்ணம்மை மீது அழகிய பிள்ளைத் தமிழ் ஒன்றைப் பாடியருளினார். அப்போது, 'நறைபழுத்த துறைத் தீந்தமிழில் ஒழுகு நறுஞ்சுவை' அள்ளிப் பருகிய அங்கயற்கண்ணி, அகமிக மகிழ்ந்தவளாய்த் தன் திருக்கழுத்திலிருந்த முத்து மாலையினைக் குமரகுருபரருக்கு அணிந்துவிட்டு மறைந்தாள் எனின், அடிகளின் பெருமையை எங்ஙனம உரைப்பது?

அதுகாலை, மதுரையை யாண்ட திருமலை மன்னனின் வேண்டுகோளுக் கிணங்கி, மதுரைக் கலம்பகம், நீதிநெறி விளக்கம், மதுரை மீனாட்சியம்மை குறம் முதலான நூல்களைப் பாடினார் அடிகளார்!

அதன் பின்பு, திருவாரூர் சென்று அவண் 'திருவாரூர் நான்மணி மாலை' பாடினர். அடுத்துத் தருமபுரம் சென்று. திருமையாதீனத்தில் அருட் செங்கோலாச்சிய மெய்ப்புகழ் மாசிலாமணி தேசிகரைக் கண்டு, அவரையே தம் ஞானாசிரியராகக் கொண்டு வழிபட்டார். ஆசிரியர் ஆணைப்படி சிதம்பரம் சென்றார்; வழியில் புள்ளிருக்கு வேளூரிலுள்ள முத்துக்குமார சுவாமியின்மீது பிள்ளைத் தமிழைப் பாடினார். அதன் பிறகு சிதம்பரம் சென்று 'சிதம்பர மும்மணிக் கோவை', 'சிதம்பரச் செய்யுட் கோவை' முதலான நூல்களைப் பாடினார். மீளவும் தம் ஞானாசிரியரிடம் வந்து, அவர்மீது 'பண்டார மும்மணிக் கோவை' யைப் பாடியருளினார் அப்பால் ஆசிரியரிடம் விடை பெற்றுக் கொண்டு காசிக்குச் சென்றார் 'சகல கலாவல்லி மாலை' பாடிக் கலைமகள் அருள் பெற்று இந்துத்தானி மொழியிலும் புலமை பெற்றார். அக்காலத்தில் தில்லியை அரசாண்ட மூகமதிய மன்னர், அடிகளின் புலமைத் திறத்தைப் பெரிதும்

வியந்து, பெரும் பொருள் தந்து, வேண்டுவன செய்துதவினார். 'காசிக் கலம்பகம்' 'காசித்துண்டி விநாயகர் பதிகம்' முதலியன பாடிப் பின்னர்த் தருமபுரம் திரும்பித் தம் ஆசிரியரைக் கண்டு இன்புற்று, மீளவும் காசிப்பதிக்கே சென்று வாழ்ந்து, விளங்கியிருந்து, ஒரு வைகாசித் திங்கள் கிருட்டிண பட்சத்திருதியையில் தனக்குவமையில்லாதான் தாள் சேர்ந்தார் குமரகுருபரர்!

நூலமைப்பும் சிறப்பும்

ஒரு குறத்தி, குறி கூறுவதாக அமையும் பிரபந்தம், 'குறம்' என்று வழங்கும். எனவே இந்நூலிலும் குறத்தி ஒருத்தி, குறி கூறுவதாக அமைக்கப்பட்டுள்ளது.

> ''இறப்பு நிகழ்வெதிர் வென்னுமுக் காலமும்
> திறப்பட வுரைப்பது குறத்திப் பாட்டே''

என்பது பன்னிரு பாட்டியல் நூற்பாவாகும். இதற்கேற்பவே இம் 'மீனாட்சியம்மை குறமும்' அமைந்துள்ளது என்பதனைப் பின்வரும் பாடலால் தெளியலாம்.

> ''வருங்கால நிகழ்காலங் கழிகால மூன்று மொக்க
> வகுத்துப் பார்த்துத்
> தருகாலந் தெரிந்துரைப்ப தெளிதரிதன் றெங்கள் குலச்
> சாதிக் கம்மே'' (24)

—இவ்வாறு, குறி கூறவந்த குறத்தி சொல்வதாக அடிகளார் குறிப்பிடுகின்றார்.

'குறவஞ்சி' என்பதும் குறத்தி குறி கூறுவதாக அமைந்ததே எனினும், 'குறம்' என்பதில் குறத்தியின் கூற்று மட்டும் இருப்பக் 'குறவஞ்சி'யில் வேறுபலர் கூற்றுக்களும் இருக்கும் என்ற வேறுபாட்டை உணர்ந்து கொள்ளல் வேண்டும்.

பாட்டுடைத் தலைவனை விரும்பிய தலைவியொருத்தியைக் கண்டு குறத்தி குறி சொல்வதாக அமைப்பது கவிஞர் இயல்பு. எனவே, மதுரைச் சொக்கநாதப் பெருமான்பால் காதல் கொண்ட ஒரு தலைவியின் கையைப் பார்த்துக் குறத்தி, குறி சொல்வதாக இம் 'மீனாட்சியம்மை குறம்' அமைந்துள்ளது. இந்நூலின் பாட்டுடைத் தலைவி அங்கயற்-

கண்ணம்மையாவாள்! ஆதலின் அவளின் திருப்பெயரும் புகழும் சார்த்துவகையால் சொல்லப்படுகின்றன.

இந்நூலின் முதற் பாடல், சித்திவிநாயகர் காப்பாக உள்ளது. அடுத்துக் குறத்தியின் கூற்று விரிவாக அமைந்துள்ளது. காப்புச் செய்யுள் நீங்கலாக, ஐம்பது செய்யுட்களும், இறுதியில் வாழ்த்துச் செய்யுள் ஒன்றும் இருக்கின்றன. ஆசிரிய விருத்தம், கொச்சகக் கலிப்பா, சிந்து இவற்றால் ஆக்கப்பட்டது இந்நூல். குறத்திற்கேற்ற சந்தங்களை உடையது.

குறி சொல்லத் தொடங்குமுன், குறத்தியானவள் தன்னைத் தானே அறிமுகம் செய்விக்கிறாள். 'தென்பொதியக் குறத்திநா னம்மே' என்று தொடங்கிப் பேச ஆரம்பிக்கிறாள். சொக்கப் பெருமான்பாற் கருத்திழந்தவளாயிற்றே தலைவி என்பதை நன்குணர்ந்த குறத்தி, எடுத்த எடுப்பிலேயே 'சொக்கலிங்கனைக் கூடி மேவுவாய்' என்று கூறித் தலைவியின் வேட்கையை மிகுதிப் படுத்துகிறாள்.

அப்பால், புழுகினாலே தரையை மெழுகிப், பிள்ளையார் பிடித்துவைத்துப், பொற்கோலமிட்டு, நிறைநாழிவைக்குமாறு தலைவியிடம் சொல்லி, அவள் கையை நீட்டும்படி செய்து, குறி கூறத் தொடங்குகிறாள் குறத்தி. கைக்குறி, முகக்குறி, கவுளி, கன்னிமார் வாக்கு, இடக்கண் துடித்தல் இவற்றை ஆராய்ந்து 'நீ விரும்பும் தலைவர் தோளை மேவுவாய்' என்கிறாள். தான் இதற்கு முன்னர்ப் பல்வேறிடங்கட்குச் சென்று குறி கூறியதாகவும், தன் உறவின் முறையார் இன்னாரின்னாரென்றும், இன்னாரின்னாருக்கு இன்னின்னபடி நிகழுமென்று தான் கூறியவை அனைத்தும் பலித்துள்ளன என்றும் கூறுகிறாள்.

அடுத்துக், குங்குமத்தைச் சந்தனக்குழம்பில் குழைத்துத் தரையை மெழுகிக் கோலமிட்டுக் குங்கிலியக் கொழும்புகை காட்டி, நவமணிகளை நாற்றிசையிலும் பரப்பித், தென்மேற்கு மூலையில் பிள்ளையாரை வைக்கும்படி குறத்தி, தலைவிக்குச் சொல்கிறாள். நறுமலரையும், அறுகையும் ஐங்கரருக்குச் சாத்திப், புழுகு நெய் வார்த்து, விளக்கும், நிறைநாழியும் வைத்த பின்பு, முறத்திலே நெல்லைக் கொணரச் செய்து அதனை எண்ணிப் பார்த்தபின், குறத்தி குறி கூறுகிறாள்.

நெல் அளந்திட்ட போது ஏற்பட்ட குறி, பல்லி சொற் குறி, பத்தினிப்பெண்டிர் வாயாற் சொல்லிய சொல், தும்மல், ஆந்தையின் குரல் என்பவற்றால் நன்னிமித்தம் உண்டா-தலையறிந்து, தலைவியின் கையைப் புகழ்ந்து பாராட்டிக் கைக்குறியும், மெய்க்குறியும் உணர்ந்து சொல்கிறாள் குறத்தி. இறுதியில், இருபது கண்ணிகளால் மதுரை அங்கயற்கண்ணி-யைப் பாடி வாழ்த்துகிறாள் குறத்தி.

இவ்வாறு குறத்தி குறி சொல்லும் பழக்கம், நம் தமிழகத்தில் தொன்றுதொட்டு நிகழ்ந்து வருவதென்பதனைப் பண்டைச் சங்க இலக்கியங்களும், பிற்காலத்தெழுந்த நூல்களும் தெள்ளத் தெளிய விளக்குகின்றன. குறி கூறுபவள், 'கட்டுவிச்சி' என்றும், 'அகவன் மகள்' என்றும் முன்னர் அழைக்கப்பட்டாள். கட்டுப் (குறி) பார்த்தலின் 'கட்டுவிச்சி' யானாள்; தெய்வங்களை அகவிக் (அழைத்து) கூறலின் 'அகவன் மகள்' ஆனாள். தாயார், கட்டுப்பார்த்தற்குரிய விதியைக் கூற வந்த ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பியனார்,

''கட்டினுங் கழங்கினும் வெறியென விருவரும்
ஒட்டிய திறத்தாற் செய்திக் கண்ணும்'' (தொல். களவு. 24)

என்று குறிப்பிடுகின்றார். இதனால், 'கட்டுப் பார்த்தல்' என்பது தொல்காப்பியர் காலந்தொட்டே நடந்து வருவது என்பது புலனாகின்றது.

கட்டுவிச்சியானவள், தெய்வங்களை அழைத்துப் பாடு-பவள் என்றும் முறத்தில் நெல்லையிட்டு அதனை எண்ணி, அதனாற் போந்த சில நிமித்தங்களை அறிந்து பயன் கூறுபவள் என்றும், குறுந்தொகையில் வரும்,

''அகவன் மகளே யகவன் மகளே'' (23)

என்ற பாடல் குறிப்பிடுகின்றது.

எனவே, குமரகுருபர அடிகளார் பாடிய இம் 'மீனாட்சியம்மை குறம்' ஆனது தொல்காப்பியர்தம் பேரிலக்-கணத்துக்கும், சங்கச் செய்யுட்களின் கருத்துக்கும் ஏற்ப அமைந்துள்ளது என்னும் அழகினைக் கண்டு இன்புறலாம்.

இனி இந்நூலின் பெயர்க்காரணம் ஆய்வோம். நூலின் பாட்டுடைத் தலைவி மதுரை மீனாட்சியம்மையாதலின், இது

'மதுரை மீனாட்சியம்மை குறம்' என்னும் பெயர் பெற்றது. ஆனால் நூலை நுணுகி நோக்குங்கால், இது 'மதுரை அங்கயற்கணாயகி குறம்' என்றிருத்தல் வேண்டும் எனத்துணியலாம் காப்புச் செய்யுளில்,

"............

தார்கொண்ட கருங்குழலங் கயற்கணா யகிகுறஞ்செந்
தமிழாற் பாட"

என்று வந்துள்ளது. அன்றியும் நூலின் பலவிடங்களிலும் அங்கயற்கணாயகி, அங்கயற்கண்ணி. அங்கயற்கணம்மை, அங்கயற்கட்பாவை, அங்கயற்கண்ணமுது, அண்டர்தம்நாயகி, அபிடேகவல்லி, மதுரை நாயகி, மங்கையருக்கரசி முதலிய பெயர்களே காணப்படுகின்றன; 'மீனாட்சி' என்ற பெயர் யாண்டும் காணப்படவில்லை! மீனாட்சி' என்பது, அங்கயற்கண்ணியின் வேறு பெயராயினும், இக்குறத்தில் அப்பெயர் இன்மையின் 'மதுரை அங்கயற்கணாயகி குறம்' என்று கூறுவதே பொருந்தும் எனலாம்.

செய்யுட் சிறப்பு

இக்குறத்தில் வரும் செய்யுட்கள் இயற்கையின் எழில் நலத்தை எளிதில் எடுத்துக் கூறுவனவாய்க், கற்பனை நயம், கருத்துச் செறிவு முதலியன கொண்டு, உவமையும், உருவகமும் தற்குறிப்பும் முதலிய அணிகளுக்கு இடமாகிச் 'சுருங்கச் சொலன்' முதலான அழகும் அமைந்து, இன்னோசையுடன் இனிது செல்லுவனவாகும். நூலின் இடையிடையே செந்தமிழின் சீர்மையும், வரலாற்றுக் குறிப்பும் அமைந்துள்ளன. முன்னோர் மொழிந்த மொழிபொருளைப் பொன்னேபோற்போற்றும் பெருந்தகைமையை இந்நூலாசிரியர்பாற் காணலாம். காட்டாக ஒன்று காண்போம்.

மதுரை அங்கயற் கண்ணம்மையின் அருட்டிறத்தைப் பல்லாற்றானும் புகழ்ந்துரைக்கின்றாள் பொதியமலைக் குறத்தி. "இறைவியின் திருவடி நறுமணங்கமழ்வது, அதனை நான் பாடுகிறேன்!" என்கிறாள் அவள். "இறைவியின் திருமுடி மணமுடையது என்று கூறுவதே பொருந்தும்; திருவடி மணமுடையது என்று கூறுவது பொருந்துவதன்றே! ஒருகால்

அடியவர்கள் வழிபடும் நறுமண மலர்களால் மணமுடையதா-யிற்றோ?'' என்ற எண்ணம் நம் உள்ளத்தில் எழுவது இயற்கையே! ஆனால் உண்மை அதுவன்று! ''சிவபெருமானின் சடையானது நறுமண மிக்க காடாகத் திகழ்கிறது; அதில் அழகும் மணமும் ஒருங்கே கொண்ட கொன்றை மலர் விளங்குகிறது; அக்கொன்றைமலருக்கருகே பிறைச் சந்திரன் காட்சி வழங்குகிறான். அதனாலேதான் இறைவியின் திருவடி மணமுடையதாகின்றது'' என்கிறாள் குறத்தி. ''சிவபெருமா-னின் சடைமுடி மணப்பதற்கும், இறைவியின் திருவடி மணப்பதற்கும் எந்த விதத்தில் ஒற்றுமை உள்ளது?'' என்ற வினா ஏற்படுகின்றது.

''ஆம்! செஞ்சடைக் கடவுளாம் வசிபெருமானுக்கும், அவன்தேவி அங்கயற்கண்ணிக்கும் ஊடல் நிகழ்கிறது. இவ் வூடலை நீக்குதற் பொருட்டு, அவள்திருவடியில் வீழ்கின்றான் கவின் மணக்கும் கடிக்கொன்றையணிந்த இறைவன்! எனவேதான், உமையின் திருவடி மணமுடையதாகின்றது!'' என்ற நுண்ணிய கருத்தமைத்துப் பாடுகிறாள் குறத்தி!

''கான்மணக்குஞ் சடைக்காட்டிற்
கவின்மணக்குங் கடிக்கொன்றைத்
தேன் மணக்கும் பிறை நாறும்
சீறடியைப் பாடுவனே!''

—இவ்வாறு, உமையின் திருவடியில், எல்லாம் வல்ல முழுமுதற் பொருளாம் எம்பெருமான் பணிந்தது முறையா என்ற கேள்வியும் பிறக்கின்றது. ஊடற் காலத்தில் மட்டும், தலைவன் ஒருவன், தனக்குரிய தலைவியிடத்தே பணிந்து போதலும் உண்டு. அது தவறன்று! இதனை,

''மனைவி யுயர்வுங் கிழவோன் பணிவும்
நினையுங் காலைப் புலவியு ளுரிய'' (தொல் பொருள் 227)

என்ற தொல்காப்பியர் கூற்றால் உணர்ந்து கொள்ளலாம்.

தொல்லாணை நல்லாசிரியர் கருத்தை மேற்கொண்டே, பின்வந்த புலவர் பெருமக்கள் அனைவரும் தத்தம் நூல்-களில் இதனை ஆங்காங்குக் கூறிச் செல்வாராயினர்.

நெய்தற்கலி பாடிய ஆசிரியர் நல்லந்துவனார், ''தோள்துறந்தருளா தவர் போல் நின்று'' என்று தொடங்கும் செய்யுளில் ''தலையுற முன்னடிப் பணிவான் போலவும்'' என்ற அடியால், தொல்காப்பியர் கருத்தை அரண் செய்கின்றார்.

அன்றியும், திருவிளையாடற் புராணத்துள், திருநகரச் சிறப்பைச் செப்பவந்த பரஞ்சோதி முனிவர்,

''மாட மாலையு மேடையு மாளிகை நிரையும்
ஆட ரங்கமு மன்றிவே ளன்னவர் முடியும்
ஏடவிழ்ந்ததா ரகலமு மிணைத்தடந் தோளுஞ்
சூடு மாதரார் சீறடிப் பஞ்சுதோய் சுவடு''

என்கின்றார். ''மகளிர் கலவிக் காலத்தே ஊடுவர்; அதனைத் தீர்த்தற்குத் தலைவர், அவர்தம் திருவடியில் வீழ்ந்து வணங்குவர்; வணங்கிய தலைவரைக் காலால் உதைப்பர் மகளிர்'' என்று முனிவர் கூறும் உரையும் ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது.

எனவே, தொல்காப்பியர்தம் இலக்கணத்தை ஒட்டியும், பரஞ்சோதியார் போன்ற பரமனடியவர்தம் கருத்துக்கு ஏற்பவும் இரண்டே அடியால், சொல் நயமும், பொருள் நயமும் ஒருங்கேயமைப் பாடிய குமரகுருபர அடிகளாரின் திறம், கண்டு கண்டு இன்புறத்தக்கது. தெய்வப் புலமைபெற்ற அடிகளார் போன்றார்க்கேயன்றி ஏனையோர்க்கு இத்திறம் அமைதல் இயலாது!

சித்திவிநாயகர்

எடுத்துக் கொண்ட செயல் இனிது நிறைவெய்தும் பொருட்டு எல்லாம் வல்ல இறைவனை மனம், மொழி, மெய்களான் வணங்குவது பண்டைத் தமிழர்தம் மரபு அதற்கேற்பவே, குமரகுருபர அடிகளாரும், தாம் பாடத் தொடங்கும் இக்குறமானது, செம்மைத் தமிழ்மொழியில் அமைந்து, கற்றுவல்ல பெரும்புலவர்க்குச் செஞ்சொற் கவியின்பத்தை வாரி வழங்க வேண்டுமென்னுங் கருத்தால், சித்திவிநாயகரை முதற்கண் போற்றுகின்றார்.

மதுரையிலுள்ள அங்கயற்கண்ணியின் அழகிய திருக் கோயிலுக்குள் நுழைந்ததும் பொலிவு பெறு பெற்றாமரைக் குளத்தைப் பார்க்கலாம். அதனை வலமாகச் சுற்றி வந்தால், மதுரைத் தல விநாயகராம் சித்திவிநாயகரைச் சிந்தை குளிரக் கண்டு வணங்கலாம் இவருடைய தோற்றம், காப்புச் செய்யுளில் கவினுறக் காட்டப் பெறுகின்றது. இவர், பெரிய புள்ளிகளையுடைய முகத்தையுடையவர்; ஐங்கரத்தவர்; ஒற்றைக் கொம்பு உடையவர்; இரு செவிகளைக் கொண்டவர்: கைம்மதம், கன்னமதம். கோசமதம் என்னும் மும் மதங்களைப் பெற்றவர்; தொங்கும் வாயைக் கொண்டவர்; போர் கொண்ட கன்னத்தையும், சின்னஞ்சிறு கண்களையும் உடையவர்; தம்மைத் தொழும் அடியவர்கட்குச் 'சித்தி' தருபவராதலின் 'சித்திவிநாயகர்' எனப் பட்டார்!

> ''கார்கொண்ட பொழின்மதுரைக் கர்ப்பூர வல்லிமணங்
> கமழும் தெய்வத்
> தார்கொண்ட கருங்குழலங் கயற்கணா யகிகுறஞ்செந்-
> தமிழாற் பாட
> வார்கொண்ட புகர்முகத்தைங் கரத்தொருகோட்டிரு
> செவிமும்
> மதத்து நால்வாய்ப்
> போர்கொண்ட கவுட்சிறுகட் சித்திவிநாயகன் துணைத்
> தாள்
> போற்று வாமே''

தமிழ் முனிவன் வாழுமலை

குமரகுருபர அடிகளார், முற்றத் துறந்த முனிவரே யாயினும், தாம் பிறந்த தண்டமிழ்ப் பாண்டி நாட்டையும், தம் அமிழ்திற் சிறந்த தமிழ்மொழியையும் துறந்தாரிலர் உலகியற் பொருள்களில் எதனையும் விரும்பாத துறவுள்ளம் கொண்ட அடிகளார், ''ஆசுமுத னாற்கவியு மட்டாவ தான முஞ்சீர்ப், பேசுமியற் பல்காப்பியத்தொகையும் ஓசை எழுத்து முதலாமைந் திலக்கணமுந் தோய்ந்து, பழுத்த தமிழ்ப்புலமை பாலித்து'' என்று தம் 'கந்தர் கலிவெண்பா'வில் முருகனை வேண்டுகின்றார். தாம் இயற்றிய எல்லா நூல்களிலும் தமிழின் நீர்மையைத் தரணியோர் தெரியுமாறு செய்துள்ளார். தமிழினிடத்தே தெய்வத் தன்மை கண்ட இவர், தாம்

பாராட்டும் தெய்வங்களையும், பிற இடங்களையும் தமிழ்த் தொடர்புடையனவாகக் கூறுகின்றார் தாம் பிறந்த பொன்-னாட்டை தண்பொருநை பாயும் தென்பாண்டி நன்னாட்டைப் பெருமைப்படுத்த எண்ணுகின்றார்; நூலின் பலவிடங்களிலும் அதன் சிறப்பனைத்தும் செப்புகின்றார். 'குறம்' பாடவந்த குமரகுருபரர், குறத்திக்குரிய குறிஞ்சி நிலமாகத் தமிழகத்தின்-கண்ணுள்ள பிற இடங்களைத் தேர்ந்தெடுக்காமல், தென் பொதியத்தைத் தேர்ந்தெடுத்தமை, அடிகளாரின் நுண்மாண் நுழைபுலத்தை, நாட்டுப் பற்றை, மொழிப் பற்றை நம்ம-னோர்க்கு எடுத்துக் காட்டுகின்றது.

இந் நிலவுலகமாகிய நங்கையை, மதம் பொழிகின்ற கொடிய மலைபோன்ற திக்கயங்களும், ஆயிரம் வாயையும், படத்தையும் அசைக்கின்ற ஆதிசேடனும் சுமந்து கொண்டிருக்-கின்றன. இந்தப் பார் மடந்தையின் பெரிய நகில்களாக வடபுறம் பெரிய மேருமலையும், தென்புறம் அழகிய பொதிய மலையும் விளங்குகின்றன.

இப் பொதியமலை, மிகமிக உயர்ந்தது. அதனால் வானத்திற் செல்லும் விண்மதி தவழும் இடமாக இது அமைந்-துள்ளது. இன்னும் நன்றாக ஆராய்ந்து பார்த்தால், திங்களைத் தன் தலையில் அணிகலனாகக் கொண்டிருக்கிறது இப்பொதிய மலை என்ற உண்மையையும் உணரலாம். மலையின்கண்-ணிருந்து வெள்ளிய அருவிகள் இழிந்து, மக்கட்கு ஆரா இன்பத்தை அளிக்கும். அவ்வருவிகள் பொன்னையும் முத்தை-யும் ஒருங்கே சொரியும் இயல்புடையன. பொங்கி எழும் இவ் வழகிய அருவிகளின் காட்சியானது, அங்கயற்கண்ணம்மை, தன் அடியவர்கட்குத் திருவருள் சுரந்து பொழியுந்தன்மையை நினைவுபடுத்துகின்றது.

> ''தேமருவிய மதிதவழ் குடுமித்
> தென்பொதியம்''
>
> ''பொன்முத்துஞ் சொரியும் வெள்ளருவிப்
> பொதியமலை''
>
> ''அங்கயற்க ணம்மைதிரு வருள் சுரந்து பொழிவ தெனப்
> பொங்கருவி தூங்குமலை பொதியமலை''

இயற்கை யாவினும் இறைவன் காட்சியைக் காணும் கவினுறு உள்ளமன்றோ கவிஞர் உள்ளம்? எனவேதான், பொதியமலை வழங்கும் அருவி, அங்கயற்கண்ணியின் தண்ணருளை அடிகளாருக்கு நினைப்பூட்டியது!

வடக்கேயிருந்து வரும் காற்றை 'வாடை' என்பர் தமிழர்; தெற்கேயிருந்து தவழும் காற்றைத் 'தென்றல்' என்பர் வாடையைக் கண்டால் மனம் வருந்துவதும், தென்றலைக் கண்டால் மனம் களிப்பதும் தமிழர்க்கு இயல்பாகிவிட்டது. இத்தகைய தென்றல் பிறக்கும் இடம், தென்றிசைக்கண் உள்ள பொதியமலையாகும். பொதியிற் பிறக்கும் தென்றல் எனும் குழவி, மெல்ல மெல்லத் தவழ்ந்து, மதுரையின்கண் தங்கிப் பாண்டியப் பெருமன்னரால் வளர்க்கப் பெற்றுச் செந்தமிழ்ப் புலவர் பெருமக்களின் பொய்யாநாவில் பொருந்துகின்றது என்பதைச் சிலம்புச் செல்வர் இளங்கோவடிகளார் தம் செந்தமிழ்க் காப்பியத்தில்,

> "மலயத் தோங்கி மதுரையில் வளர்ந்து
> புலவர் நாவிற் பொருந்திய தென்றல்"

என்கின்றார். இளங்கோவடிகளைப் பின்பற்றியோ என்னவோ, குமரகுருபர அடிகளாரும் தமது குறத்தில் 'தென்றல்' எனும் பசுங்குழவி, திளைத்து விளையாடும் இடம் பொதிய மலையாகும் என்று குறிப்பிடுகின்றார்.

> "தென்னந் தமிழும் பசுங்குழவித் தென்றற்
> கொழுந்தும் திளைக்குமலை" (14)

இம்மலையானது, இயற்கை எழிலனைத்தும் தற்பாற் கொண்ட பெருமலையாக விளங்குகின்றது. மதம் பொழியும், கொலைத் தொழில் மிக்க ஆண்யானைகள் இடையறாமல் பிளிறும் மலை; கருமணல் போன்ற அழகிய கூந்தலையுடைய அங்கயற்கண்ணி ஆளும் மலை; பொன்மயமான உச்சியையும், தடஞ்சாரலையும் உடைய மலை; கந்தவேள் களிப்புடன் விளையாடும் மலை; கனக நவமணிகள் விளையும் மலை!

இத்தகு மலையின் ஒரு பக்கத்தே சிங்கங்களுடன் கொடிய ஆண்யானைகள் சேர்ந்து விளையாடும். மற்றொரு

பக்கத்தே, கடுஞ்சினங் கொண்ட புலிகளுடன் இளமையான பெண்மான்கள் மகிழ்ந்து விளையாடும். பிறிதொரு புறத்தே, வெங்கரடிகளுடன் மரை என்னும் காட்டுமான்கள் சுற்றித் திரியும். வேறொரு புறத்தே, விடங்கொண்ட பாம்புகளுடன் மடமயில்கள் மகிழ்ந்தாடும்! இவ்வாறு மாறுபட்ட உயிரினங்களனைத்தும், தத்தம் வேற்றுமை மறந்து ஒற்றுமையுடன் வாழ்கின்றன இம்மலை-யில், என்று கூறும் குமரகுருபரர், அதற்குரிய ஏதுவினையும் எடுத்துக் காட்டுகின்றார். அழகிய பரந்த இந்நிலவுலகத்தை ஆளும் அபிடேகவல்லியானவள், தன் வெண் கொற்றக் குடை-யின் கீழ், அம்பொன் முடி சூடியவளாய் வீற்றிருக்கின்றாள். அவள் அருட்பார்வையில் அனைத்துயிர்களும் வேற்றுமை நிலையை மறந்து, ஆடிப்பாடி அகமகிழ்கின்றன. என்னே கவிஞர்தம் கற்பனை!

வளமான இப்பொதியமலை, அம்மையின் அருளைப் பெற்றதோடன்றித் தமிழின் தொடர்பையும் பெற்றிருக்கிறது. அவ்வாறு தமிழ்த் தொடர்பைப் பெற்றிருப்பதற்குப் பல ஏதுக்கள் உள. சிறப்பாக ஒன்று சொல்லலாம். ''என்றுமுள தென்றமிழ் இயம்பியிசை கொண்ட'' அகத்திய முனிவன் வாழும் மலை இது! 'கும்பமுனி' என்று பலராலும் குறிப்பிடப்-படுபவனான இவ் அகத்தியன், செந்தமிழின் சீர்மை உணர்ந்து அதனைப் பலகாலம் பயிலுகின்றான். அதன் பெருமையை உரைக்கின்றான். அதனாலேயே பேரும் புகழும் பெறுகின்றான். 'தமிழ் முனிவன்' என்று தரணியோரால் போற்றவும் பெறு-கின்றான். இவன், இப்பொதியமலையைத் தனக்குரிய இடமாகத், தான் நிலையாகக் குடியிருப்பதற்குரிய மலையாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டான்!

'அபிடேகவல்லி' என்னும் அழகுப் பெயர் கொண்ட அங்கயற்கண்ணம்மையின் திருவடிகள், சிலம்புகள் அணியப் பெற்றவையாயிருக்கும். தாமரை மலர்கள் சூழப்பட்டவையா-யிருக்கும். அத்தாமரை மலர்கள் புதியனவாதலின், நறுமணங்-கமழ்வனவாய்த், தேன் நிரம்பியவனவாய் இலங்கும். எனவே தேனைப் பருகும் வண்டினங்கள் அவற்றைச் சூழ்ந்து பண்ணிசைக்கும். இத்தகைய திருவடிகளைத் தன் மனத்தில் கொண்டு நாளும் தொழுது கொண்டிருக்கும் இயல்புடையவன் அகத்தியன்!

''வண்டிருக்கு கறைக்கமல மலரிருக்கும்
பரிபுரத்தான் மனத்துள் வைத்துக்
கொண்டிருக்குந் தமிழ்முனிவன்
குடியிருக்கும் பொதியமலை'' (13)

''திங்கண்முடி சூடுமலை தென்றல் விளையாடுமலை
தங்குபுயல் சூழமலை தமிழ்முனிவன் வாழுமலை''! (13)
''சிங்கமும்வெங் களிறுமுடன் விளையாடு மொருபால்!
சினப்புலியு மடப்பிணையுந் திளைத்திடுமங் கொருபால்!
வெங்கரடி மரையினொடும் விளையாடு மொருபால்!
விடவரவு மடமயிலும் விருந்தயரு மொருபால்!
அங்கணமர் நிலங்கவிக்கும் வெண்கவிகை நிழற்கீழ்
அம்பொன்முடி சூடுமெங்கள் அபிடேகவல்லி
செங்கமலப் பதம்பரவும் கும்பமுனி பயிலும்
தென்பொதிய மலைகாண்மற் றெங்கண்மலை யம்மே''
(16)

தமிழ்முனிவன் வாழும் இப் பொதியமலையில், தமிழ் மட்டுமன்றி, வடமொழி பயிலும் இடமாகவும் திகழ்கிறது என்கிறார் அடிகளார்.

''மந்தமா ருதம்வளரு மலையெங்கண் மலையே
வடகலைதென் கலைபயிலு மலையெங்கண் மலையே''
(15)

குறத்தியின் இயல்பு

மலைவாழ் மகளாகிய குறத்தியின் இயல்பைக் குமரகுருபரர் அறிந்த திறம், நம்மையெல்லாம் வியப்பில் ஆழ்த்துகிறது. ஆண்டவனின் அன்பைப் பெற்ற அருட் கவிஞர்க்கே இத்தகைய திறம் உண்டாகும் என்பதற்கு இக்குறம் ஒன்றே தக்க சான்றாகும்.

குறத்தி, குறி சொல்லத் தொடங்குமுன், பொதிய மலையில் வாழ்பவள் என்று தன்னைப் பற்றிக் கூறுகின்றாள். ''தமிழ்முனிவன் குடியிருக்கும் பொதியமலைக் குறத்தி நானே'' என்று கூறுவதிலேதான் அவள் பெருமிதங்கொள்கிறாள். மலையில் வாழும் எளிய குறத்திக்குக்கூடத் தமிழ்மொழியின்-மாட்டு இருக்கும் பற்று எத்துணையது என்பதை நமக்கு

சுட்டிக் காட்டுவது போல் இக்கூற்று அமைந்துள்ளது.

'தான் கருதியது கைகூடுமா கூடாதா' என ஏங்கிய உள்ளத்துடனிருக்கும் ஒருத்தியிடம், தன்னைப் பற்றியும், தான் வாழுமிடத்தைப் பற்றியும் நெடுநேரம் வரையிலும் சொல்லிக் கொண்டே குறத்தி இருப்பாளானால் அவளிடத்தே வெறுப்புத் தோன்றிவிடுமன்றோ? இஃது உலகியல் தானே? இதனை நன்குணர்ந்த குறத்தி, சட்டெனத் தன் பெருமையை நிறுத்திக் கொண்டு, தலைவியைப் பார்த்து. "வஞ்சியே! அபரஞ்சியே! மடமயிலே! வரிக்குயிலே!" (5) என்று புகழத் தொடங்கி, "அம்மே! பழியஞ்சிச் சொக்கர் கொஞ்சியே உன்னை இலிக் கூடுவார்" என்று ஆறுதல்மொழி புகழ்கின்றாள். அதன் பின்னரே தலைவி, குறத்தியின் கூற்றைச் செவிமடுக்கலானாள்.

"நங்கையே! நீ உன் மனத்தில் கொண்டுள்ள கருத்து இதுதான் என்பதையும், அது நிறைவேறுமா, இல்லையா என்பதையும் சொல்லவேண்டுமாயின், உன் மோதிரம் அணிந்த செங்கையை நீட்டு. மதுரேசர் உன்னைச் சேரவேண்டுமாயின் ஆடை ஒன்றும், காசு ஒன்றும் எனக்குமுன் கொண்டுவந்து வை!" என்கின்றாள் குறத்தி. அவ்வாறே தலைவியும் வைக்கின்றாள். உடனே குறத்தி மேலும் பேச்சைத் தொடர்கின்றாள்:

"அம்மே! உன் கைக் குறியும், முகக் குறியும் நன்றாகவே உள்ளன. இப்பொழுது இடப்பக்கத்தில் எழுந்த கவுளி(பல்லி)-யின் சொல்லும் நலமுடையதாகவே உள்ளது. மகேசுவரி, நாராயணி, கௌமாரி, இந்திராணி, காளி, அபிராமி வராகி ஆகிய ஏழு கன்னிமாரும் என்முன் வந்து, 'இக்குறி மிக நன்று' என்கின்றனர். என் இடது கண்ணும் துடிக்கின்றது. இவற்றைவிட நன்னிமித்தங்கள் வேறுள்ளனவோ? சொக்கர் தம் தோளை மேவுவாய்" என்கின்றாள்.

இவ்வாறு சொல்லிக்கொண்டு வரும்பொழுது தலைவியின் மனம் சிறிது மாறுபடுவதாக உணர்கிறாள் குறத்தி. முகக் குறிப்பால் உள்ளக் குறிப்பை உணரும் ஆற்றல் படைத்தவளா-யிற்றே குறத்தி! எனவே, தலைவி கொண்ட ஐயத்தைப் போக்க முற்படுகின்ற குறத்தியானவள் தன் குலத்தின் உயர்வை விளம்புகின்றாள்.

"'அம்மே! பச்சைக் கொடி போன்றவளாகிய அங்கயற்-கட் பாவை பெற்றெடுத்த முருகன், ஆறிருதோள் உடையவன்; வெட்சிமாலை சூடியவன்; நறுமணமிக்க குஞ்சியைக் கொண்டவன்; அத்தகைய அண்ணலுக்குப் பெண் கொடுத்த குறவர் குலம் எம் குலம்!''

''கச்சைப் பொருது மதர்த்தெழுந்து
கதிர்த்துப் பணைத்த மணிக்கொங்கைப்
பச்சைப் பசுங்கொம் பங்கயற்கட்
பாவை பயந்த வாறிருதோட்
செச்சைப் படலை நறுங்குஞ்சிச்
சிறுவன் றனக்குப் பெருந்தடங்கட்
கொச்சைச் சிறுமி தனைக்கொடுத்த
குறவர் குலமெங் குலமம்மே'' (17)

"'கூடல், புனவாயில், பிராமன்மலை, பரங்குன்றம், குற்றாலம், ஆப்பனூர், பூவணம், நெல்வேலி, ஏடகம், ஆடானை, கானையார் கோயில், சுழியல், இராமேசுரம் திருப்பத்தூர் ஆகிய பாண்டி நாட்டுத் திருத்தலங்கள் பதினான் கேயன்றி 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற முறையில் பிறநாடுகளையும் எம் நாடுகளாகக் கருதிக் காடும் மலையும் திரிந்து குறி சொல்லிக் காலங்கழித்து வருகின்றோம்.

எம் குலம், குறி சொல்வதற்கென்றே பிறந்த குலம். குறி சொல்வதில் தன்னிகரற்ற குலம். தொன்று தொட்டே குறி சொல்லிச் சொல்லிப் பண்பட்ட குலம்.

பொற்றொடியணிந்த வள்ளிநாயகிக்கு இளைய பூங்-கொடியே என் தாயைப்பெற்ற பாட்டியாவாள். அவள் அன்றொருநாள், 'மாயவன் மார்பில் திருமகள் தங்குவாள்' என்று சொன்னாள். என் பாட்டி பெற்ற பெண் பிள்ளைகளில் ஒருத்தியும், என் பெரிய தாயும் ஆனவள், 'மலரயனார் திரு-நாவில் நாமகள் நடம்புரிவாள்' என்று கூறினாள். என்னைப் பெற்றெடுத்த நற்றாயானவள், 'இந்திரன் தோளைச் சுந்தரி சேர்வாள்' என்று புகன்றாள். இவர்களேயன்றி, என் சிற்-றன்னை சொன்ன குறிகளோ கணக்கிலடங்கா! மேற்சொன்ன குறிகளனைத்தும் மெய்யாயின என்பதை உலகம் நன்கறியும்.

கன்னிமார் அறிய இவ்வுண்மையை உரைக்கின்றேன். பொய் கூறும் வழக்கம் எங்கள் குலத்திற்கில்லை. நாங்கள் சொல்லிய வாறே அனைத்தும் நடைபெறும்!

நல்ல குடியிற் பிறந்து வளர்ந்தவளாதலின், நான் சொல்லும் குறிகளும் தப்புவதில்லை. எடுத்துக்காட்டாகச் சிலவற்றை மட்டும் செப்புகின்றேன். முன்னொருநாள், தடாதகைப்பிராட்டியார் பிறந்தநாளில் அவள் முகக்குறியைப் பார்த்த அளவிலேயே 'இவள் உலக முழுவதையும் ஒரு சேர ஆள்வாள்' என்றேன். வேறொருநாள். அவள் மெய்க்குறிகள் அனைத்தையும் பார்த்து 'அன்னையே! உனக்கோர் ஆண் மகவு பிறக்கும்; உலகத்தை அரசாளும்' என்றேன். அவையெல்லாம், எவ்விதச் சிறு மாற்றமுமின்றி உள்ளவாறே நிகழ்ந்தன எனவே நான் சொல்லும் குறி பலிக்கும். இதில் ஐயம் கொள்ள வேண்டாம்''.

''பொற்றொடிவள் ளிக்கிளைய பூங்கொடியென் பாட்டி
பூமகண்மா யவன்மார்பிற் பொலிவளென்று சொன்னாள்!
மற்றவள்பெண் களிலெங்கள் பெரியதாய் கலைமான்
மலரயனார் திருநாவில் வாழ்வளென்று சொன்னாள்!
பெற்றவெங்க ணற்றாயுஞ் சுந்தரியிந் திரன்றோள்
பெறுமென்றாள் பின்னெங்கள் சிறியதா யம்மே
சொற்றகுறிக் களவிலையங் கன்னிமா ரறியச்
சொன்னேன் பொய் யலநாங்கள் சொன்னது சொன்னதுவே'' (22)

''முன்னொருநா ளம்மைதடா தகைபிறந்த நாளின்
முகக்குறிகண் டிவளுலக முழுதாளு மென்றேன்!
பின்னொருநாள் கைக்குறிபார்த் தம்மையுனக்கெங்கள்
பிஞ்ஞகர்தா மணவாளப் பிள்ளையென்று சொன்னேன்!
அன்னையவண் மெய்க்குறிக ளனைத்தையும் பார்த்துனக்கோ
ராண்பிள்ளை யுண்டுபிறந் தரசாளு மென்றேன்!
சொன்னகுறி யெல்லாமென் சொற்படியே பலிக்கும்
தொகுத்துநீ நினைந்தகுறி யினிச்சொலக்கே ளம்மே!'' (23)

—இவ்வாறு குறத்தி கூறியதும் தலைவியின் முகம் சிறிது மலர்ந்தது. இதுவே தக்க தருணம் என்று எண்ணிய குறத்தி ''ஒரு வேளைக்கு ஆகும் கஞ்சியும், என் குழந்தை தலைக்கு எண்ணெயும், ஆடையும் தந்தால், நீ நினைத்த எல்லாவற்றையும் ஒன்றுவிடாமல் உரைப்பேன்'' என்கின்றாள்.

பின்பு, குறத்தியின் வேண்டுகோட் கிணங்கத் தலைவி-யானவள் தரையை மெழுகிக் கோலமிட்டுக் கொழும்புகை காட்டி, மணி பரப்பித் தென்மேற்கு மூலையில் பிள்ளையார் வைத்து, அறுகு சாத்தி, விளக்கும் நிறைநாழியும் வைக்கிறாள். அன்றியும், மூன்று நாழியுடன் மூன்று கைப்பிடியளவு நெல்-லையும் அளந்து கொண்டு வந்து வைக்கின்றாள். முறத்தில் ஒருபடி நெல்லும் குறத்திமுன் வைக்கப்படுகிறது. இவை-யெல்லாம் செய்து முடித்தபின், மங்கையருக்கரசியாம் அங்-கயற்கண்ணமுதை மனத்துள் வைத்து நினைத்த குறியைச் சொல்லத் தொடங்குகிறாள் குறத்தி.

தன்முன் வைத்த முந்நாழி நெல்லில் ஒரு நாழி நெல்லை முக்கூறுபடுத்துகிறாள். ஒரு கூற்றை இரட்டைப்பட எண்ணு கிறாள் அவ்வாறு எண்ணுகிறபோது முடிவு ஒற்றைப்பட அமைந்தது. ''அம்மே! ஒற்றைப்பட நெல் அமைந்தது நல்ல குறிக்கு அடையாளம். பிள்ளையாரும் வந்து தோன்றிவிட்-டார். நீ எண்ணிய யாவும் கைகூடும். என் ஆணையாக எங்கள் குலத்துக் கன்னிமார் ஆணையாகக் கூறுகிறேன். எக்குறி தப்பினும் இக்குறி தப்பாது'' என்று சொல்லிக் கொண்டு வரும்போதே மேலும் சில நன்னிமித்தங்களை உணர்கிறாள் குறத்தி.

''அம்மே! நெல் அளந்தபோது நற்குறி தோன்றியது. நல்ல இடத்தில் பல்லி சொல்லியதும் நன்றாயிற்று. தற்போது, கற்புடைப் பெண்டிர் பேசிய பேச்சும் நன்மையாக உள்ளது. அவர்களிட்ட தும்மலும், புற்றின் மேலுள்ள ஆந்தையின் குரலும் நமக்கு நன்னிமித்தங்களையே உணர்த்துகின்றன'' என்று கூறித் தலைவியின் கைவண்ணத்தைக் கழறுகிறாள் குறத்தி.

''அம்மே! உன் கைகளில் கனகநவமணிகள் புரளும். வண்டுகள் மொய்க்கும் மலர் கொய்ய வருந்திடும் உன் கைகள்.

வருந்தி வந்தோர்க்கு நவநிதிகளைச் சொரிந்திடும் உன் கைகள். தாமரை மலர்ந்தாற்போன்ற பொலிவு மிக்கவை உன் கைகள். புழுகுறு நெய்ச் சொக்கர் புயங்களைத் தழுவுந்-தன்மையன உன் கைகள். எங்கள் மதுரை நாயகியைத் தொழுதிடும் உன் கைகள்!

''அம்மையே! நீ உன் செங்கையை இப்பொழுது உன் மார்பில் வைத்திருப்பதானது, அபிடேகச் சொக்கர் உன்னை அணைவர் என்பதற்குரிய அடையாளமாகும்! இந்த மேற்குத் திக்கினில் நீ, உன் கையை எடுத்ததானது, இன்று மாலைப் பொழுதில் மதுரேசர் வந்து உன்னையடைவர் என்பதற்குரிய அடையாளமாகும்! நீ இப்பொழுது கையின்மேல் கையைக் கட்டியிருப்பது, நீ நினைத்தவை யாவும் தப்பாமற் கைகூடும் என்பதற்குரிய அடையாளமாகும்! நீ தற்போது செம்மையான மணிவயிற்றில் கை வைத்திருப்-பது, சிறுவர் பதினறுவரையும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்-வாய் என்பதற்குரிய அடையாளமாகும்''.

''அம்மே! உன் கையில் தனரேகை ஓடுகிறது. அதனால் அளவற்ற செல்வம் உனக்குக் கிடைக்கும். தமருக ரேகை செல்கிறது அது, மதுரேசர் புயத்தில் உன்னைச் சேர்க்கும். இப்பக்கத்தில், புத்திரரேகை வேறு எவருக்குமேயில்லாத அளவில் அமைந்துள்ளது. உன் தோளில் உள்ள மச்சமானது. அங்கயற்கண்ணம்மை தன்னோடு இருக்கத் துணை புரியும்''.

''அம்மேநின் செங்கையைநின் கொங்கையில்வைத் ததுதா
னபிடேகச் சொக்கருனையணைவரென்ற குறிகாண்!
இம்மேலைத் திகையினிற்கை யெடுத்ததுவு மலர்தாம்
இன்றந்திப் பொழுதினில்வந் தெய்துவரென் றது காண்!
கைம்மேற்கை கட்டியதுந் தப்பாம லுனக்குக்
கைகூடு நீநினைத்த காரியமென் றதுகாண்!
செம்மேனி மணிவயிற்றிற் கைவைத்த தினிநீ
சிறுவர்பதி னறுவரையும் பெறுவை யென்ற தம்மே''
(29)

''அங்கைத் தலத்துத் தனரேகை யளவில் செல்வந்தரு முனது
செங்கைத் துடிதென் மதுரேசர் செம்பொற் புயத்திற் சேர்க்குமால்
இங்கிப் படிபுத் திரரேகை யெவர்க்கு மிலையிப் படி தோளில்
தங்கு மறுவங் கயற்கணம்மை தன்னோ டிருக்கத் தருமம்மே'' (30)

எனவே இங்குக் கூறப்பட்ட குறத்தியானவள், வாய்மைக் குடியிற் பிறந்தவளாகவும், பிறர் உள்ளத்தை உணரும் ஆற்றல் பெற்றவளாகவும், தன் சொல்வன்மையால் எத்தகை-யோரையும் ஈர்க்கும் இயல்புடையவளாகவும், கைக்குறியன்றி முகக்குறி, மெய்க்குறி, பல்லி சொற்குறி, கற்புடை மகளிர் வாய்ச்சொல், தும்மல், ஆந்தையின் குரல் முதலியவற்றை நன்கு உணர்ந்தவளாகவும், கைரேகை பார்ப்பதில் திறம் பெற்றவளாகவும் விளங்குகிறாள். தான் கூறும் குறிக்குக் கைம்மாறாகப் பெரும்பொருளை விரும்பாமல், சிறிதளவு நெல்லும், உடுத்த ஆடையும், தன் குழந்தைக்கு எண்ணெயும் ஒரு காசும் மட்டுமே விரும்புகின்றாள் எனின் இவளுடைய உள்ளம் எத்தகையது என்பதை உணர முடிகின்றது. பாண்டி நன்னாட்டிற் பிறந்தமையால், பிறநாட்டையும் தன்னாடாகக் கொள்ளும் உயர்ந்த பண்பையும் இவளிடத்தே காணமுடி-கின்றது. 'கன்னிமார் வந்து இக்குறி நன்று என்கின்றார்' (11), கன்னிமார் அறியச் சொன்னேன். (22) என்று சொல்வதன் வாயிலாகக் கன்னியர் எழுவர் மீது அவள் கொண்டிருக்கும் அளவற்ற பற்றுப் புலனாகும்.

குறத்தியர் குடியிருப்பு

பொதிய மலையில் வாழும் இக்குறத்தியர் வாழ்வு மிகவும் வியக்கத்தக்கது. இவர்கள் வாழ்வு, எளிமையுடையது; இயற்கையோடு இயைந்தது; வஞ்சங் கலவாதது; விருந்து பேணும் தன்மையது; கடவுளைப் போற்றும் பொற்புடையது.

குறத்தியர், செழித்த கொடியிலிருந்து தாழ உண்டான வள்ளிக் கிழங்கை அகழ்ந்து எடுப்பர். மலையின்கண்ணுள்ள குறிஞ்சி மலர்களைத் தேர்ந்தெடுத்து அவற்றை முல்லைக் கொடியில் வைத்துத் தொடுப்பர். இனிய பழத்தைப் பிழிந்த சாற்றுடன் தேனையும் சேர்த்து வாய்மடுப்பர். பசுந்தழையுடன் இனிய தேனையும் விருந்தினருக்குக் கொடுப்பர். கொடுமை-

யுடைய வேங்கைப் புலியினது தோலைப் படுக்கையாகக் கொண்டு துயில்வர். காலையில் எழுந்து கயற்கண்ணி காலில் விழுந்து வணங்குவர் அதனால் தம் தீவினையைக் கெடுப்பர்!

''கொழுங்கொடியின் விழுந்தவள்ளிக்
கிழங்குகல்லி யெடுப்போம்!
குறிஞ்சிமலர் தெரிந்துமுல்லைக்
கொடியில்வைத்துத் தொடுப்போம்!
பழம்பிழிந்த கொழுஞ்சாறும்
தேறலும்வாய் மடுப்போம்!
பசுந்தழையு மரவுரியு
மிசைந்திடவே யுடுப்போம்!
செழுந்தினையு நறுந்தேனும்
விருந்தருந்தக் கொடுப்போம்!
சினவேங்கைப் புலித்தோலின்
பாயலிற்கண் படுப்போம்!
எழுந்துகயற் கணிகாலில்
விழுந்துவினை கெடுப்போம்!
எங்கள்குறக் குடிக்கடுத்த
வியல்பிதுகா ணம்மே!''

இத்தகைய இயல்புடைய குறச்சாதியார் குடியிருக்கும் ஊரைக் 'குறிச்சி' என்று சொல்வதுண்டு. இக்குடியிருப்பைச் சுற்றிலும் பலவகைப்பட்ட விலங்குகள் திரியும். அவற்றைப் பிடிப்பதற்கெனக் குறவர்களால் 'தீபகம்' என்றதொரு விலங்கு வளர்த்துப் பழக்கப்படுத்தப்படும். இத் தீபகத்தோடு, கொடிய புலியானது பிரியத்துடன் இருக்கும். மலைக்குகைகளில் வரி-வேங்கையானது, கடமானோடு பிணக்கின்றி உறங்கும் குறவர் வீட்டுக்கொல்லையில் பெண்மானும் இளமையான பெண் யானையும் அன்புடன் விளையாடும். மலையில் விளையும் புதிய தினையை இடித்தற்கென்று மலைப்பாறை-களில் செதுக்கப்பட்ட உரல்கள் உண்டு. அவை முற்றத்தைச் சூழ இருக்கும். அங்கே, தினையைக் காய வைத்திருப்பர் குறத்தியர். கருமலையின் ஒரு பக்கத்தில் வெண்மையான அருவி பேரொலியுடன் கீழிறங்கும். சில வலைகளும் வார்களும் வீட்டின் முன்புறத்து இறப்பில் தொங்கிக் கொண்டிருக்கும். சிறிய 'துடி' முதல் பெரிய முரசம் வரையிலும் உள்ள கருவிகள், எல்லாத் திக்குகளிலும் ஒலிக்கும். இத்தகு இயற்கைச் சூழலுடையது குறவர் குடியிருப்பு!

> ''புல்வாயின் பார்வையைவெம் புலிப்பார்வை யிணங்கும்!
> புதுத்தினைகல் லூரற்பாறை முன்றிறொறு முணங்-
> கும்!
> கல்விடரில் வரிவேங்கை கடமானோ டுறங்கும்!
> கருமலையில் வெள்ளருவி கறங்கிவழிந் திறங்கும்!
> சில்வலையும் பல்வாரு முன்னிறப்பிற் றூங்கும்!
> சிறுதுடியும் பெருமுரசுந் திசைதொறுநின் றேங்கும்!
> கொல்லையின்மான் பிணையுமிளம் பிடியும்விளை
> யாடும்!
> குறிச்சியெங்கள் குறச்சாதி குடியிருப்ப தம்மே''(19)

அங்கயற்கண்ணாரமுது

இந்நூலின் பாட்டுடைத் தலைவி அங்கயற்கண்ணம்மை யாதலின், அவளின் சிறப்பை நூல் முழுமையும் பரக்கக் காணலாம். எனினும் அவளைப்பற்றிச் சொல்லுமிடங்களி-லெல்லாம் சொக்கநாதனையும் உடன்சேர்த்துச் சொல்லு-கின்றார் குமரகுருபர அடிகளார். அவனின்றேல் அவளில்லை; அவளின்றேல் அவனில்லையன்றோ? 'எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்பள்' என்பதற்கேற்ப இருவரும் இணைபிரியாதிருப்பவராவர். பெண்ணின் நல்லாளாகிய உமையுடன் உறைவதனாலேயே 'பெருந்தகை' எனப்பட்டான் பிஞ்ஞகன்! இதுபற்றியே ''பெண்ணின் நல்லாளொடும் பெருந்தகையிருந்ததே!'' என்றனர் அடியவர். எனவே, அங்கயற்கண்ணியின் அருட்டிறத்தைக் கூறும்போதெல்லாம் ஆலவாயண்ணலின் அருமையையும் புலப்படுத்திச் செல்கிறார் அடிகளார்.

''அங்கயற்கணாயகியானவள் தெய்வத்தார் கொண்ட 'கருங்குழலை' உடையவள்; மதுராபுரி மருவியவள்; பாண்டி-யர் குலக்கொடியாய்த் திகழ்பவள்; கற்கண்டு போன்ற இனிய மொழியை உடையவள்; தாமரை மலர்போன்ற திருவடிகளை யுடையவள்; சிலம்பைக் காலில் கொண்டிருப்பவள்; அழகிய கண்களை உடையவள்; மறைகளை உண்டாக்கியவள்; இந்த மாநிலத்தைப் புரப்பவள்; அம்பொன்முடியைத் தலையிற் கொண்டிருப்பவள்; பச்சைக் கொடிபோன்ற நிறமுடையவள்; அறுமுகனைப் பெற்றெடுத்தவள்; மங்கையர்க்கெல்லாம் அரசியாக விளங்குபவள்'' என்று பலவாறு ஏத்திப் புகழ்ந்துரைக்-கிறார் அடிகளார்.

இவற்றையெல்லாம்விட. நூலின் இறுதியில் இருபது கண்ணிகளால் அங்கயற்கண்ணியைப் புகழும் திறமையே விஞ்சி நிற்கின்றது. ஆசிரியரின் உள்ளக்கிடக்கையை இங்கே-தான் உணர முடிகின்றது. முதல் ஒன்பது கண்ணிகளில் அங்கயற்கண்ணியின் தசாங்கம் சொல்லப்பட்டுள்ளது.

அவள் பொன்னை வைத்துப் பொதிந்து வைத்திருக்கும் ஆடையைப் போல வெண்புயலோடு தண்பனி மூடிக்கொண்-டிருக்கும் தென்பொதியமலையை ஆட்சி புரிபவள். கடலைச் சேராத வையை யென்னும் பொய்யாக் குலக் கொடிக்கு உரிய-வள். 'அன்பாண்டு கல்வலிது' என்று செவ்வைத் தமிழ் தேர் ஔவைப் பிராட்டியாரால் பாடப்பட்ட தென்பாண்டி நாட்டை உடையவள். அமலன் போர்வையைப் போன்ற பொன்மாடஞ் சூழ்ந்த பன்மாடங்களைக் கொண்ட மதுரையைக் கொண்-டிருப்பவள். இறையவர் கரும்பென விரும்பும் வேப்பமாலையை அணிந்திருப்பவள். 'கனவட்டம்' எனும் பாண்டியற்குரிய குதிரையைக் கொண்டிருப்பவள். திசை எட்டும் திறைகொண்ட யானைகளைப் பெற்றிருப்பவள். அழகிய மீனக்கொடியை வெற்றியால் நாளும் உயர்த்துபவள். திக்கெட்டும் தனியாணை செலுத்துபவள்.

இவ்வாறு வரையாறு நாடு நகர் துரகம், முதலிய தசாங்கம் இக்கண்ணிகளில் பேசப்படுகிறது குமரகுருபரர் தம் ஐந்தாம் அகவையில் குமரனருள் பெற்றவுடன் பாடிய 'கந்தர் கலிவெண்பா'விலும் (66 முதல் 74 வரை) முருகப்பெருமானின் தசாங்கம் உரைத்துள்ளமை ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது.

இவ் வொன்பது கண்ணிகளிலும் பின்னர் வரும் கண்ணி-களிலும் சொல் நயம், உவமை, உருவகம், தற்குறிப்பேற்றம் முதலான அணிநயங்கள் அழகுற அமைந்துள்ளன. தெய்வப் புலமைத் திருவள்ளுவர் ஈரடியால் உள்ளக் கருத்தை உரைத்த வாறே, தெய்வப் புலவர் குமரகுருபரரும், ஈரடியால் தன் கருத்தை உரைத்த திறம், சிந்தித்துச் சிந்தித்து இன்புறத்-தக்கது. காட்டாகச் சில காண்போம்:

வையையாற்றைப் பேசவந்த அருட் கவிஞர் 'நதிபதியை அணையாத வைகை' என்கின்றார். வையையாறு, கடலொடு கலப்பதில்லையென்றும், அது பாம்பாற்றுக் காலோடு கலந்து விடுவது என்றும் புலவர் கூறுவர். ஆனால் குமரகுருபரர் கூறும் ஏதுவோ பிறிதொன்றாக இருக்கிறது. "கடலானது கற்புத்

தன்மை சிறிதும் கொண்டதன்று; ஆறுகள் பலவற்றையும் புணரும் இயல்புடையது; எனவே, கற்பொழுக்கம் கெட்ட அக்கடலுடன் கலப்பது, தன் கற்புக்கு இழுக்கு என்று கருதும் வையையாறு அதனுடன் கலக்கவில்லை'' என்கின்றார் குமர குருபரர்! என்னே கவிஞரின் கற்பனை உள்ளம்! பெண்டிர்க்கும் ஆடவர்க்கும் கற்புநெறி தலையாயது என்பதையன்றோ கவிஞர் கூறுகின்றார்?

> ''பலநதிகள் புணர்ந்தநதி பதியையணை யாதவைகைக்
> குலநதித்தண் டுறைச்செல்வி பேரைச் சொல்லாய்
> பாடநான்'' (32)

'யான், எனது என்னுஞ் செருக்கறுத்தவர்' ஆயினும், தாம் பிறந்த தென்பாண்டி நாட்டைத், தண்டமிழ் நாட்டை, அதனை யாளும் அங்கயற்கண்ணியைச் சொல்லும்போதெல்லாம் 'எங்கள் நாடு, எங்கள் நாயகி' என்றே சொல்லும் உயரிய தன்மையை அடிகளாரிடத்தே காணலாம். ''எங்கள் அங்கயற்கண்ணி'' (6), ''எங்கள் அங்கையற்கண்ணாண்ட தமிழ்ப் பாண்டி நன்னாடு'' (21) என்று புகழும் புலவர், 'பஞ்சவன்றன் நான்மாடக் கூடலிற் கல்வலிது' (தனிப்.) என்று ஔவையாரால் பாராட்டப்பெற்றது எங்கள் தென்பாண்டி நாடு என்கின்றார்.

> ''அன்பாண்டு கல்வலிதென் றவ்வைபா டியவெங்கள
> தென்பாண்டி நாட்டாடன் பேரைச்சொல்லாய்
> பாடநான்'' (33)

'கனவட்டம்' என்பது பாண்டிய அரசர்க்குரிய குதிரையாகும். பாண்டியனின் மகளாதலின் அங்கயற்கண்ணிக்கும் அக்குதிரை உரியதாகும். அது, விரைந்து செல்லும ஆற்றலுடையது. அது செல்லும் விரைவால் எங்கும் தூசி நிறைகிறது. அப்பொழுது வானமண்டிலம் வரையிலும் பரவுகிறது. நாளும் வட்டமிடும் பகலவனுடைய விண்பரியை மூடி அதுவும் மண்பரிதான் என்று கருதுமாறு செய்துவிடுகிறது அந்தத் தூசி!

> ''தினவட்ட மிடும்பரிதித் திண்பரிமண் பரியாக்கும்
> கனவட்ட வாம்பரியாள் பேரைச்சொல்வாய்
> பாடநான்'' (36)

இரந்துண்ணும் இயல்புடையவன் சிவபெருமான். புலால் நாற்றமுடைய பிரமகபாலத்தில், வாயில்தோறும் நின்று பிச்சை

எடுப்பவன். அத்தகையவனுக்குத் தான்கொண்ட ஏழுலக அரசாட்சியையும் அளித்தாள் அங்கயற்கண்ணி. என்னே அவளின் அருளுள்ளம்! பிச்சையெடுத்த பிஞ்ஞகன், பெருமாட்டியை மணமுடித்துக் கொண்டமையாலன்றோ பேரரசைப் பெற்றான். இக்காலத்து ஆடவர் சிலர், தம் மனைவி வாயிலாகச் சொத்துரிமை பெறுகின்ற தன்மையைப் பிஞ்ஞகன் வாழ்வு நினைப்பூட்டுகிறது

''ஊன்கொண்ட முடைத்தலையிற் பலிகொண்டார்க்-
குலகேழும்
தான்கொண்ட வரசாட்சி தந்தாளைப் பாடுவனே''.
(43)

இவ்வாறு அரசுரிமை மட்டும் தந்ததுடன் அமையவில்லை அங்கயற்கண்ணாயகி! சிவபெருமான், உயிரோடிருப்பதற்கும் காரணமாக இருந்தவள் என்றால் அம்மையின் அருளை என்னென்பது? அமரர் பொருட்டு நஞ்சுண்டான் இறைவன். தன் கைவிசேடத்தால் அந்த வெவ்விடத்தையும் அமிழ்தமாக்கினாள் இறைவி. அவ்வாறு அவள் அன்று செய்யாவிடில் சிவனின் நிலைமை என்னவாயிருக்குமோ?

''எவ்விடத்துந் தாமாகி யிருந்தவருக் கருந்தவரும்
வெவ்விடத்தை யமுதாக்கும் விரைக்கொடியைப்
பாடுவனே''(46)

தான் வாழவேண்டுமாயின் தன் கணவனும் நன்கு வாழ வேண்டுமென்னும் தன்மையை - தன் கணவனின் இன்ப துன்பத்தில் தனக்கும் பங்குண்டு என்று கருதும் இயல்பை-ஒரு மனைவி கொண்டிருத்தல் வேண்டும் என்ற உயரிய நோக்கத்தையன்றோ கவிஞர் இவ்வடிகளில் நமக்குக் காட்டுகின்றார்!

'பெம்மான்' என்றும், 'பெருந்தகையோன்' என்றும் பலராலும் போற்றப்படும் சிவபெருமானிடம் சின்னஞ்சிறு பிள்ளைக்குரிய விளையாட்டுத்தனமும் இருக்கிறது. வெளியே உள்ள அண்டங்கள் என்று சொல்லப்படும் மணற் சிற்றிலை ஓயாமல் அழிப்பதும், பின்னர் அவற்றை ஆக்குவதுமாகிய விளையாட்டைச் செய்கிறான் அவன்! அவன் செய்யும் செயல்களைக் கூர்ந்து நோக்கி அவனுக்குப்'பித்தன்' என்று பெயரிட்டனரே அது மிகமிகப் பொருத்தம்! அப்பித்தனுடன் சேர்ந்து விளையாடுகிறாள் விரைக்கொடியாள்!

> ''வைத்தபகி ரண்டமெனு மணற்சிற்றி லிழைத்திழைத்-
> தோர்
> பித்தனுடன் விளையாடும்பெய்வளையைப் பாடுவனே''
> (47)

விளையாட்டுத்தனத்தை உடையவனாயினும் பழி எனின் அஞ்சும் பண்புடையவன் சிவபெருமான். 'பழியெனின் உல-குடன் பெறினும் கொள்ளாப்' பேராண்மை அவன்பாலுண்டு. எனவேதான் 'பழியஞ்சிச் சொக்கர்' என்ற சிறப்புப் பெயரை அவனுக்கு வழங்கினர் அடியவர். அவன், பாடல் சான்ற பாண்டி நன்னாட்டின் தலைநகராம் மதுரையில் வாழ்கிறான். அவனுடன் அரசோச்சுகிறாள் அங்கயற்கண்ணம்மை!

> ''பரசிருக்கும் தமிழ்க்கூடற் பழியஞ்சிச் சொக்கருடன்
> அரசிருக்கு மங்கயற்கண் ணாரமுதைப் பாடுவனே''
> (50)

—இவ்வாறு பல்வகை நயங்களும் ஒருங்கே அமையுமாறு அங்கயற்கண்ணாரமுதைப் பரவுகின்றார் குமரகுருபர அடிகளார்!

புராணக்கருத்தும் பிறகுறிப்பும்

ஊர்த்தொடர்பாக அமைந்த சிற்றிலக்கியங்களில், அவ்வூர் வரலாற்றை இடையிடையிற் பெய்து இனிது விளக்கு-வர் கவிஞர். எனவே இச்சிற்றிலக்கியமான மதுரை மீனாட்சி யம்மை குறத்திலும் குமரகுருபர அடிகளார், மதுரையில் நிகழ்ந்த திருவிளையாடற் கருத்துக்களையும் ஆங்காங்கே சொல்லிச் செல்கின்றார்.

மதுரை நகரானது, மேகத்தைத் தன்பால் ஈர்க்கும் பூக்கள் பொருந்திய அன்னங்கள் பயிலத்தக்க பொழில்கள் பலவற்றைக் கொண்டது. செந்நெல் முத்தும், கன்னல் முத்தும் ஒளிவிட்டுத் திகழ்தற்கு இருப்பிடமாய் அமைந்தது. பொன் மாடங்கள் பல, சூழப் பெற்றது. 'கூடல்' என்னும் பெயர் கொண்டது. தமிழால் புகழ் பெற்றது. அழகிய சொக்கரும் அங்கயற்கண்ணியும் ஆட்சி நடத்தும் பெருமைக்கு உரியது.

> ''பூமருவிய பொழிறிகழ் மதுராபுரி'' (1)
>
> ''செந்நென்முத்துங் கன்னன்முத் துமொளி
> திகழ்மதுரை'' (2)

''அன்னம் பயிலும் பொழிற்கூடல்'' (14)

''பொன்மாடஞ் சூழ்ந்த...பன்மாடக் கூடல்'' (34)

மதுரையில் நிகழ்ந்த அறுபத்து நான்கு திருவிளையாடல்களைத் 'திருவிளையாடற் புராணம்' விரித்துரைக்கிறது. மலயத்துவச பாண்டியனின் மகளாகத் தடாதகைப் பிராட்டியார் தோன்றியமையும், அவள் தனியாணை செலுத்தியமையும், அவள் திக்குவிசயம் சென்றமையும், சிவனை மணமுடித்து அவனுக்குத் தன் ஆட்சி அளித்தமையும், பின்னர் - உக்கிர குமாரரைப் பெற்றெடுத்தமையும் பின்வரும் பாடல்கள் குறிப்பிட்டுச் செல்கின்றன :

''இனியாணை யிலையரசர்க் கென்றுதிசை
யெட்டுமொரு
தனியாணை செலுத்தினாள் பேரைச்சொல்லாய்
பாடநான்'' (39)

''கருமலையச் செருமலையுங் கைம்மலைய மன்னர்தொழ
வருமலையத் துவசனருண் மடக்கொடியைப்
பாடுவனே'' (40)

''விண்புரக்கும் கதிர்மௌலி முடிகவித்து
வெண்குடைக்கீழ்
மண்புரக்கு மபிடேக வல்லியைநான் பாடுவனே'' (41)

''வானவர்கோன் முடிசிதறி வடவரையிற் கயலெழுது
மீனவர்கோன் றனைப்பயந்த மெல்லியலைப்
பாடுவனே'' (44)

''திக்கயங்கள் புறங்கொடுப்பத் திசையெட்டுந்
திறைகொண்ட
கைக்கயத்தை மேற்கொண்டாள் பேரைச் சொல்லாய்
பாடநான்''

சோழமன்னன் கரிகாற் பெருவளத்தான், போர் மேற்கொண்டு வடதிசை செல்ல, இமயப் பெருமலை பகையாகக் குறுக்கிட்டு அவனைத் தடுத்து நிறுத்தச், சினங்கொண்ட வேந்தன், தன் 'செண்டு' என்னும் படைக்கலத்தால் அதனை அடித்துத் திரித்து, மீளவும் அதனைப் பண்டுபோல் நிறுத்திப் புலியைப் பொறித்திட்டான். இச் செய்தியைச் சிலப்பதிகாரமும், கலிங்கத்துப்பரணியும் பின்வருமாறு உரைக்கின்றன :

"அசைவி லூக்கத்து நசைபிறக் கொழியப்
பகைவிலக் கியதிப் பயங்கெழு மலையென
இமையவர் உறையுஞ் சிமையப் பிடர்த்தலைக்
கொடுவரி யொற்றிக் கொள்கையிற் பெயர்வோற்கு"
(சிலப்பு. 5 : 95-98)

"செண்டு கொண்டுகரி காலனொரு காலினிமையச்
சிமைய மால்வரை திரித்தருளிமீள வதனைப்
பண்டு நின்றபடி நிற்கவிது வென்று முதுகிற்
பாய்பு லிப்பொறி குறித்தது மறித்த பொழுதே"
(கலிங்க : இராச : 1)

கரிகாலன் பொறித்த பொறியேயன்றிப் பாண்டியரிட்ட கயற்பொறியும், சேரரிட்ட விற்பொறியும் இமயப் பொருப்பில் உள!

"கயலெழுதிய இமயநெற்றியின்
அயலெழுதிய புலியும்வில்லும்" (சிலம்பு. 17 : 1:2)

இவ் வரலாற்றுக் குறிப்பை உளத்துட் கொண்ட குமர குருபரர், பின்வருமாறு உரைக்கின்ற அழகு கண்டின்புறத் தக்கது :

"செண்டிருக்கும் வடகரையிற் சேலிருக்கும்
அரசிருக்கும்" (3)

"வானவர்கோன் முடிசிதறி வடகரையிற் கயலெழுது
மீனவர்கோன்" (44)

உக்கிரகுமார பாண்டியரும், மகாமேரு மலைமேல் செண்டாயுதம் எறிந்தார்; அதனையே ஈண்டு அடிகளார் குறிப்பிடுகிறார் என்று கூறினும் பொருந்தும்.

நகைச்சுவை

நகைச்சுவையுடன் பாடும் ஆற்றலும் குமரகுருபரருக்கு அமைந்துள்ளது என்பதனை இக்குறப்பாட்டு எடுத்துரைக்கிறது.

குறத்தி, குறி கூறும்போது சொல்லுகின்றாள்: "குறத்திதானே என்று என்னை எவரும் எளிதாகக் கருதி விடவேண்டாம். என் குலம் மிகமிக உயர்ந்தது. நன்றாக ஆராய்ந்து பார்த்தால், அனைவரும் அடிபணிந்து தொழுகின்ற

சிவபெருமானும் ஒரு குறவனேயாவான் அவன் பெற்றெடுத்த பிள்ளையும் குறவர் குலத்தைச் சார்ந்தவனே சிவபெருமான், வெள்ளிமலைக்குரிய குறவன்; அவன் மகன் முருகன், பழனி-மலைக்குறவன். அத்தகைய குறவனாகிய முருகன், எங்கள் வீட்டில்தான் பெண் கொண்டான். அதனால எம் குறவர், வள்ளிக்குச் சீதனமாக மலையைத் தந்தனர்'' என்று குறத்தி சொல்வது நகைச்சுவையாக உள்ளது.

> ''வெள்ளிமலைக்குறவன்மகன் பழனிமலைக் குறவனெங்கள்
> வீட்டிற் கொண்ட
> வள்ளிதனக் கேகுறவர் மலையாட்சி சீதனமா
> வழங்கி னாரால்'' (20)

மனைவி ஒருத்தி யிருக்க, இரண்டாந்தாரமாக வே-றொருத்தியை மணம்புரிந்து அல்லலுக்கு ஆட்படும் கணவன் நிலையைச் சுட்டிக் காட்டுகின்றார் அடிகளார்.

''எவளோ ஒருத்தி, என் கணவனின் உள்ளத்தைக் கவர்ந்துவிட்டாள். நான் இருக்கும்போதே, அவளையும் இரண்டாந்தாரமாக மணமுடித்துக் கொண்டான் என் குறவன், அதன் விளைவு என்னாயிற்று தெரியுமா? நான் பெற்றெடுத்த பிள்ளை அவன் தலைக்குக்கூட எண்ணெய் கிடைப்பதில்லை. அவன் உடுத்திக்கொள்ளச் சிறுதுணியும் கிடைப்பதில்லை, போகட்டும். அந்தக் கள்ளியை மணமுடித்துக் கொண்டானே என் குறவன்-அவனுக்காவது, கஞ்சி கிடைக்குமா என்றால் அதுதானும் இல்லை!'' என்று குறத்தி, மாற்றாள் வந்தபின் ஏற்பட்ட இல்லத்து நிலைமையை எடுத்துக் காட்டுகின்றாள்.

> ''பிள்ளைதனக் கெண்ணெயிலை யரைக்குமொரு
> துணியிலையென்
> பிறகே வந்த
> கள்ளிதனைக் கொண்டவன்றே குறவனுக்கு மெனக்குமிலை
> கஞ்சி தானே!'' (20)

சில செய்திகள்

இக்'குறத்'தின் வாயிலாகப் பின்வரும் சில செய்திகளை நாம் தெரிந்து கொள்ள முடிகின்றது:- பல்லி சொல்லுக்குப் பலன் உண்டு; நெற்குறி, கற்புடை மகளிர் வாக்கு, தும்மல், ஆந்தை குரல் இவற்றால் நிமித்தம் பார்த்தல் உண்டு; பெண்டிர்க்கு இடக்கண் துடிப்பது நன்று; தனரேகை செல்வந்-

தருவது; மகளிரின் தமருகரேகை திருமணத்திற்குரியது, புத்திர ரேகை, பிள்ளைப் பேற்றைக் காட்டுவது; குறி கேட்குங்கால், தரையை மெழுகிக் கோலமிட வேண்டும். குங்குமப் புகை காட்ட வேண்டும்; நவமணிகளைப் பரப்ப வேண்டும். மலரையும் அறுகம் புல்லையும் சாத்த வேண்டும்; நெய் விளக்குடன் நிறைநாழி வைக்க வேண்டும்.

அணிநயங்கள்

இம் மீனாட்சியம்மை குறம், மிகச் சிறிய நூலாயினும், இதன்கண் உவமை, உருவகம், உயர்வு நவிற்சி, தற்குறிப்பு முதலான அணிநயங்களும், முரண் தொடையும் ஆங்காங்கு விரவியுள்ளன என்றறியும்போது குமரகுருபரரின் பழுத்த தமிழ்ப் புலமையை யாரும் பாராட்டாமல் இருக்க முடியாது. சில நயங்கள் மட்டும் கீழே காண்போம்:

''பொன்பொதியும் துகிலெனவெண் புயலொடுதண் பனிமூடும்
தென்பொதிய மலையாட்டி பேரைச் சொல்லாய் பாடநான்'' (31)

இதில், வெண்புயலும், தண்பனியும் துகிலுக்கு உவமை யாக வந்துள்ளன. எனவே இஃது உவமையணியாம்.

''அங்கயற்கண்ணியானவள், தன் புருவமாகிய வில்லை வளைத்துக், கண்களாகிய அம்புகளைச் சிவனின் தோளை உருவிச் சல்லுமாறு போர் தொடுத்தாள்'' என்று ஆசிரியர் கூறுவது உருவக அணிக்கோர் எடுத்துக் காட்டாம்.

''வெம்புருவச் சிலைகுனித்து விழிக்கணைக ளிரண்-டெந்தை
மொய்ம்புருவத் தொடுத்தெய்த மொய்குழலைப் பாடுவனே'' (42)

''கனவட்டம் எனும் குதிரை, தன் கால் தூளியால் பரிதியினுடைய குதிரையாகிய விண்பரியை மூடி மண்பரியாகச் செய்யும்'' (36) என்று கூறுவது, உயர்வு நவிற்சியணியை எடுத்துக் காட்டுகிறது.

இயற்கையாகக் கடலொடு கலக்காத வையையாற்றுக்குக் கற்புத் தன்மை கற்பிப்பது (32) தற்குறிப்பேற்ற அணிக்குச் சான்றாகும்.

பின்வருவனவற்றில் முரண்தொடை அமைந்திருப்பது கற்பார்க்குப் பெருவிருந்தாகும்:

''வடமலைக்கும் தென்பொதியும்'' (12)
''வடகலை தென்கலைபயிலும்'' (15)
''கருமலையில் வெள்ளருவி'' (19)
''சில்வலையும் பல்வாரும்'' (19)
''சிறுதுடியும் பெருமுரசும்'' (19)
''எண்டிசைக்கும் வேம்பாய் எம் இறையவர்க்குக்
கரும்பாகும்'' (35)

ஒப்புமைப் பகுதி

இக் 'குறத்தி'ல் வந்துள்ள பாடல்களிற் சில, பிற நூற்கருத்துக்களுடன் ஒத்துள்ளன என்பதைப் பின் வருவனவற்றால் உணரலாம் :

''கூடல்புன வாயில்கொடுங் குன்றுபரங் குன்று
குற்றால மாப்பனூர் பூவணநெல் வேலி
ஏடகமா டானைதிருக் கானப்பேர் சுழியல்
இராமேசந் திருப்புத்தூ ரிவைமுதலாந் தலங்கள்''
(21)

என்று குமரகுருபரர் குறிப்பிடுவது,

''கூடல் புனவாயில் குற்றால மாப்பனூர்
ஏடகநெல் வேலி யிராமேசம்-ஆடானை
தென்பரங்குன் றஞ்சுழியல் தென்றிருப் புத்தூர் காசி*
வன்கொடுங்குன் றம்பூ வணம்''

என்ற தனிப்பாடல் திரட்டில் வந்துள்ள வெண்பாவை ஒட்டி அமைந்துள்ளது. அன்றியும், இத்தலங்கள், பரஞ்சோதியாரின் திருவிளையாடற் புராணத்தில், மதுரைக் காண்டம் திருநகரச் சிறப்பில் வந்துள்ள சில தலங்களையும் நினைவுபடுத்துகின்றன.

---

* காசி-கானப்பேர். இது, பாட்டில் 'கானம்' என அமைந்திருக்கலாம் போலும்!

பல்லியின் சொல்லை நிமித்தமாகக் கொள்வதும், பெண்டிர் இடக்கண் துடித்தல் நன்மைக் கறிகுறி எனக் கருது-வதும் ஆகிய இவை, பின்வரும் கலிப்பாவால் அறியலாம்.

''பல்லியும் பாங்கொத் திசைத்தன
நல்லெழில் உண்கணும் ஆடுமால் இடனே''
(கலி : 11 : 21, 22)

''இரட்டைப்பட வெண்ணினபோ தொற்றைப்பட்ட-தம்மே'' என்று நெல்லெண்ணிச் சொல்லும் குறத்தியின் கூற்றை, ''உதயமான சுளகு நெல்லு மொற்றைப்பட்டதாத-லால்'' என்ற அருணைக்கலம்பகம் (50) நினைவுபடுத்துகிறது. ''சிறுவர்பதி னறுவரையும் பெறுவை'' என்று அவள் சொல்லும்-போது, ''ஒருத்தி யகமுடை யான்சிந்தை வரநடந்து பதினாறு பிள்ளை பெற்றே யகமகிழ்ந்தாள்'' என்ற தனிப்பாடல் நினை-வில் வரும்.

கருத்து வேறுபாடு

இதுகாறும், 'மீனாட்சியம்மை குறத்'தின் சிறப்புக்களை-யும், பல்வேறு நயங்களையும், குமரகுருபர அடிகளாரின் செய்யுட்டிறத்தையும் கண்டின்புற்றோம். இனிமேல், இக் குறத்தை இயற்றிய ஆசிரியரைப் பற்றிய கருத்து வேறுபாட்டை ஆய்தல் இன்றியமையாததாகும்.

குமரகுருபர அடிகளாரால் பாடப்பெற்ற நூல்கள் பல. அவற்றுள் ஒன்று இம் மதுரை மீனாட்சியம்மை குறம் என்று மேலே கண்டோம். ஆனால் 'குமரகுருபர சுவாமிகள் பிரபந்-தங்கள்' என்னும் பெயரால் இந்நூலைப் பதிப்பித்து, வெளி-யிட்ட தமிழ்த் தாத்தா, டாக்டர். உ.வே. சாமிநாதய்யர், பின்-வருமாறு குறிப்பிட்டுள்ளார் :

''மீனாட்சியம்மை இரட்டை மணி மாலை, மீனாட்சி-யம்மை குறம். சிவகாமியம்மை யிரட்டை மணி மாலை என்-னும் மூன்று பிரபந்தங்களும் குமரகுருபர சுவாமிகள் இயற்றி-யனவாக அச்சுப் பிரதிகளிற் காணப்படுகின்றன. ஆயினும், திருப்பனந்தாள் காசிமடத்திலுள்ள பழமையான ஏட்டுப் பிரதி-களிலும் வேறு பழைய ஏட்டுப் பிரதிகளிலும் இம் மூன்றும் காணப்படவில்லை. பரம்பரையாகப் பாடம் சொல்லுபவர்கள்

இம் மூன்றையும் குமரகுருபர சுவாமிகள் நூல்களோடு சேர்த்துச் சொல்வதில்லை. என்னுடைய தமிழாசிரியராகிய மகாவித்து-வான் மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்களும் வேறு பல வித்து-வான்களும் இவற்றைக் குமரகுருபர முனிவர் வாக்காகக் கருது-வதில்லை. இவற்றின் சொற்பொருளமைதிகளை ஆராய்ந்தா-லும் இவற்றிற்கும் இம் முனிவர் இயற்றிய வேறு பிரபந்தங்-களுக்கும் உள்ள வேறுபாடு தெளிவாகப் புலப்படும்''.

ஆனால் மீனாட்சியம்மை குறத்தைப் பன்முறையும் நுணுகி நோக்கினால், குமரகுருபரர் பாடிய பிற நூல்கட்கும் இதற்கும் மிகுந்த ஒற்றுமை உள்ளது என்பதை உணரலாம்.

மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழில் முதலாவ-தாக வந்துள்ள விநாயகக் கடவுள் துதியானது 'கார் கொண்ட' என்று தொடங்கப்பட் டிருப்பது போலவே, இக் குறத்தின் காப்புச் செய்யுளிலும் 'கார் கொண்ட' என்று தொடங்கப்-பட்டுள்ளது. அன்றியும், பிள்ளைத் தமிழ்க் காப்புச் செய்யுளில் 'கார் கொண்ட, போர் கொண்ட, தார் கொண்ட, வார் கொண்ட' என்று ஒவ்வோர் அடியிலும் வந்துள்ளமை போன்-றே குறத்திலும் வந்துள்ளது. பிள்ளைத் தமிழிலும், மதுரைக் கலம்பகத்திலும் 'சித்தி விநாயகர்' புகழப்படுகின்றார்; அதே-போன்று குறத்திலும் புகழப்படுகின்றார்.

பின் கண்டவை, குறத்திற்கும், குமரகுருபரரின் பிற நூல்கட்கு மிடையே உள்ள ஒற்றுமையைக் காட்டுவனவாகும்:

''அந்தண்பொதியத் தடஞ்சாரல்
அருவி சொரியுங் குளிர்முத்தம்'' (பி,தமிழ்)

''பொன்னும் முத்துஞ் சொரியும்
வெள்ளருவிப் பொதியமலை'' (குறம்)

''வடகலை தென்கலை யொடுபயிலும்'' (முத்துக் பி. தமிழ்)

''வடகலை தென்கலை பயிலும் மலை'' (குறம்)

''அம்பொன்முடி முடிசூடு மபிடேக வல்லி''(ம.கலம்பகம்)

''அம்பொன்முடி முடிசூடுமெங்கள் அபிடோ வல்லி'' (குறம்)

''குழகர் மகற்கு மகட்கொடுத்த
குடியிற் பிறந்த குறமகள்யான்'' (காசிக்கலம் பகம்)

''செச்சைப் படலை நறுங்குஞ்சிச்
சிறுவன் றனக்குப் பெருந்தடங்கட்
கொச்சைச் சிறுமி தனைக்கொடுத்த
குறவர் குலமெங் குலமம்மே'' (குறம்)

''பைந்தமிழ்த்தேர் கூடற்பழியஞ்சி யார்க்கு''
(ம. கலம்பகம்)

''பரசிநுக்கும் தமிழ்க்கூடற் பழியஞ்சிச் சொக்கர்'' (குறம்)

''தென்னந் தமிழி னுடன்பிறந்த
சிறுகால் அரும்ப'' (மீ.பி. தமிழ்)

''தென்னந் தமிழும் பசுங்குழவித்
தென்றற் கொழுந்தும்'' (குறம்)

''அங்கயற் கண்ணமுதை மங்கையர்க் கரசியை''
(மீ.பி. தமிழ்)

''மங்கையருக் கரசியெங்க ளங்கயற்கண்ணமுதை''
(குறம்)

''கனவட்டந் தினவட்ட மிடக்கண்டு களிப்பதே''
(ம. கலம்பகம்)

''தினவட்டம்..... ...கனவட்டம்'' (குறம்)

''குறியில னலதொரு குணமில னெனநினை''
(ம. கலம்பகம்)

''இலைக்குறியும் குணமுநமக் கென்பார்க்கு'' (குறம்)

''ஊனேறு முடைத்தலையில் கடைப்பலிகொண்டு''
(ம. கலம்பகம்)

''ஊன்கொண்ட முடைத்தலையில் பலிகொண்டார்க்கு''
(குறம்)

''எவ்விடத்தி லெப்பொருளும் ஒருங்குண்ண லிருக்குநீ
வெவ்விடத்தை யெடுத்தமுது செய்ததுமோர் வியப்-
பாமே'' (சிதம். செய்யுட்கோவை)

''எவ்விடத்தும் தாமாகி......அமுதாக்கும்'' (குறம்)

இவைபோன்ற எண்ணிறந்த ஒற்றுமைகளைக் குமரகுருபரர் வாக்காலேயே எடுத்துக்காட்டலாம். மேலும் குறத்தி குறி கூறுவதாக அமைக்கப்பட்ட நூலாதலின், குறத்தி பேசும் இயல்புக்கேற்பக் குமரகுருபரர் இந் நூலைச் சிறிது எளிமையாக ஆக்கியிருக்கலாமன்றோ? எனவே இம்மதுரை மீனாட்சி

யம்மை குறம், குமரகுருபர அடிகளாராலேயே பாடப்பட்டிருத்தல் வேண்டும் எனத் துணிவதால் இழுக்கொன்றுமில்லை!

இந்நூலினிறுதியில் பின்வரும் வாழ்த்துப் பாடல் ஒன்று உள்ளது:

> ''நீர்வாழி தென்மதுரை நின்மலனா ரருள்வாழி!
> கார்வாழி யங்கயற்கட் கன்னிதிரு வருள்வாழி!
> சீர்வாழி கச்சிநகர்த் திருமலைபூ பதிவாழி!
> பேர்வாழி யவன்செல்வம் பெரிதூழி வாழியவே''

இந்நூல், மதுரையில் திருமலைநாயக்க மன்னர் முன்னிலையில் அரங்கேற்றப்பட்டது. ஆதலின், 'திருமலை பூபதி வாழி' என்று அடிகளார் அவரை வாழ்த்துகின்றார். ஆனால் 'கச்சி நகர்' என்று குறிப்பிடப்பட்டிருப்பதைக் கொண்டு, சாமிநாதய்யரவர்கள் 'கச்சிநகர்த் திருமலை பூபதி என்பவர் இந்நூலாசிரியரை ஆதரித்த உபகாரி' என்று குறிப்பெழுதுகிறார். திருமலை பூபதி என்னும் பெயர் திருமலைநாயக்கரையே குறிக்கும். அன்றியும், கச்சி நகருடன் திருமலை மன்னர் தொடர்புகொண்டிருந்தார் என வரலாற்றாசிரியர் சிலர் சொல்வதனையும் நினைவு கொளல் வேண்டும். 'திருவாலவாயுடையார் கோயிற் றிருப்பணிமாலை' என்ற நூலில், திருமலை நாயக்கரைப் பற்றிப் பேசுங்கால், ''புனவேலி தந்தனன் கச்சித் திருமலை பூபதியே'' (83) என்று அந்நூலாசிரியர் குறிப்பிடுகின்றார். எனவே, திருமலை நாயக்கர் காலத்தில் வாழ்ந்த குமரகுருபரர், மன்னர் முன்னிலையில் பாடிய நூலே, இம் மதுரை மீனாட்சியம்மை குறம என்று துணியலாம்! இவற்றையெல்லாம் அறிஞர் உலகு ஆராய்ந்து முடிவு கட்டுதல் வேண்டும்.

முடிவுரை

மதுரை அங்கயற்கணாயகி குறம் என்னும் இம்மதுரை மீனாட்சியம்மை குறமானது, கற்றுவல்ல பெரும் புலவர்க்கு மட்டுமன்றி ஏனையோர்க்கும் ஈடிலா இன்பத்தை அளிப்பதாகவும், சொல் நயமும், பொருள் நயமும் அணி நயமும், ஒருங்கே பெற்றுப் படிப்பவர்க்கும், படிக்கப் பக்கம் நின்று கேட்பவர்க்கும் செந்தமிழ்த் தேனை வாரி வழங்குவதாகவும் இலங்குகின்றது. இத்தகைய நூலைத் தமிழ்ப் பெருமக்கள் அனைவரும் கற்றுப் பெரும்பயன் பெற்றுப் பெருவாழ்வு வாழ்வார்களாக!

வாழ்க குமரகுருபரர் திருப்பெயர்!

5

# "பிறவா நெறிதரும் பேரூர்"

முன்னுரை

> "தண்ணடை இனங்க ளானும் தழைத்திடும் பாடி யானும்
> புண்ணுடைப் படைக்கை வேடர் பொருந்திய சீறூ ரானும்
> மண்ணடை உலகின் மிக்க வளம்பல தழுவி நாளும்
> விண்ணிடை உலகம் நாண மிளிர்ந்தது கொங்கு நாடு!" (பேரூர்ப்புரா:திருநா:73)

எனக் கச்சியப்ப முனிவரால் ஏத்தப்பட்ட பெருமை வாய்ந்தது 'கொங்கு நாடு'. அதன்கண் அமைந்த ஊர்களுள் பெருமை பெற்றது 'பேரூர்'! இதனைப் 'பிறவா நெறிதரும் பேரூர்' எனப் போற்றுவர் அறிஞர்! இத்திருத்தலச் சிறப்புரைப்பது 'பேரூர்ப்புராணம்'. இந்நூலின்கண் எடுத்தோதப்படும் நாட்டு வளம்பம், நகர் வளப்பம், சுந்தரமூர்த்தி நாயனார் பெருமை, பட்டீசுவரப் பெம்மானின் அருட்டிறம் எனப் பலவாம். அவற்றுள் ஒரு சில ஈண்டு விளக்கப் படுகின்றன.

நாட்டின் அமைப்பும் சிறப்பும்

இத் தமிழ்கூறு நல்லுலகம், பண்டு பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவற்றுள் ஒன்று 'கொங்குநாடு'! தமிழ் நாட்டில், மேற்குத்தொடர்ச்சிமலை ஓரமாகக் காவேரியின் மேல்பாகத்தில், அதன் இருபுறமும் இருப்பது இக் 'கொங்கு நாடு'! இது சங்க காலந்தொட்டே தனித்து இருந்தது என்பர் அறிஞர். இது, பின்னர் 'வடகொங்கு' 'தென்கொங்கு' என இரு உட்பிரிவுகள் கொண்டதாகத் திகழ்ந்தது. சுந்தரமூர்த்தி காலத்தில் இப்பகுதி, 'மீ கொங்கு' எனப்பட்டது. 'மீ கொங்கில் அணிகாஞ்சிவாய்ப் பேரூரர் பெருமானை'' என்பது அவர் தேவாரம். அன்றியும் அவர் ''பேரூர் உறைவாய்ப் பட்டிப் பெருமான் பிறவா நெறியானே!'' என்றும் இங்குள்ள இறைவனைக் குறிப்பிடுகின்றார்!

இக்கொங்குநாடு, 24 உட்பிரிவுகளைக் கொண்டிருந்தது எனக் 'கொங்குமண்டல சதகம்' கூறும்.

இச் சிறந்த நாட்டிற்கு அணியாய், அருகில் அமைந்துள்ளவை பேரூரும், கோயமுத்தூரும். பேரூரைச் சுற்றி, வில்லைப்போல் வளைந்து நிற்பன ஐந்து மலைகள்! அவை; விட்டுணு மலை, பிரமமலை, உமாமலை, மருதமலை, வெள்ளியம்மலை. இம்மலைகளாகிய வில்லுக்கு ஓர் அம்பு அமைந்தாற்போல் 'காஞ்சிமாநதி' எனும் 'நொய்யலாறு' ஓடுகின்றது. இதன் கரையில் காட்சியளிப்பதே 'பேரூர்'! அறம், பொருள், இன்பம், வீடு எனச் சொல்லப்படும் இந் நான்கிலும் பெருஞ்சிறப்புக்குரியது 'வீடு'(மோட்சம்) அன்றோ? இத்தகு வீட்டின்பம் பெறுதற்கு நிலைக் களனாயிருப்பது இந்நகரமே ஆதலின் இதனைப் பேரூர்' என்றனர்! ''இரைத்தெழு கடல் தரும் வளத்திலும் வளம்பல தருதலின் 'பேரூர்' என்பர் பலபல ஆயிரம் பேர்!''

ஆசிரியரும் நூலும்

கொங்கு நாட்டின் வளப்பத்தைக் கூறும் நூல்களுள் குறிப்பிடத்தக்கது இப் 'பேரூர்ப் புராணம்'. ''ஆரூரார் பேரூர் அழுந்தூருள்ளார்'' என்று அப்பர் பெருமானாலும்; ''பேரூர் உறைவாய்ப் பட்டிப்பெருமான் பிறவா நெறியானே!'' என்று சுந்தரராலும், ''குலவும் கொங்கிற் காஞ்சிவாய்ப் பேரூர்''என்று தெய்வச் சேக்கிழாராலும், ''பட்டியாள்பவர் கொட்டியாடினர், பாரூ ராசூழ் பேரூர் ஆள்வாய் பெருமானே!'' என்று அருணகிரிநாதராலும் ஒருசேரப் புகழப்பட்டது இப்பேரூர்!

இத்தகு சிறப்புக்குரிய பேரூரைப்பற்றி எழுந்த நூலே 'பேரூர்ப்புராணம்' ஆகும். இந்நூலை அருளியவர் கச்சியப்ப முனிவர். ஏறத்தாழ 250 ஆண்டுகட்கு முன், தொண்டை மண்டலத்தில், தணிகைத் திருப்பதியில், காஞ்சிமா நகரத்து வழிவழிச் சைவ வேளாளர் குலத்தில் தோன்றியவர் இவர். சித்தாந்த சைவ சிவஞானபோத திராவிட மாபாடியத் தலைவராம் மாதவச் சிவஞானயோகிகளைத் தம் குருவாகக் கொண்டு, அவர்பால் பல இலக்கண, இலக்கியங்கள், தருக்கம், மெய்கண்ட சாத்திரம், பண்டார சாத்திரம் ஆகிய பல நூல்களும் ஓதி உணர்ந்து, 'மகாவித்துவான்' எனப் பெயர் பெற்று, அச் சிவஞான யோகிகள் மாணவர் பலருள்ளும்

தலைசிறந்தவராய் விளங்கியவர்! இவர் இயற்றிய நூல்களில் குறிப்பிடத்தகுவன: திருத்தணிகைப் பதிற்றுப்பத்தந்தாதி, விநாயக புராணம், சென்னை விநாயகர் பிள்ளைத் தமிழ், கச்சி ஆனந்த ருத்திரேசர் வண்டுவிடு தூது, கச்சி ஆனந்த ருத்திரேசர் பதிற்றுப் பத்தந்தாதி, பஞ்சாக்கர தேசிகர் அந்தாதி, திருவானைக்காப் புராணம், பூவாளூர்ப் புராணம், பேரூர்ப்-புராணம், திருத்தணிகைப் புராணம் எனப் பலவாம்!

இவற்றுள், 'பேரூர்ப் புராணம்' எனும் நூல், 'திரு-நாட்டுப் படலம்' முதல் 'விசேட பூசைப்படலம்' ஈறாக 36 படலங்களையும், 2220 திருவிருத்தப்பாக்களையும் கொண்டது.

நாட்டுப் படலத்தில் 'கொங்குவளம்'

பேரூர்ப்புராண நூலில், முதற்கண் காப்பு, கடவுள் வாழ்த்து, அவையடக்கம் முதலாயின உள. அவற்றையடுத்து அமைவது 'திருநாட்டுப் படலம்'. இஃது 75 பாக்கள் கொண்டது. இப்பாக்கள், கொங்கு நாட்டின் குன்றா வளங்களை எஞ்சாமல் எடுத்துரைக்கின்றன.

வில் எழுதிய கொடிவிளங்கும் தோள்களையுடையவன்; மகளிரின் மான்போலும் விழிகள் பதிந்து கிடக்கும் மார்பை-யுடையவன்; மாலைகள் மணம் வீசும் வெண்கொற்றக் குடையையுடையவன்! இத்தகைய சேரர் மரபினனான 'கொங்கன்' என்னும் மன்னன் ஆட்சி புரிந்த நாடே 'கொங்குநாடு'. சோழ, பாண்டிய நாடுகட்குக் குருவாக விளங்கும் நாடு இது. மலையமான் நாடும், கப்பமாக நாளும் பொருள்களைக் கொங்கு நாட்டுக்கு வழங்குவதால், யானை முதலிய செல்வங்களால் சிறப்புற்றோங்குவது இந்நாடு!

கொங்குநாடு, முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் எனும் நான்கனுள், 'நெய்தல்' தவிர ஏனைய மூன்று வளப்பங்களும் கொண்டு இலங்குவது கடலும் கடல் சார்ந்த பகுதியும் தானே, 'நெய்தல்'! கொங்கு நாட்டில் கடற்பகுதி இல்லை; எஞ்சிய மூன்றும் உண்டு. இதற்குக் கச்சியப்பர் கூறும் காரணம் வேறு!

கடல் நிலம், தாழை நிரம்பவுடையது. ஆனால், இத் 'தாழை' ஒரு காலத்தில் பொய் புகன்ற காரணத்தால், சிவ-பெருமான் திருமுடிக்குச் சூட்டப்படாமல் விலக்கப்படுவதாயிற்று. முன்னொரு காலத்தில், கடலைக் கடைந்தபோது, முதலில்

தோன்றியது நஞ்சுதானே! எனவே சிவபிரானால் வெறுக்கப்பட்ட தாழை, நஞ்சு இவற்றைக் 'கடல்' கொண்டுள்ளமையாலும்; எப்போதும் புலால் நாற்றம் வீசுகின்றதாலும், இக்கடலாகிய 'நெய்தல்' தவிர, ஏனைய மூன்றையும் கொண்டு திகழ்வது இக் 'கொங்கு நாடு' என்கின்றார் கச்சியப்பர். இதோ அப்பாடல் :

''இலவிதழி பாகனி விழிந்தமலர்க் கைதை
கலவியது காரமிழ்து கான்றதொழி யாத
புலவுடைய தென்றுகடல் போக்கிநில மூன்றிற்
குலவிவள மெத்தியது கொங்குவள நாடு!'' (5)

என்பது அவர் வாக்கு!

குறிஞ்சி வளம்

மேகங்கள். இக் கொங்குநாட்டு மலைகளில் கண்ணுறங்கும். மலையடுக்குகள், அருவிகளாகிய ஆரத்தை அணிந்திருக்கும். மலைகளுக்கு மேல், பிறைச் சந்திரன் தவழ்கிறான். அது. பார்வைக்கு யானைத் தந்தம் போல் தோன்றும், மேகம் முழங்குகிறது; அது, அவ் யானைமீது அமர்ந்து, முரசு அறைவதுபோல் காட்சியளிக்கும் மலை உச்சியில் மின்னல் மின்னும்; அது. அந்த யானையின் முகபடாம் போல் தெரியும்; மலையிலிருந்து அருவி விழும்; அது, அவ் யானையின் மதநீர் போலத் தோன்றும். இதனால், மலைகள் அனைத்துமே, அரசனின் பட்டத்து யானைகள்போல் சிறந்து விளங்குவனவாயின!

ஒருவர், தாம் விரும்பியது மிக இழிந்த பொருளாக இருப்பினும், அதனைப் பெறும பொருட்டு. விரும்பப் பெறாத மிகமிக மேலான பொருளாயினும் அதனை அழித்துவிடுவர்! அதுபோலத்தான், மலைவாழ் மக்களும், தினையை விதைக்கும் பொருட்டு, உயர்ந்த செம்மணிகள் துகளாக, மணமுள்ள அகில், சந்தனம் முதலிய மரங்கள் செறிந்த காட்டைத் தீயிட்டு அழித்தனர்!

மலைவாழ் மகளிர், அழகிய பற்களை உடையவர்கள்; அவை, மயிலிறகின் அடிக்குருத்துப் போல் காட்சி தரும். அம் மகளிரின் மொழியையும், சாயலையும் விரும்பி நிற்பனவாகிய கிளியும், மயிலும் அவற்றின் சிறப்புத் தமக்கு இல்லையே என

வருந்தி நிற்கும்! சரி, அம்மகளிரைக் கண்குளிரக் காணவாவது செய்வோமே என்று எண்ணி, அவர்கள் உறையும் நீண்ட பரண்களை நோக்கும். ஆயினும், அவர்களின் ஒளிமுகத்தைப் பார்க்க முடியாதவாறு, அவர்கள் 'கிளி' முதலிய பறவைகளை ஓட்ட, வீசுகின்ற வெண்கற்கள், தடையாய் நிற்கும்! 'இன்முகத்தைச் சரியாய்க் காணமுடியவில்லையே'! என, இன்முகங்காணா விருந்தினர் போல வருந்தும்! எத்தகைய கற்பனை பார்த்தீர்களா!

> ''முருந்து ழூரலார் மொழியையும் இயலையும் வேட்டு
> வருந்து கிள்ளையும் மஞ்ஞையும் வார்புனத் திதண்மேல்
> இருந்து ளாரென இன்புறும் இன்முகம் காணா
> விருந்தி னாரென வெதும்புறும் விலகுகைக் கவணால்!''
> (14)

முல்லை வளம்

குறிஞ்சி நிலவளம் இத்தகையது என்றால், காடும் காடு சார்ந்த பகுதியாம் 'முல்லை' நிலவளம் அதற்குக் குறைந்ததா? இல்லை!

குறிஞ்சியாகிய நிலமகளுக்கு இக் 'காடு' தான் நல்லாடை! இங்கே திருமகள் உலவுவாள். அத்தகைய செல்வச் செழிப்புற்றது இது! முல்லைநிலக் கருப்பொருள்களில் 'ஆனிரை' சிறப்புடையதன்றோ? அந்த ஆனிரைகளை - பசுக் கூட்டங்களைப் பாதுகாத்த பெருமைக்குரியன் கண்ணபிரான் அல்லனோ? அத்தகு சிறப்புக்குரிய பசுக்கூட்டங்களுக்கும் பஞ்சமே இல்லை!

''முல்லை சான்ற கற்பு' என்பது சங்கச் சான்றோர் வாக்கு. கற்புக்கு அடையாளம் — முல்லை! இங்குள்ள மங்கையர், குற்றமற்ற கற்புடையவர்; அதற்கு அடையாளமாகத் தம் நீண்ட கூந்தலில் நன்மணங்கமழும் முல்லைப் பூக்களைச் சூட்டிக் கொள்வர்! இவர்களது கற்பைப் பறைசாற்று முகமாகவே, எங்கு பார்த்தாலும் முல்லைப் பூக்கள் மலிந்து காணப்படுகின்றன.

சிவனடியார்க்கு, இம் முல்லை நிலமே, சிவபெருமானின் திருமேனியை நினைப்பூட்டுகிறதாம். அஃது எப்படி?

காளைகள் - ஒரு புறம்; மான்கள் - ஒரு புறம்; கொன்றையும்; ஆத்திமலரும் - ஒரு புறம்; திருமால் கோயிலும் - ஒரு

புறம்; பால், தயிர், நெய், கோசலம், கோமயம் என்னும் ஐந்து பொருள்களும் உண்டு. இவையெல்லாம் திருநீறு அணிந்த சிவனின் திருமேனியை நினைப்பூட்டத்தானே செய்யும்?

முல்லை நிலத்து ஆயர்குலப் பெண்டிர், கணவரோடு ஊடல் கொண்டு விட்டனர். ஊடல் எப்போது தணியும் என்று ஏங்குவது இயல்புதானே? மாலை நேரமும் வந்து விட்டது. புல்லாங்குழலின் இனிய ஓசை காதில் விழுகிறது. கன்றை நாடி வரும் தாய்ப்பசுவின் கழுத்திற் கட்டியுள்ள மணி ஓசையும் கேட்கிறது. கொழுத்த கன்றுகள்; தம் தாயைத் தேடிக் கத்துகிற இனிய ஓசையும் வருகிறது. இப்போது அப்பெண்டிர் துயரம், மேலும் மிகுதியாகுமன்றோ? நல்ல வேளை! அதோ, ஊடலைத் தணிக்கக் கணவன்மார் அனுப்பும் தூது வந்துவிட்டது. இப்போது ஒரே மகிழ்ச்சி தான்!

''வேய்மணிக் குழலினும் வெய்ய மாலையில்
தாய்மணிக் குரையிலும் தழைக்கும் கன்றுதேர்
வாய்மணிக் குறையினும் வழங்கு தூதினும்
ஆய்மணி அனையவர் அகம்த ழைப்பரே!'' (24)

என்கின்றார் கச்சியப்பர்!

மருத நில வளம்

இத்தகைய முல்லை நிலத்தைச் சுற்றிலும், வயலும் வயல் சார்ந்த பகுதியுமான 'மருதம்' காட்சியளிக்கின்றது.

மேகங்களுக்குத் தலைவன் இந்திரன். அவனோ உடல் முழுவதும் தாமரைக் கண்களைக் கொண்டுள்ளான். மேகங்களோ, ''நம் தலைவனாகிய இந்திரன், தாமரைக் கண்களைக் கொண்டு இலங்குவதால், இங்குள்ள தாமரை மலர்கள் தவழும் சோலைகளில் எல்லாம் மழை பொழிவாம்!'' என்று பொழியலாயின!

சோலைகளைக் காணுந்தோறும், மகளிரின் நினைப்பே கவிஞருக்குத் தோன்றுகிறது. குழையும் தோடுமாகிய காதணிகள் தொங்குகின்றன; கொடி போன்ற இடை அசைந்தாடுகின்றது; ஆடவர் விரும்பும் வண்ணம் கொங்களைக் காட்டுகின்றனர்; அன்னம் முதலிய பறவைகள் போல வியக்கத்தக்க குரல்களை ஒலிக்கின்றனர்; மழைபொழியும்

கருமேகம் போன்ற கூந்தல் அவிழத் திரிகின்றனர்; மலர்களாகிய கண்களால் விழிக்கின்றனர்; மதுவைத் தெவிட்ட உண்டு களிக்கின்றனர். குழை, தோடு, கொடி, கொங்கு, அன்னம் முதலிய பறவைகள், மேகம், மலர்கள், அவற்றின் தேன் ஆகிய இவற்றைத் தன்பால் கொண்ட சோலையைப் பார்த்தால் காமமிக்க பெண்களின் தோற்றமே முன்னிற்கிறது என்று கவிஞர் கூறுவது எத்துணைப் பொருத்தம்?

ஏரிகள் பல; ஒலி செய்யும் கால்வாய்களும் பல! நீரில் நண்டுகள்; வலம்புரிச்சங்கு போல் நீர்ச்சுழிகள்: அருகே நிழல் தரும் காஞ்சிமரங்கள்; தாமரை முதலான நீர்ப் பூக்கள! பொய்கைகளில் அன்னங்கள், எருமைகள்!

பாக்களை விரித்துரைக்கும் புலவர்களும், மரணமில்லாப் புலவர்களாகிய தேவர்களும் துதிக்கும் தெய்வத்தன்மை பொருந்திய காவிரி, பவானி, ஆமிராவதி, கங்கை என்று கூறப்படும் அத்தகைய உயர்வான காஞ்சி ஆறு, வெண்மை யான அலைகளை வீசிக் கொண்டு வயல்களைப் பாதுகாத்தது!

பேரூர்க் காஞ்சியாற்றில் வெள்ளம் பெருக்கெடுக்க உழவர் பெருமக்கள், கரைகளில் வந்து நின்று, பறை கொட்டிப் பள்ளத்தைத் தூர்த்து உயரமாகச் செய்கரை அமைத்தனர். உழவர்கள், கள்ளைக் குடித்து, உழவுத் தொழிலில் ஊக்கம் மிகுந்தனர். எருமைக் கடாக்களை உழுவதற்குக் கலப்பையில் கட்டினார்கள்; உழத் தொடங்-கினார்கள். துன்பம் வரும் என்று தெரியாமல், முன்பின் தெரியாத அயல் ஆடவரிடம் காதலிற் கவரப்பட்ட பெண்-களின் முகத்தைப் போலத் தாமரை அழகிழந்து காணப்பட்டது. நீதி செலுத்தும் அரசன் முன், அப்பெண்டிர் முகம் கவிழ்ந்து நிற்பது போலத் தாமரையும் தேனோடு கவிழ்ந்து நிலம் நோக்கி நிற்கும்!

உழவர்கள், தங்கள் மனைவியர்பால், 'களை எடுக்க' என்று கட்டளை இட்டனர். அவ்வளவுதான்! மீன் போலும் கண்களையுடைய உழத்தியர்கள், தம் இடை எனும் கொடி அசைய, அதில் வளரும் முன்தானை மேலே பறக்க, கையில் உள்ள சங்குவளை ஒலிக்க, ஒப்பற்ற தங்கள் உறுப்புக்களுக்கு மாறுபட்ட பகையை ஒழிப்போம் என்றுவயலில் இறங்கி-விட்டார்கள். இது, ஒருவகையில் போர்க்களக்காட்சியை நினைப்பூட்டுகிறது இதோ கவிஞர் கூற்று :

''கருங்களமர் களையென்னச் செங்கயற்கட் கடைசியர்கள்
மருங்குநெடுங் கொடிநுடங்க வளர்தானை மீச்செல்ல
நெருங்கியகை வளையொலிப்ப நிகரிறமதவயவத்துக் (கு)
ஒருங்கிகலும் பகைமுடிப்ப வொளிர்நறும்பூம் பணை-யடுத்தார்!''(51)

புறநகரும் அகநகரும்

இங்ஙனம் கொங்கு நாட்டு வளப்பத்தைத் திருநாட்டுப் படலத்தில் 75 பாடல்களால் விளக்கும் கச்சியப்பர், திருநகரப் படலத்தில் 96 பாடல்களால் பேரூரின் பெருமைதனைப் பாடுகின்றார்.

தாமரை மலரில் உள்ள பிரமனும், பிறதேவர்களும், விண்ணுலகைவிட்டுப் பல நாட்கள் இடையிட்டு இடையிட்டு உண்டு, பிராண இயக்கம் இரண்டை அடக்கிப் பெரிய தவம் செய்வதெல்லாம், இப் பேரூர் வளத்தைக் காண்பதற்கேயாம்! பெரிய மயில் கூட்டங்கள், கிளிகள், நாகணவாய்ப் பறவைகள், வண்டுகள், சக்கர வாளப்பறவை முதலாயின, நீண்ட சோலை-களிலிருந்து ஏன் ஆரவாரிக்கின்றன? மன்மதனை எரித்த சிவபெருமான், திருநடம் புரியும் பெரியநகராம் பேரூரைத் தாம் அடைந்துள்ளோம் என்ற செருக்கே அதற்குக் காரணம்!

பேரூரின் புறநகரில் யானைப் படை முதலிய நால்வகைப் படைகள் இருந்தன. இடை நகரிலோ, உய்யானவனம், தடாகம், பொய்கைக்கரைச் செய்குன்றுகள், மணிமேடைகள் எண்ணில! இடைநகரைக் கடந்து அந்நகருக்குள் செல்வோம். சக்கரவாள கிரிபோல் மதில்; அதனை அடுத்து அகழி; அகழியில் முதலைகள்; மதில்மேற் பொறிகள்; மதிலுச்சியில் கோபுரம்; அக்கோபுரத்தின் மீது விளக்குகள்!

அக நகரில் பல்வகைத் தெருக்கள் பாங்குற விளங்கும்; கடைவீதிகள் பல; கொள்வோரும் பலர்! கொடுப்போரும் பலர்!

சிவபெருமான் திருக்கோயிலின் திருமதிற்புறத்தேயும் பல வீதிகள். தெருக்கள் தோறும் பந்தல்; பந்தலுக்குள் இரத்தின மேடை; அதில் பூரண கும்பம்; அங்கங்கே உயர்த்திய கொடிகள்! அருகே தோரண வரிசைகள்!

பட்டிப்பெருமான் எழுந்தருளியுள்ள கோயிலின் தூண் பக்கத்தில் பொன், வெள்ளி, மணிகளால் ஆன மாடங்கள் விளங்கும் மடப்பள்ளிப்புகை, யாகசாலைப் புகை இவற்றால், மக்கள் கண்ணை அடிக்கடி மூடித்திறப்பர்! கோயில் முரசங்கள் முழங்கும்! அது, சிவபிரானை வணங்கும் அடியார் வினைகள் முற்ற அழிந்து கெடும் என்பதைக் கட்டியங்கூறும்! கோயில் வாயிலில், அறவடிவாகிய இடபக் கொடி உயர்ந்து தோன்றும்.

இங்ஙனம் கூறும் கச்சியப்பர், ''சிவபெருமான் அருளால் பேரூர் மான்மியம் கூறுவேன்; அதனால் என் வினைப் பகையும் பதனழியச் செய்வேன்!'' என்கின்றார்.

'பிறவா நெறிதரும் பேரூர்'

தமிழில் உள்ள சிற்றிலக்கியங்களில் 'பள்ளு' என்பதும் ஒன்று. அதனையொட்டி, இப்பேரூர்ப் புராணத்திலும், 'பள்ளுப் படலம்' என்ற ஒரு பகுதியை அமைத்து அழகுறப் பாடுகின்-றார் கச்சியப்ப முனிவர்!

கயிலை நாயகனாம் கண்ணுதற் பெருமான், தன் அழகிய வடிவத்தைக் கண்ணாடியிற் பார்த்து, அதனை அழைத்தான். வெங்கதிர் கொடி சேர்ந்தாற்போல் திருமேனி ஒளியுடன் வெளிப்போந்தார் ஒருவர். அவரே ஆலாலசுந்தரனார்! திரு-நாவலூரில், ஆதிசைவ அந்தணர் குலத்தில், சடையனாரின் அருமைத் திருமகனாகத் தோன்றி, 'ஆரூரர்' என்னும் பெயர் பெற்றதும், இறைவன் தடுத்தாட் கொண்டபோது, ''பித்தா பிறைசூடி'' எனும் முதற்பதிகம் பாடியதும் நாமறிவோம். அவர், திருத்தலம் பலவற்றையும் கண்டு, திருநீலகண்டப் பெருமானை வழிபட்டு வருங்கால், இக் கொங்கு நாட்டிற்கும் வருகைபுரிந்தார். திருப்பாண்டிக் கொடுமுடி சென்று, நமச் சிவாயப் பதிகம் பாடிப் பின்பு, காஞ்சி நதியுடைய இப்பேரூரை வந்தடைந்தார்!

மறைமுழக்கமன்றி வேறு முழக்கமறியாத இப்பேரூர்வாழ் அடியார் எல்லாம், 'தாரணி கூந்தல் பாகனாரின் தோழரன்-றோ நம் ஊருக்கு வருகை புரிகின்றார்' என்னும் பெருங்-களிப்பால், தோரணம், வாழை முதலியவற்றால் காவணம் அமைத்து, நிறைகும்பம் நிறுத்திச் சீர் அணி வீதியைச் சிங்காரித்து, ஆரூரரை எதிர்கொண்டழைத்து அவர் திருவடியில் வீழ்ந்து வணங்க அவரும் தொழுதார்!

அகிற்கட்டை, சந்தனமரத்துண்டு, மயிற்பீலி, இரத்தினம், பொன்துகள் ஆகியவற்றை அலைகளிலே தள்ளிக் கொண்டு வரும் காஞ்சிநதியை அடைந்தார் ஆரூரர். அங்கு நீராடினார். அருகே உள்ள பட்டீசுவரநாதரை வழிபடத் திருக் கோயிலுக்குள் நுழைந்தார்.

சுந்தரருக்கு, முன்பு, அந்தணர் வேடத்தில் எழுந்தருளி வந்து. தடுத்தாட்கொண்ட எம்பெருமான், இப்போது வயலில் வேலை செய்யும் உழவராகக் காட்சிதர விழைந்து ஆண்டுள்ள கழனியில் இறங்கி விட்டான்! புலித்தோல், இப்போது கரிய ஆடையாயிற்று; யானைத்தோல் கம்பளப்போர்வையாயிற்று; சடை, தலைப்பாகை போலாயிற்று; சிங்கத்தின் தோல், கோவணமாக மாறிற்று; பாம்பு, அரைநாண் ஆயிற்று. வேத ஆகமம், வீரக்கழலாயிற்று! அவனுக்குத் துணை, யாராக இருக்க முடியும்? பட்டிநாயகரின் இடப்பாகத்தை என்றும் விட்டுப்பிரியாத பச்சை நாயகியேதான்! அவள், அவ்வப்போது உணவுகொடுத்து உண்பிப்பதற்காக அவனருகில் நிற்கிறாள். விநாயகனும், வேலவனும் நல்லபிள்ளைகளாய், வயலில் உள்ள ஆமைகளையும், மீன்களையும் எடுத்தெடுத்து வயலருகிலும், மேடுகளிலும் வீசிவீசிக் குறுகுறு நடந்து சிறுவிளையாட்டயர்ந்து கொண்டிருக்கின்றனர். இந்திரன் முதலான தேவர்கள், சிவன் இட்ட ஏவலின்படியே தொழில் செய்வராயினர். எப்படி எப்படியெல்லாம் தொழில செய்தார்கள்? இதோ கச்சியப்பர் கூற்று:

> ''உழுகுநர் ஒருபால் உழுதசேறழுந்து ஒண்புனல் பாய்த்துநர் ஒருபால்
> முழுவரப் பருகு சீக்குநர் ஒருபால் மொய்மரம் படுக்குநர் ஒருபால்
> செழுமணிப் பகடு பூட்டுவிட் டோப்பிச் செறிபுனல் மண்ணுநர் ஒருபால்
> விழுமிய நாறு வார்க்குநர் ஒருபால் வித்துநர் ஒருபுறமானார்''! பள்ளு 29)

உழுகின்றவர் ஒருபால், நீர் பாய்ச்சுகின்றவர் ஒருபால், வரப்பின் அருகிலேசீக்கின்றவர் ஒருபால், பரப்பு அடிக்கின்றவர் ஒருபால், நாற்று நடுபவர் ஒரு பால், விரைக்கின்றவர் ஒரு பால், நிறைந்த கலப்பைகளைச் சாத்தி வைப்பவர் ஒருபால், எருமைக் கடாக்களை ஏரினின்று பூட்டை அவிழ்த்து விட்டு

ஓட்டிச்சென்று நீரில் கழுவுகின்றவர் ஒருபால். இங்ஙனம் உழவுத்தொழிலுக்குரிய செயல்களை மேற்கொள்வராயினர்!

கலைமகள், இந்திராணி முதலானோர் கைவினை ஒலிப்ப, சிற்றிடை நோவ, காதோலை நழுவ, நீண்ட கூந்தல் தோளிலே விழுந்தசைய அழகிய உமாதேவியோடு சேர்ந்து நாற்று நட்டனர்!

இங்ஙனமிருக்கத், திருக்கோயிலுக்குட் சென்ற நம்பியாரூரர், தம் நாயகராம் பட்டீசுவரப் பெருமானைக் காணப் பெறாமல்' இடபதேவரின் குறிப்பினால், நேராக வயலுக்கே வந்துவிட்டார்!

உழவனாகக் காட்சிதரும் இறைவனின் திருவடி இப்போது சேற்றிலே படிந்துள்ளது. இத்திருவடியின் பெருமை சொல்லுந்தரத்ததோ? வேதங்களாலும் ஆராய்ந்து அறிய முடியாத, மிகமிக மேம்பட்ட திருவடியன்றோ அது? சேற்றிலே மலரும்படிப் பொருந்திய தன்மையைக் காணக், கண் கோடி வேண்டுமே! மாசுதீர் தவத்து மாதவர் முதலானோர் தம் இரத்தினம் பதித்த நீண்ட கிரீடங்களுங்கூடத் தொடுவதற்குக் கூசும் அத்தகைய மேலான திருவடியல்லவா? பெருமை பெற்ற அத் திருவடியை, இப்போது எறும்பும், கயல்மீன்களும், ஆமையும், புழுக்களும் எனச் சொல்லப்படும் உயிர்கள் கூடத் தொடுகின்றனவே! அவை செய்த தவமோ பெரிது. குற்றமற்ற பேரூர்த் தலத்தில் மகிழ்வோடு வாழ்ந்ததனாலே தான்!இத்தகைய அரிய பேறு அவைகட்குக் கிட்டிற்று! இங்ஙனம் எண்ணினார் ஆரூரர்.

''மாசுநீர் தவத்து மாதவன் முதலோர் மணிநெடு மோலிகள் தீண்டக்
கூசுதாட் கமல முறவியும் கயலும் கூர்மமும் கீடமும் முதலாப்
பேசுமா ருயிர்கள் தீண்டுதற்கான பெருந்தவம் திருந்திய பேரூர்க்
காசுதீர் வரைப்பில் களித்துவாழ்ந் ததுவே யாமெனக் கருத்துட்கொண்டடுத்தார்' (33)

ஆனால் இறைவனோ, தம் அருகில் வந்து நின்ற ஆரூரரைக் கண்டும் காணாதவர்போல் பராமுகமுடையனாய், வேலையில் மிகுந்த நாட்டமுடையனாய் இருப்பதுகண்டு, பரிகாசம் செய்யலானார் ஆரூரர்!

''தலைவ! உனக்கு விருப்பமான உணவோ-நஞ்சு! உன் மூத்த பிள்ளை, தம்மை நினைத்தவர் குறையை முடித்த பின்பே உண்ணும் வழக்கமுடையவர்; இளைய பிள்ளையோ, செட்டாக வாணிகம் செய்பவர். ஆமாம்! இப்போது வயலிலே நெல் விளைப்பது யாருக்காக? மேகங்கள் மழை பொழிதலை விட்டுவிட்டாற்கூட, நின் திருமுடியில் இருக்கும் கங்காநதி ஒன்று போதுமே! பட்டியில் இடுவதற்கு, நின் காளை ஊர்தி உண்டே! மலமாகிய களையைக் களைய, அருகிலேயே மரகதவல்லி இருக்கிறாளே! போதாக்குறைக்கு உறுதுணைபுரிய முருகவேளும் இருக்கிறார்! அப்படியிருந்துமா உழவு செய்யத் திருவுளம் கொண்டாய்?'' என்று பலவாறு பேசிக்கொண்டிருந்தார் சுந்தரர்.

''சரி சரி, இவன் நம்மைவிட்டு நீங்கான்; எனவே, அவனுக்கு மனம் உவப்பன செய்வோம்!'' என்று திருவுளங்கொண்ட பட்டீசுவரர், வயலைவிட்டு வரப்பில் ஏறிக் காஞ்சி நதியில் நீராடித் தோழருடன் திருக்கோயில் நண்ணினார்.

அலைவீசும் கங்கா நதியிலே திங்களும் பாம்பும் விளையாட - மணம்வீசும் கொன்றை மலர்மாலையை அணிந்த சடை, முதுகுப்புறத்தைத் தடவிக்கொடுத்துத் தொங்க - அளவிறந்த அருள்வெள்ளம் கடைக்கண்ணிற் குதித்துப் பெருக-அரையிலே உடுத்துள்ள புலித்தோல் விளங்கப் - பரல்களாகிய பருக்கைக் கற்களையுடைய சிலம்புகள் ஆரவாரிக்கக் - கோமுனிவரும் பட்டி முனிவரும் அணுகித் துதிக்கப் - பாதுகாவலாய் உள்ள பூதகணத் தலைவர்கள் இடமின்றி நெருங்கி வணங்க - விண்ணுலகத் தேவர்கள் மணம் மிகுந்த கற்பகப்பூமழை பொழிய - அங்கியை ஏந்திய திருக்கரத்தையுடைய சிவபெருமான் திருநடனம் புரிந்தார்!

''கோமுக முனியும் பட்டி முனிவனும் குறுகி ஏத்த
ஏமுறு பூத நாதர் இடனறத் துவன்றிப் போற்றக்
காமுறு விசும்பில் தேவர் கடிமலர் மாரி தூர்ப்பத்
தீமுழங் கங்கை வள்ளல் திருநடம் நவிற்ற லோடும்!'' (46)

எனப் பெருமானின் திருநடனக் காட்சியைச் சொல்லோவியமாய்க் காட்டுகின்றார் கச்சியப்பர்! அதுசரி, ஆரூரனுக்காக ஆடிய நடனமல்லவா? அந்த ஆரூரர் எங்ஙனம் கண்டுகளித்தார் என்று கேட்கத் தோன்றுகின்றதல்லவா? இதோ கவிஞர் வாக்கு:

''கருணையே நோக்கி உள்ளகங் கசியக் கண்கள்நீர் அருவியிற் பாய
இருகையும் சிரமேற் குவிதரப் புளகம் எழ, உடன்முழுவதும் கம்பிப்ப
அருள்நட நோக்கி நெடிதுபோ தவச மாகநின் றானந்தம் திளைத்துப்
பருகிய மது, வண்டெனப்பெருங் களிப்பால் பாடினார் பரவையார் கொழுநர்!'' (47)

சுந்தரர், சிவபெருமானின் கருணையையே சிந்தித்து மனமுருகினார். கண்ணீர் அருவிபோல் பெருகிற்று; கைகள் இரண்டும் தாமாகவே தலைமேற் குவிந்தன; உடம்பு நடுங்கி-யது; மயிர்க்கூச்செறிந்தது. நீண்ட நேரம் தன் வசம் இழந்தார். ஆனந்தத்தில் மூழ்கினார். தேனைக் குடித்த வண்டுபோல் களிப்புற்றார்; ஆடினார்; பாடினார்; பாடியதோடு நின்றாரா? 'பைம்பொன் தருக' என்று வேண்டினார். ஆனால் ஆண்டவ-னோ, 'ஆரூர' என விளித்து,

''பாடிய நினது பாட்டையே பெரிதாப்
படர்ந்தெமைப் பரிசில்இங் கிரந்தாய்.........
பீடியல் நமது திருநடம் அதனைப் பெரிதென மதித்திலை போலும்!
ஆடிய நடனம் பாடிய பாட்டுக் கருளிய பரிசிலோ யாமால்!'' (49)

எனத் திருவாய் மலர்ந்தார். ''பாடிய பாட்டொன்றே பெரி-தென மதித்தாய்! ஆடிய நடனத்தின் அருமைதனை அறிந்திலை! நின் பாட்டுக்கு யாம் ஆடிய திருநடனமே பரிசில்!'' என்று கூறிவிட்டான். எனினும் வேண்டுவார் வேண்டுவதே ஈவா-னல்லனோ அவன்? ஆதலின், சுந்தரரைப் பார்த்துத் ''தோழ! பற்றற்றவர்க்கு ஆனந்த நடனத்தை அருளி, வணங்கச்செய்து, பிறவாப் பெருநெறியாம் முத்திப்பேறு அளிப்பதே இப்பேரூர். ஆதலின், நீ விரும்பியவாறு, பொன் தருதல் முறையன்றாம். எனினும், நம் அன்பன் சேரமான் பெருமாள், சோழ நாட்டிற்கு வந்து, உன்னை அழைத்துக்கொண்டுபோய்ப் பொன்னும் பொருளும் தருவான்!'' என்று அருளினான். இதனைக் கேட்ட சுந்தரர், மகிழ்ந்து, இறைவன்பால் விடைபெற்றுத் தலவழி-பாட்டைத் தொடங்கலானார்.

''அறம்பொருள் இன்பம் மூன்றையும் வெறுத்தோர்க்
கானந்தத் திருநடம் காட்டித்
திறம்பயில் முத்தி அளிக்கும்இத் தலத்தில் செம்பொன்
ஈவது முறையன்று'' (50)

எனப் பட்டீசுவரப் பெருமானே திருவாய்மலர்ந்தாரெனில், இப் பேரூர்ப் பெருமை யார் சொலவல்லார்? இப் பேரூர், தன்னை அடைந்தோர்க்கு அழியா நிலைமையைத் தரும் என்பதற்கு இங்கே காஞ்சி நதியில் இடப்பட்ட மனிதர் எலும்புகள், நாளடைவில் கல்லாய் மாற்றப்பட்டு நிலைபெறுதலை இன்றும் காணலாம். பிறப்பு இறப்பு ஆகிய துன்பங்கள், இத் தலத்தை அடைந்தோர்க்கு நீக்கம்பெறும் என்பதற்கு அடையாளமாக இங்கே 'இறவாப் பனை', 'பிறவாப் புளி' என்னும் இரு மரங்கள் சான்று பகர்கின்றன.

கோயிலுக்குள் உள்ள கனகசபையின் கவினார் அழகைச் சொற்களால் பாராட்டவியலாது; நேரிற் கண்டு அனுபவிக்கத் தக்கது. ஒரே கல்லில் செதுக்கப்பட்ட, நுட்பமான பெரிய சிற்பங்கள், மேலைநாட்டினராலும் போற்றப்படுவன.

முடிவுரை

''பிறவா நெறிதரும் பேரூர்'' பற்றி எழுந்த நூல் இப் 'பேரூர்ப் புராணம்' மட்டுமா? திருப்பேரூர்ப் போற்றிக் கலி· வெண்பா, திருப்பேரூர்க் கிள்ளைவிடு தூது, பேரூர் மும்மணிக் கோவை, பேரூர்ப் பச்சைநாயகியார் ஊசல் எனப் பலப்பல. கும்மிப் பாடல்கள்கூட உண்டு!

''பேரை வளர்கின்ற சாமியடி — அவன்
பேரை நினைப்பவர் சாமியடி!
நீரை யுறுதலை யாதிமுடி — உடல்
நேர்மை அணிவது பூதியடி!
மாமலை மங்கையான் நேயனடி — மணி
மன்னு பணிவர் சகாயனடி!
ஏழுறு சுந்தரர் தூதனடி — அவன்
எல்லா உலகிற்கும் நாதனடி!
சூலையும் பாலையும் ஈந்தானடி — அவர்
சொல்லும் தமிழ்ச்செவித் தீந்தேனடி!
மேலைச் சிதம்பர நாதனடி — இயல்
முத்தனடி வல சித்தனடி!''

ஆம்! கும்மியடிக்கும் பெண்களோடு சேர்ந்து, பேரூர்ப் பெம்மானின் புகழ் பாடுவோம்; அவன் திருவடி தொழுவோம்; பிறவா நெறிகளைப் பெற்றிடுவோம். வம்மின், வம்மின்!

கச்சியப்பர் திருவடி வாழ்க!

# 6

# பழனிப் பிள்ளைத் தமிழ்

முன்னுரை

சின்னச்சின்ன வீடுகட்டிச், சிங்காரப் பொங்கலிட்டுச் சிரிக்க சிரிக்க விளையாடிக் கொண்டிருக்கும் குழந்தையைப் பார்த்துக் 'கண்ணே வருக! கற்கண்டே வருக! அமுதே வருக! அன்பே வருக!' என்றெல்லாம் பாராட்டி அழைத்தாலும், அச் சொற்களைக் காதில் கூடப் போட்டுக் கொள்ளாமல், தன் கருமமே கண்ணாகக் கொண்டு, விளையாட்டிலேயே இலயித்து நிற்கும் காட்சியைக் கண் குளிரக் கண்டிருக்கிறோமல்லவா? குழந்தை வரவில்லையே என்பதற்காக, அக் குழந்தையை அழைக்காமல் இருந்து விடுவார்களா தாய்மார்கள்? வாய் சலிக்காமல், ஓயாமல், கூப்பிட்டுக்கொண்டுதான் இருப்பார்கள்! இஃது உலகத்து இயல்பு!

அங்கு இங்கு எனாதபடி எங்கும் பிரகாசமாய், ஆனந்த நிறைவாகி நிற்பவன்; அருள் வடிவினன்; தங்கும்படிக்கு இச்சை வைத்து, உயிர்க்கு உயிராய்த் தழைத்து நிற்பவன்; வானவெளிப் பட்டணத்தில், வட்டமதிச் சக்கரத்தில் ஞானரதம் ஓட்டுகின்றவன்; கல்லிருக்கும் தேரை கண்டு, கருவிருக்கும் பிள்ளை கண்டு, உள்ளிருந்து ஊட்டுகின்றவன்; சின்னஞ்சிறு சக்கரத்தில் சீவன்களைச் சுற்ற வைத்துத் தன்னை மறந்திருப்பவன். ஆம்! அவன்தான், எல்லாம் வல்ல இறைவன்! அவன் ஓர் ஆட்டக்காரன்; ஆடுவான்; அனைத்துயிர்களையும் ஆட்டுவிப்பான். அவன் ஆடாத திருவிளையாடல்கள் அவனியில் இல்லை! மணலாலே வீடு கட்டி விளையாடும் பாலகன் அவ் வீட்டை எவரும் காலினால் இடறிவிடாதபடி கண்ணுக்குக் கண்ணாகக் காத்திருப்பான்; பின்பு அவனே, தன் காலாலே சிதைத்துவிட்டு ஓடிவிடுவான்! ஆண்டவனாகிய அருமைக் குழந்தைக்கு விளையாட்டு என்ன தெரியுமா? இதோ கம்பநாடர் கூறுகின்றார் :

''உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவர் அன்னவர்க் கேசரண் நாங்களே'' (கம்பரா.)

என்று! அனைத்துலகங்களையும் படைத்தலும், காத்தலும், அழித்தலும் ஆகிய விளையாட்டுக்களைச் செய்பவன் அவன் என்கிறார் கம்பர். எனவே, முழுமுதற் கடவுளும் ஒரு வகையில் குழந்தைதான்! கடவுளை அம்மையாக, அப்பனாக - ஒப்பிலா மணியாக - அன்பினில் விளைந்த ஆரமுதமாகக் கண்ட அடியவர்கள், குழந்தையாகவும் கருதிப் போற்றியதில் வியப்பில்லை! அண்டசராசரங்கள் என்னும பந்துகளைத் தன் திருவடிகளால் உதைத்துத் தள்ளும் ஒப்பிலா முருகன் எனும் தெய்வக் குழந்தையைப் பார்த்து, அனைத்துலகும் ஈன்ற உமையம்மை எப்படி அழைக்கிறாள் தெரியுமா? இதோ பாட்டைக் கேளுங்கள்:

''எடுக்க வருக மலர்க்கரத்தில்
ஏந்த வருக! தளிர்மடிமீ(து)
இருத்த வருக! உச்சிமுகந்து
இணையில் உவகை யுறவருக!
வடுக்கண் களிக்கும் படிவருக!
வனச முகைமென் முலைத்தீம்பால்
வழிய வருக! பலபணியும்
மலரும் புனைய வருக! என,
நடுக்கம் தவிர்த்தாண்(டு) அருள்கருணை
நணுகும் உமையாள் சொலுந்தொறும்போய்,
நந்தா மகிழ்ச்சி யுறுங்குமரா!
ஞானப் புலவா! நவில்துதிச் சொல்
மடுக்கும் செவியாய்! பழனிநகர்
வாழ்வாம் முருகா வருகவே!
மழமால் விடைப்பண் ணவன்நுதற்கண்
மணியாம் மதலாய் வருகவே!'' (55)

பழம் விரும்பாகக் குழந்தையும் பாரினில் உண்டோ? முருகக் குழந்தைக்குப் பழம் என்றால், மட்டிலா ஆசை! ஒரு முறை நாரத முனிவர், ஈசனைக் காண வந்தபோது, வெறுங்கையோடு போகலாகாது என்று எண்ணிச் சுவையான-தேவ மதுளங்கனி ஒன்றைக் கொண்டு வந்து, இறைவன்பால்

தந்தனன். அருகிருந்த விநாயகர், 'இப்பழம் எனக்கே!' என்றார்; இளமுருகனோ, 'எனக்குத்தான்' என்றார். தந்தை பரமனோ, 'இவ்வுலகம் முதன் முதலில் வலமாகச் சுற்றி வருபவர்க்கே இப்பழம்' எனத் தந்திரமாகக் கூறிவிட்டார். பழத்தைப் பெற வேண்டும் என்ற ஆசையால், தன் மரகத மயில் மீது ஏறினார் முருகப்பெருமான்; வலமாகச் சுற்றினார். தனயன் விநாயகரோ, 'அம்மையப்பர் தாமே இவ்வுலகம்' என்று எண்ணி, அவர்களையே வலமாகச் சுற்றி வந்து பழத்தைப் பெற்றுக் கொண்டார். உலகைச் சுற்றி வந்த முருகனோ, உண்மை அறிந்தார். பற்றற்ற துறவிக் கோலங்கொண்டு பழனிமலையில் நின்றார்; ஈசனோ, 'நீயே ஞானப்பழம், உனக்கு வேறு பழம் வேண்டுமா?' என்றெல்லாம் கூறியும் அசைந்து கொடுத்தாரில்லர் அருமுருகன்! அனைத்தும் துறந்த திருவெண்ணீற்றுக் கோலத் தண்டாயுத பாணியாகப் பழனி மீது நின்று பொலிவுறுவாராயினார்!

> ''வன்மயில் மேலிவர்ந் திவ்வுலகை ஒருநொடியில்
> வலமாக வந்த முருகா!''

எனக் குருபாத தாசர் இவ்வரலாற்றை எடுத்து மொழிவர்!

'பழனிப் பிள்ளைத் தமிழ்' ஆசிரியர்

'பழனி மலை' என்றதுமே, ஆங்கே பால் மணப்பதும், பழம் மணப்பதும், தேன் மணப்பதும், தினை மணப்பதும், நம் கண்முன் தோன்றும். ஒய்யார மாமலையில் உல்லாசமாக வரும் வையாபுரி முருகன், நம் நெஞ்சத்தே நடமாடுவான்! அப் பெம்மான் மீது பாடப்பட்ட பைந்தமிழ் நூல்தான் 'பழனிப்பிள்ளைத் தமிழ்'!

ஏறத்தாழ 140 ஆண்டுகட்கு முன்! தம் 13 ஆம் வயதிலேயே வண்ணப்பாக்கள் பாடும் வல்லமை பெற்றவர்! முருகன் அருள் பெற்றவர்! தொடக்க காலத்தில், 'வா முருகா, அருள்தர வா!' என்றெல்லாம் பன்முறை வேண்டினார். கந்தன் கருணை காட்டவில்லை! எனவே உணவை மறந்தார்; உறக்கம் விட்டார். இறுதியில் உயிரையே விடவுந் துணிந்தார். நெல்லை மாவட்டத்தில் 'திருமலை' என்னும் குன்று ஒன்று உண்டு. அதன் உச்சிக்குச் சென்றார். ''இந்த நீச வாழ்க்கை நாசமாகட்டும்'! என்று சொல்லிக்கொண்டே மலை உச்சியிலிருந்து

கீழே உருண்டார்! என்ன விந்தை? எவரோ இடை வந்து நிறுத்தியதுபோல் தடைப்பட்டது திருமேனி. தோளில் மட்டும் சிறிது காயம். அன்றிரவு அவர்தம் கனவில் காட்சி தந்த முருகன், ''உருண்டது வீண்! இறப்பது, எற்றுக்கு? யாமே தாங்கினோம்!'' என்றான். இக் காட்சிக்குப் பின் கடல்மடை திறந்ததுபோல் கவிமழை பொழியத் தொடங்கிவிட்டார். அவ் அருளாளர் யார் என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா? ஆம்! அவரே, 'சங்கரலிங்கர்' என்னும் திருப்பெயர் தாங்கியவர்; கையில்-தண்டு; மேனியில்-திரு வெண்ணீறு; இடுப்பில்-கோவணம்; அரையில்-காவியுடை கண்டார் அனைவரும் 'தண்டபாணி சுவாமிகள்' என்றனர். அப்பெயரே நிலைத்தது! முருகன் அருளால் வியத்தகு செயல்கள் பல செய்தார். பழனிக்கு வந்தார்; ஆயிரம் பாடல்கள் பாடினார். அவற்றுள் ஒரு நூலே 'பழனிப்பிள்ளைத் தமிழ்'!

வருகைப்பருவம்

இப்பிள்ளைத் தமிழில் ஒரு பகுதி 'வருகைப்பருவம்'! அதில் வந்துள்ள ஒரு பாடலே 'எடுக்க வருக'! என்பது!

தளர் நடைபோடும் சேயினை, 'வருக வருக' எனப் பரிவு கொண்டு அழைக்கும் இவ்வருகைப் பருவம், குழந்தை பிறந்த 13 ஆவது திங்களில் நிகழ்வதாகப் பாடப்படுவது மரபு. இதனை 'வாரானைப் பருவம்' என்றும் கூறுவர்.

> ''வளம்தோய் பழனி மலைக்குரவர்
> வருக வருக வருகவே!''

எனப் பத்துப் பாடல்களிலும் 'வருக வருக' எனப் பத்துத் தரம் மனமுருகி அழைக்கின்றார் தண்டபாணிசுவாமிகள்! முருகன், ஒரு தரமாவது வ்ரமாட்டானா என்று எண்ணுவதும் இயல்பு தானே!

தாலப்பருவம்

குழந்தையைத் தூங்கவைப்பதற்குத் தாய்மார்கள் படும் பாடு சொல்லிமுடியாது! தூங்காத குழந்தையைத் தூங்கச் செய்யும் அரிய மந்திரந்தான் - தாலாட்டு! தாலம் - நாக்கு தாலோ தாலேலோ' என நாவை அசைத்துப் பாடும் பாட்டுத் 'தாலாட்டு' ஆயிற்று. இத்தகைய தாலாட்டுப் பாடல்களைக் கேட்டுத்தான் அருட்கவிஞர்களும் ஆண்டவனாகிய குழந்தைக்கும் தாலாட்டுப் பாடினர் போலும்!

''பனிமலர் முழுமையும் அணிதரு சரவண
பவனே தாலேலோ
பகலுடன் இரவறு வெளியிடை நிலவிய
பழையோய் தாலேலோ
தனியென உணர்பவர் விழைதரு பயனருள்
சரதா தாலேலோ
தமிழ்நயம் அறிபவர் பலர்பர வியஒரு
தலைவா தாலேலோ
குனிதரு சிலைவலி வயவர்கள் பலர்பணி
குழகா தாலேலோ
குமரியர் இருவரோ(டு) ஒருமயில் மிசையிவர்
குரவா தாலேலோ
முனிவர்தம் அரசுடன் ஒருபொருள் நுவலிய
முதல்வா தாலேலோ
முருடரும் வழிபடு பழனிம லையில் வளர்
முருகா தாலேலோ!'' (30)

என்பது, தண்டபாணி சுவாமிகள் பாடிய தாலாட்டு! பழனிமலை முருகன் எத்தகையவன்? திருவின் கேள்வனாம் திருமால் களிக்க, அவுணர்களை வேரறுத்தவன் - ஆறுமுகன் ஐந்தெழுத்துச் சிவபிரானுக்கு ஒரெழுத்து உபதேசம் செய்தவன் - தந்தை சுவாமி; கமலபீட நான்முகனைக் கடுஞ்சிறையிலிட்டவன் - கந்தன்; கடம்ப மலர் மாலை புனைந்தவன் - கந்தன்; தண்டேந்திய கையினன் - பழனியப்பன். அவரவர்தம் பான்மையளவில் அருள் புரிபவன் - திருவாளன். கண் ஆயிரத்தான் மகள் கணவன்; கானக்குறத்தி பணிபுரியும் பேராளன்; கதிர்வேல் படைக்கைக் காவலன்; கயிலைக்கிரியர் விழிப்புதல்வன்; எண்ணார் குடிக்கு ஒரு நெருப்பானவன்; ஈரேழ் உலகும் தகர் உகைப்பவன்; எல்லாம் உணர்ந்த முழுப்புலவன்; இரங்கார் மனத்தவர்க்கு உணர்வரியான்; தேவியர் இருவருடன் மரகதமா மயிலூர்ந்து உகைப்பவன்; உலகளிக்கும் மாயோன் மருகன்; தண்ணார் பொழில் சூழ் பழனிமலைத் தலைவன்! தனித்தோர் பலர்க்கும் ஒரு குருவாம் சரதன்!

இத்தகையான் அவதரித்த இடம் எது? குளிர்ந்த மலர்கள் யாவும் அழகுடன் விளங்கும் சரவணப் பொய்கையன்றோ? பகல் இரவு அற்ற பரவெளியில் விளங்கும் பழமையோன் இவன்! தனித்த ஏகாந்த சொரூபம் என உணரும் மேலோர் விரும்பும் பயனை விளைவிக்கும் மெய்ப்பொருள்;

அருந்தமிழ் அருமையை அறிந்த பலர் ஆராதிக்கும் தனிப்பெருந்தலைவன்! வில்வீரர் பலரும் வணங்கும் குழகன். முத்தமிழ் முனிவர்களின் தலைவரான அகத்தியருடன் ஒருபொருள் குறித்து உரை நிகழ்த்திய தலைவன்! வீரமறவரும் வழிபடும பழனிமலையில் எழுந்தருளியிருப்பவன்!

'இத்தகு முருகா! தாலே தாலேலோ!'' என்ற பொருள் பட அமைந்ததே, 'பனிமலர்முழுமையும்'' என்ற தாலப்பருவப் பாடல்!

தாலாட்டுப் பாடுவது எதற்கு? குழந்தையைத் தூங்க வைப்பதற்குத் தானே!

மண்ணில் ஆயிரம் மலர்கள் அமைத்தவன்; மனத்தில் ஆயிரம் அலைகள் அளித்தவன்; விண்ணில் ஆயிரம் மீன்கள் அமைத்தவன்; வெளியில் ஆயிரம் உயிர்கள் படைத்தவன்; ஆக்கல் அளித்தல் அரவணைத்தல் என்றெல்லாம் பாக்கு வைத்துக் கொண்டு விட்ட பரமன்; சத்தியத்தினுள்ளே தத்துவமாய் நின்றொளிரும் சீலன்! இவன் அமர்ந்திருக்கும் இடமோ பழனிமலை!

கண்ணின் மணியாக-உயிர்க்குயிராக கரும்பின் சுவையாக பெருந்தேனாக-நண்ணும் கதியாக-சுரர்பதியாக நாதனாக எண்ணும் அடியார் பெருவாழ்வாக விளங்கும் கந்தவேளுக்குத் தாலாட்டுப்பாட, அவன் உறங்கிவிட்டால் என்னாகும்? அண்ட சராசரங்களும் அலமந்து போகும்; அனைத்துயிர்களும் நிலை தடுமாறும்! ஆகவே, கவிஞர் கோமான் தண்டபாணி சுவாமிகள் தண்டேந்திய கைப் பழனியப்பனிடம் இப்படிக் கூறித் தாலாட்டிசைக்கின்றார்:

''முன்னம் பனுவல் துறைவகுத்த
முனிக்கோன் விதிக்கா, இப்பருவம்
மொழிகின் றனன்; நீ இதுதானே
முற்றும் நலமாம் எனும் துணிவால்
இன்னம் துயிலக் கருதாதே!
இந்நாள் துயிலும் அறல் வேண்டும் ...
தண்டேந்தியகைப் பழனியப்பா!
தாலோ தாலோ தாலேலோ!'' (22)

''பழனியப்பா! நான் இப்போது இசைப்பது தாலப்பருவப் பாடல் தான்! ஆனால், இது நானாக ஆக்கிய பருவமன்று! ஆதியில், தமிழ்ப்பாக்களுக்குரிய துறைகளை வகுத்த அருந்தமிழ்த் தலைவர் அகத்தியர் இயற்றிய இலக்கணத்தை அடியொற்றித்தான் நானும் பாடுகின்றேன். 'நாம் தூங்க வேண்டும் என்பதற்குத் தானே, இவன் பாடுகின்றான்; சரி, நாமும் உறங்குவோம்!' என்று எண்ணித் தூங்க நினையாதே முருகா! நீ தூங்கினால், எம் கதி என்னாகும்? ஆகவே, தூய்மை எழும் துதியாக இத்தாலாட்டை ஏற்றுக் கொண்டு, தீயவர் வருத்தும் தீமையைத் தீர்த்து, அருமை பெற எம்மை ஆட் கொள்வாயாக!'' என்று கவிஞர் வேண்டுவது. எத்தனை விழுமிய கருத்து என்பது புலனாகின்றதன்றோ?

> ''தன்னந் தனியாய்த் திகழ்முருகா!
> தாலோ தாலோ தாலேலோ!''

என்று சுவாமிகள் இசைக்கும்போது, நம்முடைய நாவும் மெல்ல அசைகின்றதல்லவா?

சப்பாணிப் பருவம்

> ''மாமயி லேறி வருவாண்டி - அன்பர்
> வாழ்த்த வரங்கள் தருவாண்டி!
> தீமையி லாத புகழாண்டி - அவன்
> கீர்த்தியைப் பாடி அடியுங்கடி!''

என, முருகனது பெருமையை அருமையாகப் பாடுவர் இராமலிங்க அடிகளார்! சூரனைத் தொலைத்த சுந்தரமுருகன், தெய்வயானை என்னும் மடவாளோடு இந்திரவுலகத்தே வீற்றிருந்தான். நாரதமுனிவர் ஆங்கு வந்தார். முருகனைக்கண்டு. ''ஐயனே! வள்ளி மலையில், கானவர் மகளைக் கண்டேன், அவள் ஆகம் நல்லெழில் செய்ய பங்கயத் திருவாம் திருமகளுக்கும் இல்லை! இப்போதே நீ போவாயானால், அவளைக் காணலாம்!'' என்றார். அதுகேட்ட குமரன், வள்ளிநாயகி காத்துக் கிடக்கும் தினைப்புனம் நண்ணினான். பரந்தாமனின் மகளாம் சுந்தரவல்லியாம் வள்ளி, பரண் மீது இருந்து, 'ஆலோலம்' இசைத்துக் கொண்டிருந்தாள். அவளைக் கண்ட ஆறுமுகன் கொஞ்சு மொழிகள் பல சொல்லிக் கெஞ்சி நின்றான். வள்ளியும் முருகனும் உரையாடிக்கொண்டிருந்த நேரம்;

வேடர் பரிவாரம் உடுக்கை ஒலியோடு ஓடோடி வந்தது. இக் காட்சியை அருணகிரிநாதர்,

> ''தனத்த தனத்தன தனதன தனதன
> திமித்தி மித்திமி திமிதிமி திமிதிமி
> தகுத்த குத்தகு தகுதகு தகுதகு தகுதீதோ!
> தரித்த ரித்தரி தரிரிரி ரிரிசிரி
> தருட்டு ருட்டுடு டடுடுடு டுடுடுடு
> தமித்த மத்தள தமருது விருதொலி - கடல்போல!''
> (திருப்பு. 1. சினத்தி')

இப்பேரொலி கேட்டு அஞ்சினாள் வஞ்சிக்கொடியாள். அதுகண்ட வேலன், விருத்தனாய் மாறினான். அந்நிலையிலும் வேலன்பால் சிந்தை பறிகொடுத்தாள் இல்லை சீமாட்டி! பார்த்தான் பரந்தாமனின் மருகன்; வேண்டினான் விநாயகரை! அவரோ மதயானை வடிவோடு, மண்ணும் மலையும் நடுங்க, ஓடிவந்தார்! யானையைக் கண்டு நடுங்கினாள் நாயகி வள்ளி! செய்வதறியாது திகைத்தாள். என் செய்வது? வேறுவழியின்றி விருத்தனாம் வேலனையே தழுவிக் கொண்டாள்! பின் என்ன? 'இரவு பகல் அற்ற இன்ப வெளியூடே விரவி நின்று' இணங்கினான் வேலன். வள்ளிக்குக்குற்றேவலும் புரிந்தான்! இவ்வினிய கதையை எடுத்துமொழிவது, பின்வரும் பிள்ளைத் தமிழ்ப் பாட்டு :

> ''கங்குலின் றியபொன் நகர்க்கடவுள் யானைதரு
> கன்னிமனம் நொந்துவாடக்
> ககனமுனி மொழிவழி கடுக்கென் றெழுந்தொரு
> கருங்கான கம்புகுந்து
> வெங்குறவர் ஏனலரு கிற்சிறுமி யைக்கண்டு
> வேடம்வெவ் வேறுகொண்டு
> வேங்கைமர மென்றுநின்(று) அவள்தரு தினைப்பீண்டி
> மிகவுண்டு மேலுமேலும்
> பொங்கு மயல் வாரிச் சுழிப்பட்டலைந்தொரு
> புகர்க்கரிசெய் உதவியதனால்
> போதப்பு ணர்ந்தவள்சொல் குற்றவேல் முற்றும்
> புரிந்(து) உவகை பொலியுந்தொறும்
> குங்குமத் தோள்கொட்டி யாடும் அதி காமுகா
> கொட்டியருள் சப்பாணியே!
> குளிர்பொழிற் பழனியினில் வளர்குமர குருபரா!
> கொட்டியருள் சப்பாணியே''! (34)

குழந்தை, கையுடன் கை சேர்த்துத் தட்டும் பருவம் 'சப்பாணிப் பருவம்'. 'பாணி' என்றால் 'கை'; 'சப்' என்ற ஒலி வருமாறு கையைத் தட்டுவதால் 'சப்பாணி' ஆயிற்று. இது குழந்தை பிறந்த 9 ஆம் திங்களில் நிகழ்வதாகப் பாடப் படும்.

முத்தப்பருவம்

'முத்தம்' என்ற சொல், காதில் விழுந்தவுடனே, வாயில் நீர் ஊறப் பெற்று எக்களித்திருப்போர் ஏராளம். ''கன்னத்தில் முத்தமிட்டால் உள்ளந்தான் கள்வெறி கொள்ளுதடி!'' என்று பாரதி பாடிய பாடலை அறியாதார் உளரோ? காதலர் நிலையில் வைத்துப் பேசும் 'முத்தம்' ஒருபுறமிருக்கட்டும்! பெற்ற குழந்தை, பேணி வரும் தாய்க்குத் தரும் முத்தத்திற்கு ஈடு உண்டோ? இணை உண்டோ? வஞ்சம் இல்லாக் குழந்தை கள்ளம் கபடு சூதுவாது எதுவும் தெரியாக் குழந்தை - உள்ளொன்று புற-மொன்று பேசத் தெரியாக் குழந்தை - அது தரும் முத்தமே உயர்ந்தது! அத்தகைய முத்தத்திற்காக ஏங்கி நிற்கும் ஒரு தாய் நிலையில் நின்று, கவிஞர் பாடும் பிள்ளைத் தமிழ்ப்-பாட்டு இது:

''சித்தர் பலர்க்கோர் அரசாகித்
திகழ்வெண் கயிலைக் கிரிமிசைவாழ்
சிவனார் தாமும், அவர்இடபாற்
சிறிதும் பிரியா உமையாளும்,
சுத்த மலிபா கீரதியும்
சுடநேர் உடுக்கள் ஓராறும்,
தும்பி முகத்(து) ஓர் துணைவோனும்
சுரர்ஊர்ப் பிடியும், குறக்கொடியும்,
இத்தரை யின்கா ழியிற்கூடல்
இடத்தில் இருதம் பதிமாரும்,
இணையில் அருணைக் கிளிதானும்,
எய்தப் பெறலாய் யான் விழைந்தேன்!
முத்தர் வருசீர்ப் பழனிமலை
முதல்வா! முத்தம் தருகவே!
மூவா அமரர் நகர்க்காவல்
முருகா! முத்தம் தருகவே!'' (41)

பிள்ளைபிறந்த 11 ஆம் திங்களில் பாடப்படுவதாகிய இம்முத்தப் பருவப் பாடலின் கருத்து இது: ''பழனிமலை

முதல்வா! நின்னிடம் முத்தம் பெற்றவர்கள் எத்துணைப் பேர்? சித்தர்களுக்கெல்லாம் சித்தராகி, வெண்மை நிறத்தொரு பொலிவு பெறும் கயிலாய மலையில் வீற்றிருக்கும் சிவபிரானுக்கு முத்தம் ஈந்தாய்! அவரது இடதுபுறத்தில் என்றும் பிரியா-திருக்கும் உமையம்மைக்குத் தந்தாய்! நீ, சரவணப் பூந்-தொட்டிலிற் கிடந்தபோது, கங்கைக்கும் கார்த்திகை மாதர் அறுவர்க்கும் உவந்தளித்தாய்! சிறுபிள்ளை விளையாட்டில், நினக்கு மூத்த கணபதிக்கும் ஈந்தாய்! திருமணம் ஆனபின், தெய்வயானைக்கும் வள்ளிப் பூங்கொடிக்கும் வழங்கினாய்! மற்றொருகால், மதுரை அங்கயற்கண்ணிக்கும் அழகிய சொக்கேசனுக்கும் உக்கிரகுமாரராகத் திருவவதாரம் செய்த போது, அவ்விருவர்க்கும் குதூகலமாகக் கொடுத்தாய்! பின்-னர்ச் சீர்காழியில் சிவபாத இருதயர்க்கும் பகவதியம்மைக்கும் ஞானசம்பந்தப் பிள்ளையாக நீ அவதாரம் செய்தபோது, அவர்கட்கும் அளித்தாய்! பத்தியொடு திருப்புகழ் பாடிய அருண-கிரியாம் கிளிக்கு மாறிமாறி முத்தம் வழங்கினாய்!''

''உனது முத்தம் பெறுதற் பொருட்டே முத்தர்பலர், வளமார் பழனிக்கு வருகின்றார்கள். உன் முத்தம் பெற்றவர்க்கு முத்தி சித்திக்குமன்றோ? ஆதலின் யானும் நின் முத்தம் பெற அவாவுகின்றேன். ஆதலின், பழனிமலை முருகா! முத்தம் தருகவே! முத்தம் தருகவே!'' எனக் கனிந்து கேட்கும் கவிஞர் பாடலைக் கேட்குங்கால், அவன் நமக்கும் முத்தம் தரமாட்டானா என்று ஏங்குகின்றோமல்லவா?

அம்புலிப் பருவம்

''சித்திரைப் பௌர்ணமி சிரிக்க வா!
முத்திரை பதிக்கநீ முந்திவா!
பச்சைப் பிள்ளையோ டாடவா!
இச்சை தீரநீ பாடவா!''

— இது, சின்னஞ்சிறு குழந்தைக்கு, உணவூட்டக் கருதும் அன்னைமார், பாடும் பாட்டு! வானத்து வெண்ணிலாவைக் காட்டிப் பாட்டுப் பாடிக் குழந்தைக்குச் சோறூட்டுவது, அன்னையர்க்குக் கைவந்த கலை! கடவுட் குழந்தையோடு விளையாட வரும்படி அம்புலியை (சந்திரனை) அழைப்பது 'அம்புலிப்பருவம்' ஆம்! இது, 15ஆம் திங்களில் பாடப்படும். இங்ஙனம் அம்புலியை அழைக்குங்கால், சாம, பேத, தான, தண்டம் எனும் நால்வகை வழிகளைக் கையாள்வதாகப் பாடுதல் மரபு.

அம்புலியை நோக்கி, 'எம் பழனிமலை முருகனுடன் ஆடவா அம்புலியே!' என்று வேண்டவரும் கவிஞர். முதல் முதல் 'சாமம்' (சமம்) எனும் வழியைக் கையாள்கின்றார். ''அம்புலீ! சிவனார் வழியில் உதித்தவன் எங்கள் செவ்வேள்! நீயும் அவனின் இடது விழி ஆனாய்!'' என்பனபோல் கூறியும் அம்புலி வந்தானில்லை. எனவே அடுத்ததாகிய 'பேதம்' (வேறுபாடு) எனும் வழியைக் கையாளத் தொடங்குகின்றார் சுவாமிகள். ''அம்புலீ! உலகில் உள்ள அனைவருமே காணும்படி வானத்தே தோன்றும் எளிமையுடையன் நீ! எம்பெருமானோ ஆணவச் சங்கிலியை நொறுங்கச் செய்யும் சிவயோக சாதனையர்தம் இதயமாம் வானத்தில் மட்டுமே பவனிவரும் வல்லாளன்! ஆதலின் உன்னிலும் மேம்பட்ட எம் இறைவனுடன் ஆடுவது பெருந்தவமாம்!'' என்று கூறியும் வந்தானில்லை! அடுத்துத் 'தானம்' (கொடை) எனும் வழியைக் கையாள்கிறார் கவிஞர். ''அம்புலீ! நின் கலைகள் தேயாதிருக்க இவனுடன் ஆடவா! ஆட வந்தால், இராகு கேது பாம்புகள் உன்னை அண்டமாட்டா! நினக்குப் புகழ் ஒளி பெருகும்!'' என்று கூறியும் வரவில்லை! எனவே இறுதி வழியாகிய 'தண்டம்' (ஒறுத்தல்) என்பதைக் கையாளத் துணிகின்றார் கவிஞர் இதோ அப் பாடல் :

''ஆணவம் ஆர்முது சூர்என மாய்வுறல்!
  ஆதா யந்தனில் வாழ்(வு)
ஆம்இரு பான்எழு தாரகை மாதர்அ
  ழாவா(று) இன்றுணர்வாய்!
காணம தேபொருள் ஆமென நாடுநர்
  காதோ நின்செவி?மா
காதலொ(டு) யானுவல் பாடலின் ஓசை பு
  காவா(று) என் புகல்வாய்?
வேணவி காதம்இ தால்விளை வாகும்மெய்;
  வீணே வம்புசெயேல்!
வேழம்இ தோரில்இ வேளைஉ ணாமல்வி
  டாதே, வென்றிகுலாம்
வாணவ வீரர்ச காயவி சாகன்முன்
  வாவா அம்புலியே!
வால்வய லூர்முரு கேசனொ(டு) ஆடிட
  வாவா அம்புலியே!'' (69)

''அம்புலியே! எம்பிரானை 'இவன் ஒரு சின்னவன்' என்று எண்ணி விடாதே! அளவிலா முனிவர்கள் அஞ்சும்படி உதித்த பெரிய ஆட்டை, ஊர்தியாகச் செலுத்தியவன் இவன்! இமையவரெல்லாம் நொடியில் பிணமாக ஆயினர். கடல் நடுவே சூர-பதுமனாகிய ஒரு மாமரத்தை வேலாலே வெட்டிய சூரனிவன்! 'மதியோன் யான்' என்பாயா? மதியுடைய குருமூர்த்திகள் வழிபடும் குருநாதன் இவன்! சிவனாருடைய நெற்றிக்கண் நெருப்பில் உதித்துக் கனப்பவன் எம் இறைவன். குறிஞ்சியில் மயில் செலுத்தும் குகன் இவன். அழுக்கற்ற மனத்தினர் தம் அத்தன்; கருதிய வரம் யாவும் தரும் கம்பீரன்; அகங்காரம் கொண்டவர்களை அழிக்கும் பேராளன்; இளம் பரிபூரணன். வண்மைந்தமிழ் போன்று சிறக்க இருக்கும் கடப்பமாலை அணியும் சேயோன்; சூரன், அலட்சியத்தால் அடைந்த அல்லல் பல! அம்புலி! அவனைப்போல் வானுலக ஆட்சி இழந்து மாயாதே! நீ அழிந்தால், உன் சாவு, 27 மகளிரை அமங்கலர் ஆக்கும். அவர்களது அழுகுரல் உம்பரெலாம் ஒலிக்கும். வேண்-டாம் உனக்கு இச்சோதனை! ஆர்வத்துடன் யான் பாடும் பாடல் ஒலி, உன் காதிற் படவில்லையா? எம்பெருமான் ஊர்தி-யான ஆண்யானைக்குத் தெரிந்தால், உன்னை விழுங்காமல் விட்டுவிடாது! வீரபாகு முதலான ஒன்பது வீரர்க்குச் சகாயனான விசாகன் திருமுன், அம்புலியே, விளையாட ஓடிவா! பழனி முருகேசனோடு ஆடிடவா!''

என்று பாடும் பழனிப்பிள்ளைத் தமிழைக் கேட்குங்கால்,

''அடியவரை வாழ்வித்த செந்தில்வடி வேலுடன்
அம்புலீ யாடவாவே!
அருவரைகள் கிடுகிடென மயில்கடவு முருகனுடன்
அம்புலீ யாடவாவே!''

என்ற பகழிக்கூத்தர் பாட்டும் நினைவில் எழுவதும் இயல்பு தானே!

காப்புப்பருவமும் பிறவும்

வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள், திருவா-வினன்குடியில் மருவு முருகேசனைப் பார்த்துச் 'செங்கீரை யாடியருளே' என்றும்; தென்னைப் பொழில் சூழ்பழனி நகர்ச் சேந்தா! சிற்றில் சிதையேலே'' என்றும், ''பழனியங்கிரியின் மிசை வளரும் நம் குமர! சிறுபறை மிக முழக்கியருளே!''

என்றும்; "சிவஞான தேசிகத் தலைமை பெறுபாலகா! சிறுதேர் உருட்டியருளே!" என்றும், முறையே செங்கீரைப் பருவம், சிற்றிற் பருவம், சிறுபறைப் பருவம், சிறுதேர்ப் பருவம் என ஏனைய பருவப் பாடல்களில் வேண்டுகின்றார்.

இத்தகு இனிய பிள்ளைத் தமிழில், முதலாவதாக விளங்குவது 'காப்புப்பருவம்'. 'இக்குழந்தையைக்கத்தருள்க!' என்றோ, 'யாம் பாடும் இப் பிள்ளைத் தமிழ்க்குச் சேமம் தருக' என்றோ திருமால் முதலான தெய்வங்களை வேண்டிப் பாடுவது இதன் இலக்கணம.

"ஆனைமுக முன்னவற் (கு) இளவகலென மதிசூடி
அழல்விழியில் வந்து, விண்ணோர்
அன்றுபடும் இன்னலுடன் அவுணரும் ஆர்வனும்
அழித்துத் தெழித்தபூத
சேனையொடு லாவுபெரு வடிவம் கரந்தெமது
சிறுமனமும் நாடுதற்காம்
தேசிக உருக்கொண்டு, பழனிமலை மிசைநிலவு
செவ்வேள் தனைப்புரக்கச்
சோனைமுகி லேயனைய தனதுரு மறைத் (து) அலைகள்
துள்ளும்வெண் பாற்கடலின்வாய்
கரகணமொ (டு) அசுரகணம் இடுமலை சுமந் (து)ஏழு
சுதைத்திரள் பகிர்ந்திடற்கா
மானை நிகர் உருவம் சமைந்து, தகு வாக்(கு) இறுதி
வருவித் (து) அரன்றன் உள்ளம்
மருளுற மயக்கிஒரு மதலையும் அறிந்த அரி
மலரடி வழுத்துதுமரோ!" (1)

என்பது, காப்புப்பருவ முதற்பாடல்!

"யானைமுக முதல்வராம் விநாயகருக்கு இளையவன்; இளம்பிறை அணிந்த சிவபெருமானின் அழலும் ஞானக்கண்களிலிருந்து அவதரித்தவன். அமரர் துன்பத்துடன் அவுணர் இன்பத்தையும் ஒருசேர அழித்தவன்; ஆரவாரிக்கும் பூதப்படைகளுடன் பவனிவரும் தன் மாபெரும் திருவுருவை மறைத்தவன்; ஆயினும் எமது சிறுமை மனமும், தெரிந்து சேர்தற்கு எனக் 'குரு'வாம் திருமேனி கொண்டவன்; இத்தகையான், பழனிமலை மீது விளங்குகின்றான். அவனே

'செவ்வேள்'! அவனைப் பற்றி யாம்பாடுவது இப் 'பிள்ளைத் தமிழ்!.

''கருமுகிலே போன்ற தனது மாபெரும் திருவுருவை மறைத்தவன்; அலைகள் மோதும் வெண்மைப் பாற்கடலில், அமரரொடு அவுணர் இட்ட மந்தர மலையாகிய மத்தைத் தனிப்பெரும் ஆமை உருவாய்த் தாங்கியவன்; கடைந்தபின் திரண்ட அமுதத்திரட்சியைத் தாராளமாய்ப் பங்கிட்டுத் தருவதற்காக, மான்போல் மருளும் மோகினி உருவம் கொண்டவன்; அதனால், மோக அலைகளை மோதவிட்டு அவுணர்கட்கு அவர்கள் மூலமே அறிவை உண்டு பண்ணினவன்; மாபெரும் சிவனுளம் மருள மயக்கியவன்; அதன் வழி 'அரிகர மைந்தர்' எனும் ஒரு மதலையை அருளியவன்! அவனே 'திருமால்!'

''இப்பிள்ளைத் தமிழுக்குச் சேமம் தருவாயாக எனத் திருமாலின் திருவடித் தாமரைகளை நாளும் துதிப்போம்!''

என்ற பொருள்பட அமைவது இத்திருப்பாட்டு!

ஆம்! நாமும் இவ்வுலகம் உய்யப் பழனிமலை மிசை நிலவு செவ்வேளையும், திருமலைமிசை நிலவு திருமாலையும் வாழ்த்துவோமாக!

முடிவுரை

வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகளின் பழனிப்-பிள்ளைத்தமிழ்நூலை ஒருகால் உள்ளம் கனிய ஓதினால், முருகனின் இருகாலும் தோன்றும்; அஞ்சுமுகம் தோன்றுங்கால் அவனின் ஆறுமுகம் தோன்றும், வெஞ்சமர் வந்தால் அவனின் வேல் தோன்றும். உயிர்ப்பிணி தவிர்க்கும் மருத்துவன் அவனே! உடற்பிணிக்கொரு மருந்தும் அவனே! மயக்குறு மனத்தில் நினைவெனும் பணியை மாற்றும் கதிரவனும் அவனே! பழனிப்பிள்ளைத் தமிழ் - பத்திக்கு வித்து; முத்திக்கு வழி! இதனை நாளும் ஓதி நற்பேறு பெறுவோமாக!

வாழ்க தண்டபாணி சுவாமிகள்!

# திருவேரகம் சுவாமிநாதன் பிள்ளைத்தமிழ்

''கல்லா விழற்குமலை வில்லான் மறைத்தெளிவு கையா
லுரைத்த பெருமான்
கைகேயி சொற்றபடி வைதேகி பிற்றொடர மொய்கான
முற்ற பெருமாள்
எல்லோ னியக்கமற மெய்வா னுயர்த்தமலை கையா
லடர்த்த முனிவோன்
எய்யாது மெய்ப்பொருள்சொல் செவ்வாயி னிற்சிறிய
மெல்லா மகிழ்ச்சி யுறவே
வல்லா முலைக்குறவி வில்லா நுதற்கும்வரி மையார்
விழிக்கு மயலாய்
வல்வே டருக்கொடுசெல் கள்வா மலைக்குமகள் மைவாள்
விழிக்கு மணியே
மல்லார் புயத்தமுரு கையா இனிக்குமரு மைவாயின் முத்த
மருளே!
வளர்பூக முந்துதிரும் வளவேர கக்குமர மலர்வாயின்
முத்த மருளே''.

— இப்பாடலைப் படிக்கும்போது, இது, குமரகுருபர அடிகளார் பாடிய பிள்ளைத்தமிழ்போலும் என்று எண்ணத் தோன்று-கின்றதல்லவா? உண்மையில், இத்தகைய இனிய பிள்ளைத் தமிழைப் பாடியவர், நம் காலத்தில் வாழ்ந்த கோவைக் கவி-யரசர் எனக் குவலயம் போற்றும் கு. நடேச கவுண்டர் ஆவர்! நூலறிவும், நுண்மதி நுட்பமும், சமயப் பற்றும், இறையருளும் நிரம்பப் பெற்றவர் இவர். பழநியாண்டவர் மயில்விடு தூது, எட்டிகுடி பிள்ளைத்தமிழ், மங்கையர்க்கரசி பிள்ளைத்தமிழ், திருவேரகம் சுவாமிநாதன் பிள்ளைத்தமிழ் முதலான பல கவிதைகளைப் பாடிய பெரும் புலவர். மேலும் வடமொழி நூல்கள் பலவற்றை மொழிபெயர்த்துமுள்ளார். முந்து நூல்கள் பயின்ற கல்வி மேம்பாடுடையவர். எல்லாவற்றிலும் மேலாகச் சிவன்பால் அன்புமிக்குடையர். உயரும் திருநீற்று ஒளிதிகழும் நுதலினர். உருத்திராக்கம் அணி மார்பினர்; மயர்வில் கேள்வி மலி செவியினர்; வள்ளல் திருப்பேர் சொலப் பொடிக்கும் வியர்வினர்; அன்புமொழி விழியினர். - இத்தகைய நல்லாரே நடேச கவுண்டர்!

திருமுருகன் எழுந்தருளியுள்ள இடங்களில் ஆறுபடை வீடுகள் அடியார்க்கு உகந்தவை. திருப்பரங்குன்று, திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலை எனும் இப்படைவீடுகள் ஆறில், திருவேரகத்திற்கும் பழமுதிர்சோலைக்கும் எனத் தனித்தனிப் பிள்ளைத் தமிழ் நூல்கள் இல்லை, என்ற ஒரு பெருங்குறையைப் போக்க விழைந்தார் நடேச கவுண்டர். எனவே திருவேரகம் எனப்படும் சுவாமிமலை முருகன் மீது ஒரு பிள்ளைத்தமிழ் பாடலானார். அதுவே திருவேரகம் சுவாமிநாதன் பிள்ளைத் தமிழ் நூலாகும்!

'புள்ளைத் தமிழ்' என்பது தூய தமிழில் உள்ள 96 பிரபந்தங்களில் ஒன்று. வழிபடு கடவுளையோ, தனிப்பெருந் தலைவனையோ, குழந்தையாகக் கருதிப் பருவம் ஒன்றுக்குப் பத்துப்பாக்கள் வீதம் பத்துப் பருவங்களாக ஒரு நூறு பாடல்களிற் பாடுவது என்பது இதன் இலக்கணம். இஃது ஆண்பாற் பிள்ளைத் தமிழ், பெண்பாற் பிள்ளைத் தமிழ் என இரண்டு வகைப்படும். காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர் எனப் பத்துப் பருவங்களைக் கூறுவது ஆண் பாற் பிள்ளைத் தமிழ்; இப் பத்தின் இறுதி மூன்று நீக்கி, அவற்றிற்குப் பதிலாகக் கழங்கு, அம்மானை, ஊசல் என்பவைகளை இணைத்துப் பாடுவது பெண்பாற் பிள்ளைத்தமிழ் ஆகும். *

குழந்தை பிறந்த 3 ஆம் திங்களில், திருமால் முதலானோர் இக் குழந்தையைக் காக்க எனப் பாடுவது காப்புப் பருவம்; குழந்தை பிறந்த 5 ஆம் திங்களில் நிகழ்வது செங்கீரைப் பருவம். 'ஙங, ஙங' என்று குழவி மகிழ்வோடு கூறக் கேட்டுத் தாய்மார் இன்பம் கொள்ளும் பருவம் இது. இவ்வொலி மழலையிலும் இனியது. மழலை ஒரு வகையில் பொருள் கொளற்கு உரியது. 'ஙங' எனும் இதுவோ, வெறும் ஒலி மாத்திரமாயிருக்கும். தொடையமைதி இல்லாதவற்றைச் 'செந்தொடை' என்று கூறுவது போலச் சொல்லிற்கு உரிய தன்மை இல்லாதவற்றை, ''மேதகு செங்கீரை'' என்பர் மேலோர். 'கீர்' என்றால் சொல்!

* இப் 'பிள்ளைத் தமிழ் இலக்கணம்' முன்னரே சொல்லப்பட்டுள்ளது.

இனிச் ''செங்கீரை'' என்பதற்கு ''அழகிய கிளி'' என்ற பொருளும் உண்டு. ஒரு காலைப் பதித்து, ஒரு காலைத் தூக்கி, இருபுறத்தும் தலையசைத்துச் சாய்ந்து ஆடும் கிளி-போல், தவழும்போது ஒரு முழந்தாளை ஊன்றி, ஒரு முழந்-தாளை மடித்துத் தூக்கி, இரு தோளிலும் மாறிமாறித் தலை ஒன்றும்படிப் பலதரம் சாய்ந்தாடும் குழந்தைப்பருவம் இது என்றும் கூறலாம். செங்கீரைத் தண்டு காற்றில் அசைந்து ஆடுதல் போல் ஆடும் பருவம் இது என்றும் கூறுவோரும் உண்டு!

மூன்றாவது தாலப் பருவம். தால் என்பது நாக்கு. 7 ஆம் திங்களில் தாயர், சேயைத் தொட்டிலிற்கிடத்தி, உள்தாடையில் நாவசைத்துப் பாடப் பெறும் பருவம் இது.

குழந்தை, கையுடன் கைசேர்த்துக் கொட்டும் பருவம் ''சப்பாணி'' எனப்படும். பாணி என்றால் கை: 'சப்' என்ற ஒலி எழும்படியாகப் பாணியைத் தட்டுவதால் இது சப்பாணிப் பருவம் எனப்பட்டது. ஒன்பதாம் திங்களில் நிகழ்வது இது.

பிள்ளையை ''முத்தம் கொடுக்க வருக' என்று பரிவோடு அழைக்கும் முத்தப் பருவம், பதினோராம் திங்களிற் பாடப் படும்.

தளர் நடையிடும் குழந்தையை ''வருக வருக'' என்று கனிவோடு அழைக்கும் பருவம் வருகைப் பருவம். இது 13–ஆம் திங்களில் நிகழ்வது. இதனை 'வாரானைப் பருவம்' என்றும் கூறுவர்.

ஏழாவது அம்புலிப்பருவம். அம்புலி என்பது சந்திரன். மகவுடன் விளையாட வரும்படி மதியை அழைக்கும் பருவம் இது. பதினைந்தாம் திங்களில் இப்பருவம் பாடப் பெறும். பிற பருவம் பாடுவது எளிது; அம்புலிப்பருவம் பாடுவது அரிது. ''பிள்ளைக் கவிக்கு அம்புலி புலியாம்'' என்பர் அறிஞர். அம்புலியை அழைக்குங்கால் சாம, பேத, தான, தண்டம் எனும் நால்வகை வழிகள் அமையும்படிப் பாடுதல் மரபு. அம்புலிக்கும் பாட்டுடைத் தலைவனுக்கும் ஒப்புக்கூறுவது 'சாமம்' எனப்படும்; வேற்றுமை கூறுவது ''பேதம்'' எனப்-படும்; விளையாட வந்தால் அம்புலிக்கு உண்டாகும் நன்மை-களைக் கூறுவது ''தானம்'' எனப்படும்; வராவிடில் விளையும் இன்னல்களை இயம்புவது ''தண்டம்'' எனப்படும்.

எட்டாவது ''சிற்றிற் பருவம்''. சிறுவீடு கட்டி விளை-யாடும் சிறுமியர், தாம் முயன்று கட்டிய சிற்றிலைச் சிதைக்க வரும் சிறுபருவச் சேயை ''அங்ஙனம் செய்ய வேண்டா'' என வேண்டிக் கொள்ளும் பருவம் இது! இஃது 17ஆம் திங்களில் நிகழ்வதாகும்.

சிறுபறை கொட்டி விளையாடுதலைக் குறிப்பது ''சிறு-பறைப்பருவம்''. இது 19ஆம் திங்களில் நிகழ்வதாகும்

இறுதியில் நிற்பது ''சிறுதேர்ப்பருவம்''. சேயைச் சிறுதேர் உருட்டி விளையாடும்படி அன்னைமார் வேண்டும் பருவம் இது. 21ஆம் திங்களில் கூறப்படும். எனினும் இத் திங்கட்கணக்கில் சிற்சில வேறுபாடும் உண்டு!

இங்ஙனம் இப் பத்துப் பருவங்கள் அமையப் பாடப் பெற்றதே 'சுவாமிநாதன் பிள்ளைத்தமிழ்'!

இவ்வினிய நூலில் திருமுருகனின் பெருமை, சிவனடியார் சிறப்பு, சைவசித்தாந்த நுண்பொருள், இயற்கை எழில் நலம், தமிழின் மேன்மை - எனப் பல்வகைக் கருத்துக்களும் பாங்-குடன் பாடப்பட்டுள்ளன.

திருவேரகத்துத் திருமுருகன் எத்தகையான்?

''ஓயாது நாலு வாயாலும் ஓதிப் பயன் என்? ஓம் பொருள் உணர்ந்திலன்; இந்நிலையில் யானே பெரியன் என இறுமாந்தான் பிரமன்; அவனைத் தெய்வக் குமரன் திருத்த நினைத்தான்; அருகில் அழைத்தான்; முனைப்பொடு வந்த அப் பிரமனின் முகம் நோக்கி ''ஏது புரிவாய்'' என்றான் முருகன்; படைப்பேன் என்றான் அவன். 'வருமா வேதம்?' என்றான் முருகன்; 'வரும்' என்றான் பிரமன். 'வியன் இருக்கு விளம்பு' என்றான் குமரன்; ஆதியினில் குடிலை எடுத்து உரைத்தான் பிரமன். மன்னு குடிலைப் பொருளை அறியாது மயங்கும் பிரமனின் தலையில் குட்டி. அவன் இன்னலுறச் சிறையிலிட்டான். தெளிவு, பிறந்தபின் அவனை விடுவித்தான். அள பிரமன், சிறையிலிருந்த நாளில், முருகன், தன் தந்தை போல் அனைத்துலகையும் ஆக்கி அளித்து அழிக்கும் தொழில் அத்தனையும் தானே நடத்தினன்; எனவே ''சதுரன்''. எனப்பட்டான்.

சமயவாதிகள் சொல்லும் பொருளனைத்தும் பொய்; ''எக்கலைக்கும் பூதங்கள் எவற்றினுக்கும் பரமனுக்கும் ஈசன்

என்னத், தக்க முதல் பரப்பிரம்மன் சதாசிவோம் என்று ஒரு-கால் வேதம் சாற்றும்; முக்கனல் சூழ் வேள்வியில் சுப்ரமண்-யோம் எனவும் முக்கால் கூறும் என்று வேதம் கூறுவதே மெய். அதனால்தான் குமரனை "வேத மெய்ப் பொருள்" என்கின்றார் புலவர். அவன் எங்கும் நிறை பரம்பொருள். அஃதாவது சருவபூரணப் பிரமம். அம்பிகையானவள் இமயத்தில் தவம் செய்து பெற்ற பிள்ளை. எனவே "உமையாள் தவச்சிறுவன் அவன்".

உயர்ந்த கல்லால் நிழலில் நால்வர்க்கு ஒளிநெறி-காட்டிய தந்தைக்கும் பொருள் உரைத்த சிறிய பெருந்தகை. அச் சந்தானத்தின் தலைவராகச் சிவத்தையாக்கினான். என்றும் பதினாறாக இருப்பவனே குமரன். ஆறிரண்டு அனுபவ ஆன்மத் தலைவியை ஆர்வம் கொண்டு தழுவுவோன்; மரணம் தவிர்ப்பவன்; இத்தகைய முருகன், கோயில்கொள் இடமே திருவேரகம். திரு — அருள்; ஏர் — எழுச்சி. அகம் — உள்ளம். அருள் எழும் உள்ளம் பிண்ட திருவேரகம். நெடிய சோலை சூழ் இடம் திருவேரகம். இக்கருத்துக்களை மொழிவது காப்புப் பருவப் பாடல் :

"பூமனைச் சிறையிலிடு கோபன்முத் தொழிலுமொரு தானடத்
திடுசதுரன் வேதமெய்ப் பொருள் சருவ
பூரணப் பிரமமுமை யாள்தவச் சிறுவனுயர்
ஏழுசற் குருவின்முறை வாழ்வுறச் சிவனைமுனம் ஓதுவித்
தவனெடிய சோலைசுற்றிலகுதிரு
வேரகக் குமரன்மகிழ் காவலுக் கருள்கெனவே" (3)

சூரபதுமன் என்ன செய்தான்? முதல்வனும் பொய்; அவன் வகுத்த வழியில் வாழும் ஆன்மாக்களும் பொய்; அந்த உயிர்களைப் பிணித்த பாசப் பெருந்தொகுதியும் பொய். இவ்வாறு சொன்னதோடு நின்றானில்லை. "தானே பிரமம்" என வீணான வழியை மேற்கொண்டான்; தேவரை வருத்தும் கொடிய செயலையும் மேற்கொண்டான்.

"பதியும், அவன் வழியொழுகும் பசுவும், அவை பிணிநெடும்
பாசமும் பொய்யென்றுதான்
பரமம்எனும் அவநெறி பிடித்துக் கொடுந்தொழில்
பயின்ற சூர்" (6)

என்பது கவிஞர் வாக்கு. பொல்லாத அச் சூரபதுமனின் தொல்லை பொறுக்க முடியாத அமரர்கள், "அருளாயோ அமலா" என்று அலறி அழுதனர். அது கேட்டதும் தோன்றா அதோமுகம் தோன்ற, ஆறுமுகம் ஆயினன் அம்மான். விமல சிவவீரியம் ஆறு நெற்றிக் கண்களிலிருந்து குபீர் குபீர் என்று வெளிப்பட்டன. ஆறு கனல் பொறிகளான அவைகள் விரிந்து உலகெலாம் வியாபித்தன. அது கண்டு அஞ்சி, ஓடி விண்ணோர் ஒளிய முயன்றனர். எங்குச் சென்றாலும் அங்கங்கு இருந்தது அந்த அனல். ஏக்கம் எய்தினர், சங்கரன் திருமுன் சரணடைந்தனர். சூரனைச் சாய்க்க,

> "ஒருமைந்தனை எந்தாய், தந்தருள் என்றுனை வந்தனை செய்ய
> வீடுறு வெம்மைகொள் அங்கியளித்தாய் எங்ஙனம் உய்வது யாம்?"

என்று பெருங்குரலிட்டு வழிபட, அது கேட்டுப் பெருமான் பெருமித ஒருமுகம் ஆயினன். அதனுடன் அஞ்சவேண்டா என்றும் அருளினன். மேலும், வியாபகமான கனலை விளித்தான்; எங்குமான கனல் ஆறு பொறிகளாகி எதிர் வந்தன.

"ஏ அக்கினி! வாயுதேவா! நீங்கள் இருவரும் சிறந்த இப்பொறிகளைக் கொண்டு சென்று வித்தகக் கங்கையில் விடுவீர்களாக" என்று விளம்பினன். அதனுடன் அவைகளைச் சுமந்து செல்லும் ஆற்றலையும் அருளினன். அங்ஙனம் அருளியும் கனல் பொறிகளைத் தாங்கிச் சென்ற கனற் கடவுள், அச்சத்தால் அதிர்ந்தவனாதலின், பொறுக்கலாற்றாது, அவைகளை விமல கங்கையில் விட்டான். கங்காதேவி தன் கைமேல் வணங்கி ஏற்றாள்.

அங்ஙனம் அவள் கைமேலும், சங்குகள் ஒலிக்கும் சரவணப் பொய்கையில் உள்ள குளிர்ந்த தாமரையாகிய அழகிய தொட்டிலிலும், கார்த்திகை மாதர்களான ஆறு தாயர் மடிமேலும் உலக அன்னையான உமையின் மென்மை மார்மேலும், பிறையணி சடைமுடிச்சிவனார் தொன்மைத் தோள்மேலும் திருக்கண் வளரும் சிவக்கொழுந்து!

> "பொங்கு தழலோன் தன்கரங்கள் பொறுக்க கில்லானாகிநிறை
> புனிதப் பாகீ ரதியுய்ப்பப் போற்று மவள்கைத் தலமீதும்

சங்க முரலும் சரவணத்திற் றண்டா மரைப்பூந்
தொட்டிலிலும்
தாய்மா ரறுவர் மடிமேலும் சகதாம் பிகைமென்
மார்மேலும்
திங்கண் முடியார் தோள்மேலும் திருக்கண் வளரும்
சிவக்கொழுந்தே'' (30)

என முருகக்குழந்தையை முத்தமிழால் ஏத்துகின்றார் நடேசனார்!

ஆணவம் கொண்ட அச் சூரபதுமனின் தலைநகரம், தென்கடலின் நடுவில் இருந்தது; வீரமகேந்திரம் என்ற பெயரினைக் கொண்டது. அந்த நகரத்திற்கு அரணாக அமைந்த கடல் அலறும்படியாகவும், முதுகுகாட்டி ஓடிய சூரனை மறைத்துக் காத்த மாயாமலை பிளவுபடும்படியாகவும் முதன்மைவேலை வீசினான் முருகன.

முருகனுக்குரிய முகங்களோ இரு மூன்று. ஏறுமயில் ஏறி விளையாடு முகம் ஒன்று; ஈசருடன் ஞானமொழி பேசு முகம் ஒன்று; கூறும் அடியார்கள் வினை தீர்க்கும் முகம் ஒன்று; குன்று உருவ வேல் வாங்கி நின்ற முகம் ஒன்று; மாறுபடு சூரரை வதைத்த முகம் ஒன்று; வள்ளியை மணம் புணரவந்த முகம் ஒன்று. இத்தகைய அறுமுகன் எழுந்தருளிய திருத்தலமே திருவேரகம்!

''முதியவுத தியும் அலற மலைபிளவு பட எறியும்
முருகன் குருகிரியில்வாழ்
முதல்வன்; கவுமாரி புதல்வன்; புனித அறு
முகவன்''(6)

முருகன் தனக்குவமை யில்லாதவன்; வேதங்கள் படித்துத் துதிக்கின்ற பரப்பிரம்ம சொரூபம்.

''முருகா! விளையாடுவது உனக்கு இன்பப் பொழுது போக்கு! 'இவனையன்றி முழுமுதல் தெய்வம் வேறில்லை' என்று உணர்ந்த வீரவாகு முதலான நவ வீரர்களுடன் விளையாடிக் கொண்டிருந்தாய். நின் அன்னை உமையவளோ, நம் தவமைந்தன் திருமேனி தளருமேஎனத் திருவுளங்கொண்டு, 'என்மகனே! பழுத்த பசிநீங்கப் பால்பருக வா' என்று உன்னை அழைத்ததும் நீ ஓடோடிச் சென்று, அவளின் திருமுலைப்பால் அருந்துவாய். அப்படி நீ அருந்திக்கொண்டிருக்கும்போது, உவமைகடந்த நின்தந்தை சிவபெருமானோ, 'முருகா, முருகா'

என முன்னின்றழைத்துத் தன் திருக்கரம் நீட்டுவான். நீயோ, பால்குடியையும் மறந்து, அன்னைமடியிலிருந்து விரைந்து எழுந்து ஓடிச் சென்று சிவனாரின் பரந்த திருமார்பில் ஏறி விளையாடுவாய்! அத்தகைய குகேசா! எம்பொருட்டுச் செங்-கீரை யாடி யருளமாட்டாயா?'' என்று வேண்டுகின்றார் புலவர்.

''இவனலா தொருமுதலிலை யெனஉணர் இளையோன் வயவாகு
இணைபிரி வரும்நவ வயவர்களொடும் இயல்விளை-யாடல்செய் எல்லை
தவமகன் உடல்குழை வுறுமென நினைசிவை தழுவிஎன் மதலாய்நீ
தழைபசி யறமுலை நுகருதிஎன அவள் தர அமுது உணுபோதே
உவமையில் அரன்அவன் அணுகிமுருக என ஒண்செங் கைநீள
உடன்அனை மடிநின் றோடித்தாவி உவந்தே சென்றேறிச்
சிவனவன் மார்பிடை நடமிடு பதயுக செங்கோ செங்கீரை
திருமகள் மருமக குருமலை வளர்குக செங்கோ செங்கீரை''

என்ற இப்பாட்டில் முருகன் பெருமைமட்டுமன்று, கவிஞர் கற்பனையும் அமைந்துள்ளதன்றோ!

அங்குளது இங்குளது என்று சொல்லாதபடி விரிந்து எங்கும் வியாபகமாகி, அணுவிற்குள் அணுவாய், மலைகட்கு-மேல் பெரிய மலையாய் அமர்ந்திருக்கும் மேலான பொருள்நீ!

சிலர், நின்னை வடநாட்டார் வழிபடுதெய்வம் என்பர். பாஞ்சசன்யம் ஏந்திய நெடுமைத் திருமாலின் குன்றான திருவேங்கடத்திற்கும், கன்னியாகுமரிக்கும் இடைபட்ட நிலத்தில் வளர்ந்து உயர்ந்து, என்றும் தனது இளமை அழகு குன்றாத தென்மொழித்தமிழா வழிபடும் ஒப்பற்ற தெய்வம் என்பர்.

நால்வேதங்கள், அதன் ஆறு அங்கங்களோடு விளங்கும் வடமொழியே நமக்கு அருமையான மொழி என்பர் சிலர்.

அழியாமல் வழங்கும் மொழியாகி, உலகில் பேசப் பெறுகிற தமிழ்மொழியே நம் தாய்மொழி என்பவர் சிலர். இங்ஙனம் இருவேறு வகையினர் வாதிடுவர்.

எம்மொழியும் இறை மொழி; எச்சமயமும் இறை சமயம் எவ்வழிபாடும் இறை வழிபாடு. இதனை அறியாதிருப்பது அறியாமையே அதனை இழிவுபடுத்துவதுபோல் அதற்கு அறிகுறியாக, நீ சப்பாணிகொட்டியருளே. எல்லோர்க்கும் தெய்வமான சுவாமிமலை முருகா! சப்பாணிகொட்டியருளே!

''அங்கிங்கெ னாதபடி எங்குங் கலந்தணுவு ளணுவாய் மலைக்கு மலையாய்
அமரும் பரப்பிரம மானவனை சிலர்வட ஆரியர் தெய்வமெனவும்
சங்கங் குலாவிநெடி யோன்குன்று குமரியிடை தனில்வளர்ந் தோங்கி என்றும்
தன்னிளமை குன்றாத தென்றமிழர் போற்றுந் தனித்-தெய்வ மென்று மறையாறு
அங்கங்க ளோடுபொலி ஆரியந் தான்நமக் கரியபெரு மொழியதென்றும்
அழியாம லுலகினிற் பயில்கின்ற தமிழேநம் அன்னை யெனவும் வாதிடும்
சங்குலங் கண்டந்த மடமையை யிழித்தல்போற் சப்பாணி கொட்டி யருளே
சகலருக் குந்தெய்வ மானகுரு மலைமுருக சப்பாணி கொட்டி யருளே'' (40)

என்பது கவிஞர் வாக்கு!

முருகன், திருமாலின் மருகன். திருமால் எத்தகையவன்? காஞ்சியில் வாழ்ந்த 'கணி கண்ணன்'' திருமால் பக்தன் அவன்பால், ''எனக்கு இளமை நேர அருளும்'' என்றான் அரசன். 'என்னால் இயலாது' என்றான் கணிகண்ணன், ''உம் குருநாதர் திருமழிசையாழ்வாரிடம் எனக்காக விண்ணப்பிக்கவும்' என்றான் மன்னன். ''மாநுடம் பாடார் எம் ஆழ்வார்'' என்றான் கணிகண்ணன். ''எனக்கு உதவா நுங்கட்கு எம் நாட்டில் இடமில்லை'' என்றான் அரசன் இச் செய்தியைத் தம் குருநாதரிடம் உரைத்தான் கணிகண்ணன். ''அப்படியா?'' என்று அப்போதே புறப்பட்ட திருமழிசை ஆழ்வார், நேராகப் பெருமாளிடம் சென்றார்.

''கணிகண்ணன் போகின்றான்! காமருபூங் கச்சி
மணிவண்ணா! நீயிங்கி ராதே - துணிவுடைய
செந்நாப் புலவனியான் செல்கின்றேன்; நீயுமுன்றன்
பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்''

என்று பாடினார். இத் தீந்தமிழ்ப்பாடலைக் கேட்ட திருமால், தன் பாம்புப் பாயலைச் சுருட்டிக் கக்கத்தில் வைத்துப் புனித ஆழ்வாருடன் புறப்பட்டுவிட்டார்! உண்மையறிந்த மன்னவன் வருந்தினான். ஆழ்வாரைக் கண்டு பணிந்து வேண்டினான். ஆழ்வாரும் மனம் இரங்கி, மணிவண்ணனைத் தொழுது.

> ''கணிகண்ணன் போக்கொழிந்தான்! காமருபூங் கச்சி
> மணிவண்ணா! நீயிங் கிருக்க — துணிவுடைய
> செந்நாப் புலவனியான் செலவொழிந்தேன்.
> நீயுமுன்றன்
> பைந்நாகப் பாய்படுத்துக் கொள்''

என்று வேண்ட, இறைவனும் அவ்வாறே குறித்த இடத்தில் கோயில்கொண்டான் என்பது வரலாறு. இதனை உட்கொண்டே கோவைக் கவிஞரும்,

> ''கணிபா வலனோ தியவா றுடனே கடுவாய் பைக்கஞ்
> சுகியான
> கனபா யலொடே தொடர்வார் மருகா ...
> பகவா திருவே ரகம்வாழ் குமரா பணிவாய் முத்தம்
> தருவாயே'' (49)

எனப் பாடுவாராயினார்.

''அன்பினால் எடுக்கவரும் எப்போதும், அப்பால் ஓடி அகல்கின்றாய். நான் உன் அன்புத் தாயல்லவா? சுரந்த முலைப்பாலை உனையன்றி வேறு பிள்ளைக்கு ஊட்டுவ-னோ?

''முன் ஒருசமயம், பார்வதி தேவியார் செய்ததுபோல் கறந்துஊட்டி, என் முதுமை தவிர்ந்து களிப்பேனோ? அருமைத் திருமார்பில் அணைத்துக், கண்ணேறு கழிப்பக் கன்னத்தில் நொடித்து, முத்தம் தந்ததை மறந்தனையோ?

''கடுமை காட்டி, உன் பொன்னிறமான மலர்போலும் திருமேனி நோகத் தொடுதலும் செய்யேன்.

''உன் மலர்போன்ற திருவடிகளை என் கண்ணின் மணிமேல்வைத்துக் காக்கும் சிந்தனை கொண்டுள்ளேன்.

''தென்திசைக் கயிலைமலையான திருவேரகச் சேயே! வருகவே! செம்பொன் மலையில் பசுங்கொடியில் மலர்ந்த தெய்வ மலரே வருக வருகவே!'' என முருகனை ''வா வா'' என அழைக்கிறார் கவிஞர்.

"அன்பா லெடுக்க வருந்தோறு மப்பா லோடி
யகல்வாயில்
அன்னை யலனோ பால்சுரந்த தயலோர் மகவுக்
களிப்பேனோ
முன்பார் வதியோற் கறந்தளித்தே முதுமை விலக்கி
மகிழ்வேனோ
மொய்ம்பி லணைத்து நொடிபயிற்றி முத்த
மளித்தல் மறந்தனையே!
வன்பா லுன்பொன் மலர்மேனி வருந்தத் தொடவு
மாட்டேன்உன்
மலர்த்தா ளிணையென் கண்மணிமேல் வைத்தே
புரக்கு மதியுடையேன்.
தென்பாற் கயிலை மலையாகுந் திருவே ரகச்சேய்
வருகவே!
செம்பொன் மலைப்பைங் கொடி பூத்த
தெய்வமலரே வருகவே" (64)

என்பது வருகைப் பருவப் பாடல்.

எம் குமரனோடு விளையாட வரும்படி அம்புலியை அழைக்கும் கவிஞர், சாம பேத தான உபாயங்களைக் கூறி இறுதியில் தண்ட உபாயத்தால் அம்புலியைத் தெருட்டும் பாடல் அழகுமிக்கது!

"கடல்சுவற மலைபொடிய வேல்விடுவ ளழலின்எழு
கைகள் வெய் தாக அடுவான்
கமலக்கண்ணன் னாரிருவர் தம்மைவன் சிறையிடும்
கண்ணைப் பறிப்ப னுன்னைக்
குடையெனக் கொள்மதனன் விழியினெதிர் வருவனோ
குழவியென இவனை மதியேல்
குழகன் அழல் விழியினுறு சிறுபொறியி னுலகெலாங்
குதிரையனல் படுபஞ்சுகாண்!
படஅரவின் நெடியகைப் பிணிமுக மருந்தநெய்ப்
படுகவள நீயாகுவாய்!
பசுமயிலு நாய்க்குடையி தெனவுனைக் கொத்திப்
பதைக்கப் பதைக்க அடுமே
அடமுனிவு கொளுமுணர கரசரணமெனவிரைந்
தம்புலீ யாடவாவே!
ஆரணம் தமிழிலகு மேரகம் பொலிமுருகொ
டம்புலீ யாடவாவே!" (74)

என்பது 'தண்ட உபாயம்' கூறிய பாட்டு! "அம்புலியே! உனக்கு ஒன்று சொல்லுவேன். எம்பெருமான், கடல்நீர் வற்ற, மலை தூளாக, வேல் வீசுவான். அக்கினி தேவனுடைய, ஏழு கைகளை விறுவிறென வெட்டி வீழ்த்துவான், கமலத்தில் இருந்த பிரமதேவரைக் கடுஞ்சிறையில் அடைப்பான்! உன்னைக் குடை எனக் கொண்ட மன்மதன், இச் செவ்-வேளின் கண் எதிரே நிற்பானா! இவனைக் குழந்தை என்று எண்ணாதே! இந்த இளம் பிரானின் அழல்கண்ணிலிருந்து வெளியாகும் சிறுபொறியினால் உலகெலாம் வடவைத் தீயில் பட்ட பஞ்சுபோல் பாழாகும். படத்தையுடைய பாம்பு போன்ற நீண்ட தும்பிக்கையுடைய 'பிணிமுகம்' என்ற எம் முருகனது ஊர்தியான யானை உண்ணத் தொடங்கினால் அதற்கு நீ ஒரு கவள உணவு தான்! இவனது மற்றொரு ஊர்தியான பச்சைமாமயிலும் 'இது நாய்க் குடை' என்று எண்ணி, உன்னைக் கொத்திப் பதைத்துத் துடிக்கக் கொன்று விடும்! இப்படி உன்னைக் கொல்லும் அளவு முனிவு கொள்ளுதற்கு முன், 'அரஅர' என்று அடைக்கலம் சொல்லி, விரைந்து எம் முருகனோடு விளையாட வா சந்திரனே! வடமொழி வேதமும் தமிழ் வேதமும், வாழும் திருவேரகத்தில் எழுந்தருளியுள்ள எம் முருகனுடன், சந்திரனே விளையாட வா!'' என்று கூறுவது எத்துணைப் பொருத்தமாகவுள்ளது?

சிறுவீடுகட்டி விளையாடுகின்றனர் சிறுமியர்; அவர்களோ மிகமிக அரிதின் முயன்று கட்டியுள்ளனர் சிறு வீட்டை! அதைச் சிதைக்கவருகிறாயே முருகா! 'அங்ஙனம் சிதைக்காதே!' என வேண்டுமிடத்து இப்படிக் கற்பனையாக உரைக்கிறார் கவிஞர்:

''முருகா! நின் தாய் பார்வதியோ, மலையின் மகள்; மாமி இலக்குமியோ கடலின் மகள். நின் தந்தை சிவனோ, உலகத்தையே அழிப்பவன்! நின் மாமன் திருமாலோ உடல் பருத்தவன்! நினக்கு மாமனார் இருவரல்லவா? முதல் மாமன் தேவேந்திரனோ, மலைகளின் இறகுகளைப் பறித்த வச்சிரக் கொடியோன்; அடுத்த மாமனாம் வள்ளி தந்தையோ, பெருங்-கோபம் கொண்ட வேடுவன். நின் உறவினராகிய அடியவ-ரோ, வலிமை மிக்கவர்கள். எனவே நீயும் இவர்களைப் போல நேர்வழியிற் செல்லமாட்டாய்! உத்தமர்வழி உனக்கு எப்படித் தெரியும்? வல்லான் வகுத்ததே வாய்க்கால் ஆனது நின் வரலாறு! சின்னஞ்சிறு பெண்களிடம் நின் கால்களில்

ஆண்மையைக் காட்டுவது நின்னைப் போன்ற மைந்தர்க்கு அழகு ஆகுமா? அடியேங்கள் சிற்றிலை அழித்திடாதே!'' என அப்பெண்கள் வேண்டுவதாக அமைகிறது இப்பாடல்,

''மலையின் மகட்கு மகனானாய்! வாரி மகட்கு
மருகானாய்!
வலியதந்தை உலகழிப்பான்; மாமன் பேரா
வைகுண்டன்!
சிலையைச் சிறைகொய் கொடியோனும் சினவே
டுவரும் பெண்கொடுத்தோர்
செகத்தில் வலிமைச் சுற்றமுளாய்! செம்மை
நெறியிற் செல்லாயோ?
மலியும் வலிமை வாய்த்தோர்கள் வகுத்த வழியே
வாய்க்காலோ?
மகளிரிடந்தா ளாண்மையினை மைந்தர் காட்டல்
மாண்பாமோ?
அலகில் வளஞ்சேர் புனனாடா அடியேஞ் சிற்றில்
அழியேலே!
அணியே ரகம்வாழ் குருமணியே! அடியேஞ் சிற்றி
லழியேலே!'' (81)

— இதனைப் படிக்கும்போது நகைச்சுவை தோன்றாமல் இருக்குமா?.

''பிறவி என்பது பெரிய நோய்! இஃது எவர் ஆதரவு காட்ட, அகலும்'' என்று மனம் பதைபதைத்துச் சோர்வு கொள்ளும் காலத்தில், முருகா! நீ எமக்கு அடைக்கலம் தரு-கிறாய்!. ''அஞ்சேல்! இன்னுயிர்க்கு ஓர் அழிவும் இல்லை! நலம் சிறந்த அறிவை மயக்குவது பித்தம். அப்பித்தத்தால், இந்நோய், உன்னில் ஆட்சி செலுத்துகிறது. பால்சோறும் பழவகையும் பத்திய உணவு; எமது மணிமந்திரம் ஔடதம். பாடும் இந்நோயைப் பறந்தோடச் செய்யும். சிவபுராணமே - சோறு; பயனான வேதாகம ஞானமே - பால்; பிரமோபாசனை-யே - கனி. இத்தகைய கேள்வி உணவில் கேண்மை கொள்! பையில் உள்ள பசுபமாகிய திருநீற்றைப் பூசு! செபமணியை அணி! உயரிய ஆறெழுத்தை ஓது! இந்த மணிமந்திர ஔடதங்களும், பத்திய உணவும் தீராப் பிணிகளைத் தீர்க்கும்!' — இவ்வாறு குறிப்பினாலே அடியவர்க்குக் கூறி அருளும் சுப்பிரமண்ய! சிறுதேர் உருட்டி அருள்வாயாக!'' என்ற பொருளில்,

"ஆரா தரிக்கவிது நீங்குவதெ னத்துடித் தயர்கின்ற
பக்கவத்தே
அஞ்சற்க இன்னுயிர்க் கழிவொன்று மில்லை நல்
அறிவினைமயக்குவித்தும்
தாராத சிவசரித வமுதுமா கமமறைத் தண்பாலும்
ஒண்பிரமமாம்
தண்ணுறுங் கனியுமுட் கொள்கயாம் பரிவினால்
தருமருத் துப்பையினைச்
சீராக ஆய்ந்துவெண் பொடியெடுத் துப்பூசு திருமணி-
யை அணிக அன்பால்
திருவா றெழுத்து யந்திரமோது பிணியீது
திருமென் றருளியடியார்
தீராத பவநோய் அகற்றுவைத் தியநாக சிறுதே-
ருட்டி யருளே!
திருவேர கத்திலரு ளுருவான சுப்ரமணி சிறு
த்தேருருட்டி யருளே!" (96)

என்கிறார் இன்றமிழ்ப் புலவர்!

இத்தகைய பேரருட் திறத்தினனாகிய முருகன், ஒரு பெண்ணின் முன்னாலே மயங்கி நின்றான் என்றால் நமக்கு வியப்பாகத் தோன்றுமல்லவா? ஆம்! பாலா, இனிப்புடைய மா, நீண்ட விளா, மணம் வீசும் சந்தனம், அகில், பரந்த நிழல்தரும் அசோகு, பருத்த அடிப்பாகமுடைய வேங்கை, மரா, குரா எனும் மரங்கள் வளர்ந்து உயர்ந்த பசிய தினைப்-புனக் காவலைவிட்டு அகலாதவள்; பிறைபோன்ற நெற்றி-யுடையவள்; வேல்போன்ற விழிகளைக் கொண்டவள். குறவர் குலத்தில் உதித்தவள்; மின்னற் கொடிபோன்றவள். அவளே வள்ளிநாயகி! அவளது திருமுன், தனது எளிமை வெளிப்படும்படி நின்று மயங்கினான்மாயவன் முருகன்!

"பலா, இனிய மா, நெடு விளா, விரைய வாரம்அகில்
பாவுநிழல் சேர் அசோகம்
பராரை, முதிர் சேகனி மரா, குரவ நீடுவளர்
பைம்புனம் காவல்ஓவா
திலாநுதலி வேல்விழியி னாள், குறமி னாள் திருமுன்
நின்றே கரம் குவித்தே
தினாதடிய னான்உய்வொ ரேவல்கொள வேணுமென
நின்றே மயங்கு விடலாய்!" (17)

என்று வள்ளி மணாளனின் காதலுள்ளத்தைக் கனிதமிழாற் பாடுகின்றார் கவிஞர்.

இத்தகைய பெருமைமிகு முத்தமிழ் முருகனிடம் இம் முத்தமிழ்க் கவிஞர் வேண்டுவது? யாது இதோ அவர்தம் திருப்பாட்டு:

''வெங்களம் இதில், புலப் பகைநடு இருந்தஞ்சு
வேமைஅஞ் சேலெனும் சொல்
விளம்பியருள் புரிதல்முறை யாகும்! நீ பாணிக்கில்
வேறுதுணை ஏதுமறியோம் !'' (16)

''மாயையின் பொல்லாக் கொடிய போர்க்களம் எனும் இப் பூவுலகில், ஐம்புலப்பகையின் நடுவில் அகப்பட்டு அஞ்சுகிறேன் யான்! என்பால் 'அஞ்சேல்' எனும் ஆர்வமொழியை அருளமாட்டாயா? குமரப் பெருமானே! அங்ஙனம் அருளுதல் நின் அருட்டன்மைக்குத் தகுதியன்றோ? உன்னை ஒழிய ஒருவரையும் நம்புகிலேன்; ஆதலின் நீ காலம் கடத்தினால் வேறுதுணை ஏதும் அறிகிலேன்!'' என்று வேண்டுபவர், கனவிலேனும் ஒருமுறை வந்தாகிலும் எனக்குக் காட்சி நல்கமாட்டாயா என்று கனிந்து உருகிப்பாடுகின்றார்.

''இந்திர நீலமணிபோல் வளர்ந்த குடுமி, கருமை ஒளியுடன் திகழும்; நிறைமதி போல் திருமுகம் ஒளிவீசும்; கமலமலர் போன்ற கண்களில் கடல் போல் எழும் கருணை அலைவீசும் அழகிய திருவாயிலிருந்து புன்னகை அரும்பும்; பல ஆயிரம் பரிதிகளின் ஒளி திரண்டாற்போலத் திருமேனி ஒளி கக்கும்!

''வழிபடும் வானவர், மானிடர், முனிவர் ஆகியோரின் பாவமாகிய மலை தவிடு பொடியாக்கும் தன்மைகொண்ட ஞானவேல், திருக்கரத்தில் திகழும்; வரிசையான தோகையும் நீல விழியும், விளங்கும் உச்சிக் கொண்டையும், சிவந்த பவளக் கால்களும் கொண்ட அழகிய மயிலாகிய குதிரை மேல் அமர்ந்து, இதயம் கனியும் எளியேனின் சுற்றி மொய்க்கும் துயர் தொலைய, என் கனவில் ஒருநாள் — ஒரு பொழுதேனும் வந்து காட்சி தரமாட்டாயா?''

''வலாரிமணி போலவளர் குஞ்சிஒளி விஞ்சநிறை மதிமுக
நிலா வெறிப்ப
மலர்பதும விழியுத்தி எழுகருணை யலைவீசமணிமுறுவல்
வாயரும்பப்
பலாயிரர்கள் சூரியர்தம் ஒளிதிரண் டனையஒளி பயில்மேனி
வெயில் விளங்கப்

பராவுசுரர் நரர் முனிவர் பாவமலை தவிடுபொடி
படவடரும் வேல்வகை மிளிரக்
கலாபநிரை நீல்விழி குலாவுசிகி செந்துகிர்க் கான்மயிற்
புரவியேறிக்
கனவுதனி லேனுமொரு காலின்வரு மோஎனக் கருதியக
நெகிழுமெளியேம்
கலாவுதுயர் கோபவிரை வாகமறை யோதுசிவ சுப்ரமண்
யா!'' (55)

என்று கன்னெஞ்சமும் கரையும்படிப் பாடும் இப்பாட்டில், 'கனவு தனிலேனும் ஒருகாலின் வருமோ?' என்ற ஏக்கம் கவிஞர் நடேச கவுண்டருக்குமன்று, நமக்குங்கூட உண்டா கின்றதல்லவா?

இவ்வாறு திருவேரகத்துத் திருமுருகனை உள்ளம் குளிர, உயிர் குளிர, ஒண்டீந்தமிழால் பிள்ளைத்தமிழ் பாடிய நடேசகவுண்டரை,

''வேத மணக்கும் கலைமணக்கும் விரும்பு நால்வர்
கவிமணக்கும்,
காத மணக்கும் கடம்பணிவேள் கருணை மணக்கும்
உயர்ந்தசிவ
போத மணக்கும் சுவைதாமே புகுந்துமணக்கும் இன்
கவிகள்
பேதந் தொறும்சொல் தோறுமெனப் பரவும் கீர்த்தி
நடேசகவுடையான்!'' (சாற்றுக்கவி)

என அறிஞர் போற்றுவது தகுமன்றே! கவிஞர் பாடிய கனி தமிழ்ப் பிள்ளைந்தமிழை நாளும் ஓதுவோம்! வளரும் முத்தமிழ் குருமலைக் குமரனின் பேரருளைப் பெறுவோம்!

வாழ்க நடேச கவுண்டர்!

## 8

# தமிழ்ப் பாட்டு

செந்தமிழின் சீர்மையினைச் செப்பவந்த செந்நாப் புலவர்கள் ''கண்ணுதற் பெருங்கடவுளும் கழகமோ டமர்ந்து, பண்ணுறத் தெரிந் தாய்ந்த இப் பசுந்தமிழ்'' என்றும், ''என்றுமுள தென்றமிழ்'' என்றும் ''கூடலின் ஆய்ந்த ஒண்டீந்தமிழ்'' என்றும், ''எல்லையறு பரம்பொருள் முன்னிருந்தபடி'' இருக்கும் மொழி என்றும், ''தமிழுக்கு அமுதென்று பேர், அத்தமிழெங்கள் உயிருக்கு நேர்'' என்றும் பலவாறாகப் புகழ்ந்துரைப்பாராயினர். பண்டைத்தமிழ்ச் சான்றோர், தமிழைப் பாடுவதும், பேசுவதும், எழுதுவதும் இன்பமெனக்கொண்டிருந்தனர். தமிழுக்கு நன்னிலையெனில் தமக்கும் அந்நிலையேயெனக் கருதினர். தங்கள் வாழ்வும் வளமும் மங்காத தமிழுக்கேயென நினைந்தனர். அந் நினைப்பினால், தம் உள்ளத்தெழும் உயர்ந்த கருத்துக்களைப் பாட்டு வடிவில் வடித்துத் தந்தனர். அப்பாடல்களைத் தமிழன்னையின் திருவடித் தாமரைகளில் வைத்துப் போற்றிப் புரந்தனர். அன்னவர்தம் தமிழ்ப் பண்பையும், நுண்மாண் நுழைபுலத்தையும், அவர்கள் பாடிய தீந்தமிழ்ப் பாடல்கள் இன்றும் பறை சாற்றி நிற்கின்றன.

பிறவா யாக்கைப் பெரியோனாம் சிவபெருமானின் திருவருட்டிறத்தைப் பாட நினைந்தார் புலவரொருவர். சிவபெருமானோ, ''வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி, ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க், கோனாகி, யானெனதென்று. அவரவரைக் கூத்தாட்டுவானாக'' இயங்குபவன்;யாவையும் படைத்தும், காத்தும், கரந்தும், அழித்தும், தானழியாப் பெருந்தகையினன்; ''தன் அருள் வெளிக்குளே-அகிலாண்ட கோடியெல்லாம் தங்கும்படிக் கிச்சை'' வைப்பவன், ''உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன், நிலவுலாவிய நீர்மலி வேணியன்; அலகில் சோதியன்'' ஆனால் அம்பலத்திலாடும் அருளாளன்.

பரந்து தோன்றும் வானத்தை நோக்கினால் விண்மீன்கள் எத்தனை? கோள்கள் எத்தனை? வெய்யவனும், வெண்ணிலாவும் இன்ன பிறவுமாக எத்தனை யெத்தனை? இவையனைத்தும் இயங்கிக் கொண்டிருக்கின்றன; என்றும் அழியாமல் நிலைபெற்று நிற்கின்றன! இவற்றைப் படைத்தவன் யாவன்? எங்ஙனம் இயங்குகின்றன? ஆம்! ஆதிபகவனாகிய சிவபெருமானே இவற்றை உண்டாக்கினான்; இயக்குகின்றான், "ஆட்டுவித்தால் யாரொருவர் ஆடாதாரே?" அவன் ஆட்டுவிக்கிறான்; உலகமும் உலகத் துயிர்களும் ஆடுகின்றன. 'ஒரு நாமம் ஒருருவம்" இல்லா இவ் வித்தகனை, இவ்வுலக மக்களோ 'ஆதிரையான், ஆதிரையான்' என்று சொல்லிச் சொல்லி அலமந்து போகின்றதே, என்னே விந்தை!

சிவபெருமானோ, என்றும் உள்ளவன்; அவனுக்குப் பிறப்பும் இல்லை, இறப்பும் இல்லை. அவனால் உண்டாக்கப் பட்டவையே ஞாயிறும், நிலவும், நாண்மீன்களும்! அசுவதி முதலான நாண்மீன்களுள் ஒன்றுதானே ஆதிரை! அங்ஙனமிருக்க, அவனை ஆதிரையான்' என்று கூறக் காரணம் என்ன? ஆதிரை நாளில் பிறந்தவன் என்று கருதி அழைக்கின்றனரா? அவனோ, பிறவாயாக்கைப் பெரியோனாயிற்றே, தாயுமிலி தந்தையிலி தான் தனியன் ஆயிற்றே! அன்றி, ஆதிரை விண்மீனைப் போல் உள்ளவன் எனுங் கருத்தால் அழைக்கின்றனரா? பின் யாது காரணத்தால், கடல்சூழ் உலகம் 'ஆதிரையான்' என்று அரற்றி மயங்குகிறது?

"மன்னிய நாண்மீன் மதிகனலி யென்றிவற்றை
முன்னம் படைத்த முதல்வனைப் - பின்வரும்
ஆதிரையான் ஆதிரையான் என்றென் றயருமால்
ஊர்திரைநீர் வேலி யுலகு"

—இவ் அருமைத் தமிழ்ப் பாட்டில் புலவர், பிறப்பறுக்கும் பிஞ்ஞகனறனாம் சிவபெருமானின் இயல்பினைப் புகழ்ந்துரைக்கின்றார். மக்களின் கூற்றைப் பழிப்பதுபோல் புகழ்கின்ற புலவர்தம் மாண்பு இப்பாடலில் விளங்குகிறது.

பாண்டிய மன்னன்

தமிழை வளர்த்த தகைமை, முடியுடைவேந்தர் மூவர்க்கு முரியதேயாயினும் பாண்டியர்க்கே பெருஞ்சிறப்பு உரியது-

அவர்களே, முச்சங்கங் கண்டு முறைமையால் முத்தமிழைப் போற்றிக் காத்தனர். இத்தகு பாண்டிய மரபிற் றோன்றிய வேந்தன் ஒருவனைப் பாடநினைந்தார் அப்புலவர்!

பாண்டிய மன்னன் பார்முழுதும் போற்றப் பாண்டிய நாட்டை ஆண்டு வருகின்றான். ஈரமும் ஈகையும் ஒருங்கே கொண்டவன். அதே வேளையில் வீரமும் வெற்றியும் தனக்கே உரித்தாக்கியவன். அதனால் அவன் நாடு, பரந்துபட்ட நாடாக விளங்கியது. அவனடிக்கீழ் அரசாண்ட அரசர்கள் பலராவர், வேளிர் பலராவர், குறுநில மன்னர் பலராவர். இவர்களனைவரும் குறிப்பிட்ட காலத்தே தம் பெருவேந்தனாகிய பாண்டியனுக்கு உரிய திறைப்பொருளைச் செலுத்த வேண்டும்! அங்ஙனம் செலுத்த வருங்கால், பாண்டியனின் பேரத்தாணி மண்டபத்தே பெருங்கூட்டம் திரண்டு நிற்கும். இடம் பெறுதலின்றி 'இஃது முறையோ?' என முறையிடுவர்! தம் தலையில் முடி சூடியிருப்பர்; அம் முடியில் அன்று மலர்ந்த மலர்கள் அழகுறக் காட்சியளிக்கும். பாண்டியன் பெருமையோடு அரியணையில் வீற்றிருப்பான்; அவன் கழுத்திலும் மாலைகள் அசைந்தாடிக் கொண்டிருக்கும்; தேன் நிறைந்த மலர்கள் ஆதலின், வண்டுகள் அவற்றைச் சுற்றிலும் இன்னிசை பாடிக் களிக்கும். அவன் இணையடிகளில் திறை செலுத்த வந்த மன்னரனைவரும் தம் முடிபொருந்த வீழ்ந்து வணங்குவர். அப்போது முடிகளில் சூட்டப்பட்டுள்ள பூக்கள், பாண்டியனின் திருவடியில் மலைபோல் குவிந்திருக்கும்!

இவ் வுயரிய காட்சியை விளக்க வந்த புலவர், அழகான உவமை வாயிலாக விரித்துரைக்கின்றார். பாண்டவர்க்கும் நூற்றுவர்க்கும் பெரும் போர் நடக்கின்றது. அருச்சுனன் மகன் அபிமன்னன் வீரப்போர் புரிந்து வீழ்ந்துபட்டான். அதுகண்ட விசயன் வெய்துயிர்த்தான்; உண்ணாமல் வாடினான். அதுகண்ட கண்ணன், கனி உண்ணுமாறு அவனிடங் கூறினான். அதற்கு விசயன், ''யான், சிவபெருமானை வணங்காமல் எங்ஙனம் உண்பேன்'' என்றான், கண்ணனோ, ''என் முடிமீது மலர்களை இட்டு வணங்கு, அவை, சிவன் திருவடி சேர்ந்துவிடும்'' என்றான். விசயனும் அங்ஙனமே செய்தான். அன்றிரவே கயிலைக்குக் கண்ணனுடன் சென்றான் விசயன், ஆங்கே, தான் முன்னர்க் கண்ணனின் திருமுடியிலிட்ட அதே மலர்கள் முக்கண்ணனின் திருவடியிற் கிடத்தலைக் கண்டு களிகூர்ந்தான். நெடியோன் முடியிட்ட பூ, சிவனடியிற் கண்-

டாற்போன்று முடிமன்னர்தம் தலையிலுள்ள பூ, மாறனின் அடியிற் காணப்படும் என்று புலவர், பாண்டியனின் பேராண்மையினைப் புகழ்கின்றார்.

> ''செங்கண் நெடியான்மேற் றேர்விசையன் ஏற்றியபூப்
> பைங்கண் வெள்ளேற்றான்பாற் கண்டற்றால் -எங்கும்
> முடிமன்னர் சூடியபூ மொய்ம்மலர்த்தார் மாறன்
> அடிமிசையே காணப் படும்''

பாண்டியன் மீது அளவிறந்த அன்புகொண்ட இப் புலவருக்குத் தம் அரசன் மீது தமிழ்ப் பாமாலை சூட்ட வேண்டுமென்னும் பெருவிருப்பம் உண்டாகின்றது ''முடிமன்னர்கள் மட்டுமே மாலை சூட்டுதற்குரியரோ? யானும் சூடுவேம் தமிழ்ப் பாட்டு'' எனப் பெருமிதத்தோடு உரைக்கின்றார் புலவர். செந்தமிழ்க் கடவுளாகிய முருகனிடத்துத் தம் உள்ளத்தை ஒப்புவித்தவர் புலவர். அவனைத் தம் வழிபடு கடவுளாகக் கொண்டு நாளும் பூமாலையும் பாமாலையும் கொண்டு வாழ்த்தி வணங்குவார்.

முருகப்பெருமான், பின்னிடாத் மாமயிலை ஊர்தியாகக் கொண்டவன்; என்றும் இளமை மாறாதவன், சிவபெருமானின் அருமைந்தன் என மக்களால் போற்றப் பெறுபவன். தமிழ்ப் பாமாலையைத் தமதடியானிடத்துப் பெறுவதில் களிகூர்பவன். இத்தகையானுக்குக் கடம்ப மலரிடத்தே பெரு விருப்பமாகும். இதையுணர்ந்த நம் புலவரும், நாள் தவறாமல் கடப்பம் பூக் கொண்டு வழிபடுவார்; முருகனருள் பெறுவார்.

முருகன் நினைவு

பாண்டியனைப் பாடவந்த புலவருக்கு முருகனது நினைவே வந்தது. முருகனது கரத்தில் அம்சுடர் நெடுவேல் காட்சியளிக்கிறது. பாண்டியன் கரத்திலும் அவ்வேல் உண்டு. முருகனது வேல் வெற்றியைத் தருவது, பாண்டியனது வேலும் வெற்றியைத் தருகிறது. 'முத்தமிழால் வைதாரையும் அங்கு வாழவைப்பான் முருகன், அங்ஙனமே யாம் பாடும் இன்றமிழ்ப் பாட்டையும் ஏற்றுப் புரக்கிறான் எங்கள் பாண்டியனும்!

> ''மடங்கா மயிலூர்தி மைந்தனை நாளுங்
> கடம்பப்பூக் கொண்டேத்தி யற்றால் - தொடங்கபருள்
> நின்றிலங்க வென்றி நிறைகதிர்வேல் மாறனை
> இன்தமிழால் யாம்பாடும் பாட்டு!''

''தொடங்கும் போரில் நிலைபெற்று விளங்கும் வெற்றி-யினையுடைய, ஒளியினையுடைய வேலைக் கையிற்கொண்ட பாண்டியனை யாம் பாடும் இன்றமிழ்ப் பாட்டு, பின்னிடாத மயிலை ஊர்தியாகக் கொண்ட முருகப் பெருமானை, நாளும் கடம்ப மலர் கொண்டு புகழ்வதைப் போன்றது'' எனும் கருத்-தமைந்த இப் பாடலில், முருகனிடத்தும், பாண்டியனிடத்தும், தமிழினிடத்தும் எத்துணைப் பெரு மதிப்புக் கொண்டுள்ளார் இப் புலவர் என்பதை நாம் நன்குணர முடிகின்றது! 'யாம் பாடும் பாட்டு' என்று கூறுவதில் புலவருக்குத்தான் எத்துணை மகிழ்ச்சி பார்த்தீர்களா?

முடிவுரை

இவ்வழகிய செந்தமிழ்ப் பாடல்களைப் பாடிய புலவர் யார், யார் எனக் கேட்கத் தோன்றுகின்றது! ஆம்! இத்தகு பாக்களைப் பாடிய புலவர் யார், யார் என்றுதான் எல்லோரும் கேட்கின்றனர். ஆனால் இன்றுவரை புலவர்தம் பெயரோ, ஊரோ, காலமோ, எவரும் அறியார்! 'முத்தொள்ளாயிரம்' என்ற நூலைப் பாடிய இப் புலவரைப் பற்றிய வரலாறு நமக்குக் கிடைக்கவில்லை! என்னே இழிவு! இந்நூல், சேரனைப் பற்றித் தொள்ளாயிரம், சோழனைப் பற்றித் தொள்ளாயிரம், பாண்டி-யனைப் பற்றித் தொள்ளாயிரம் ஆக இரண்டாயிரத்து எழுநூறு பாடல்களைக் கொண்டதெனக் கூறுவர் சிலர்; மற்றுஞ் சிலர் மூவேந்தர்களைப் பற்றிப் பாடப்பட்ட தொள்ளாயிரம் பாடல்-களையே உடையது இந்நூல் என்பர். எஃது எங்ஙனமாயினும் இன்று நமக்குக் கிடைத்துள்ள பாடல்கள் நூற்றுமுப்பது மட்டுமே! (நூற்றெட்டு என்பர் சிலர்).

இத்தகைய உயர் தமிழ்ப் பாட்டைத் தமிழர்கள் எங்ஙனம் பேணா தொழிந்தனர் என்று நினைத்துப் பார்க்கவும் நம்மாற் கூடுவதில்லை! என்னே கொடுமை? இனியேனும் தமிழ்நூல்-களைப் பேணிப் பாதுகாக்கும் பண்பு நமக்கு வருவதாக!

9

# கயிலைக் காட்சி

மனிதப் பிறவி விழுமியது; மேலானது, காரணம் 'பகுத்தறிவு' பெற்ற தன்மை! பகுத்தறிவு பெற்றதனால் மட்டும் மேலான பிறவியாகிவிட முடியாது. அதனைப் பெற்றதன் பயனைக் கிட்டிய காலத்தேதான் உயர் பிறவி என உயர்ந்தோரால் உரைக்கப்படும். அப் பயன்தான் யாது? பிறவாயாக்கைப் பெரியோனின் இணையடி ஏத்தி இறைஞ்சுதல்!

மனித வாழ்வில் 'குறிக்கோள்' வேண்டும். குறிக்கோள் இல்லாத வாழ்வு, வாழ்வன்று! 'குறிக்கோள் இல்லாது கெட்டேனே!' என்பர் அடியவர். குறிக்கோளில் இருவகை உண்டு. ஒன்று, நல்லனவற்றிற்குரியது; மற்றொன்று அல்லனவற்றிற்குரியது. இவ்வுலக மாந்தரிற் பலர், தீய குறிக்கோள் கொண்டு தம் வாழ்வைப் பாழ்படுத்துகின்றனர். அறிவுடைய ஆன்றோரோ என்றும் உயர்ந்த குறிக்கோள் கொண்டே வாழ்வர். 'உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல்' என்றார் உலகநெறி காட்டிய உத்தமர் திருவள்ளுவர்!

கட்டமைந்த உடற்கட்டு, உலகத்து எந்த அறிவியலறிஞனும் உருவாக்கலாகா உறுப்புக்கள, இவ்வுடலையும் உறுப்புக்களையும் இயக்கவல்ல நல்லுயிர்—இவையனைத்தும் அருட்கடலாம் ஆண்டவன் நமக்களித்த நன்கொடைகள்! இவற்றைத் தக்க வழியில் செயலாற்றுவதே அறிவுடை மாந்தர் கடன்! தலையாலே அவனை வணங்குதல்; வாயாலே அவனை வாழ்த்துதல்; செவியாலே அவன் புகழ் கேட்டல்; கண்ணாலே அவன் காட்சி காணல்; மூக்காலே அவன் சூடிய மாலையை நுகர்தல்; காலாலே அவன் கோயிலை வலம் வருதல்; கையாலே அவன் தாளைக் கூப்பித் தொழுதல்; மெய்யாலே அவனுக்குத் தொண்டு செய்தல்; நெஞ்சாலே அவனை நினைந்து ஏத்துதல் —இவையே, அவ்வருளாளனுக்கு நாம் செய்யும் நற்கடன். இக்கடன்களை ஆற்றத் தவறினால் அவனருள் நமக்குக் கிட்டாது; அன்றியும் இப்பிறவி, அவலமாய்

வீணே கழிந்தொழியும். 'இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ?' நாமறியோம்!

செம்மையான குறிக்கோள் கொண்டு இவ்வுலகில் வாழ்ந்து காட்டிய சீராளர்கள் பலராவர். அவர்களுள் ஒருவர், நற்றமிழ் வல்ல நாவுக்கரசர்! மருள் நீக்கியாராக மலர்ந்து, தருமசேனராகத் திகழ்ந்து, வாக்கின் மன்னராக விளங்கியவர் அவர். இளமையிலேயே பெற்ற தந்தையையும் தாயையும் இழந்து இன்னலுற்றார்; மனந்தடுமாறிப் புறச்சமயம் புகுந்தார். சூலை நோயால் சொல்ல முடியாத் தொல்லைக்குள்ளானார்; தமக்கையருளால் சைவஞ் சேர்ந்தார்; இறையருளால் சூலை நோய் நீங்கப் பெற்றார்; நீற்றறையிலும், நீள் கடலிலும், தள்ளப்பட்டார்; கடகளிற்றால் ஏவப்பட்டார்; நஞ்சுணவு கொடுக்கப்பட்டார்; இத்தகைய எண்ணில் பல இன்னல்களால் மனந் தளர்ந்தாரிலர் வாக்கின் மன்னவனார்! ஏனெனின், அவர் வாக்கு, நற்றுணையாம் நமச்சிவாயத்தை ஒலித்தது! அவர் நெஞ்சு, நஞ்சுண்ட கண்டனை நினைத்தது; அவர் மெய்யுடல், மெய்கண்டானுக்குழைத்தது! ஆதலின், அவருக் குற்ற இடர்கள், இறையருளாம் பெரும் காற்றில் இலவம் பஞ்சாய்ப் போயின! எந்தைபிரானின் அருட்டிறம் அது!

திருநாவுக்கரசர் உள்ளத்தே, கயிலைமால் வரையினை-யும், ஆங்கு எழுந்தருளியுள்ள எம்பெருமான் திருக்கோலத்-தினையும் காணவேண்டுமென்ற வேட்கை, கிளர்ந்தெழுந்தது. கருதியன முடிக்கும் அண்ணலல்லவா அவர்? உடனே புறப்-பட்டார்!

கயிலைமலை எத்தகையது? 'பொன்னின் வெண்திரு நீறுபுனைந்தெனப் பன்னும் நீள்பனி மால்வரை!' உலகம் என்னும் ஒளிமணி வல்லிமேல் மலரும் வெண்மலர் போல்வது. ஆங்கே, நான்மறை நாதம் ஒருபுறம்; விஞ்சையர் கான வீணையின் ஓசை ஒருபுறம்; தான மக்களின் முழக்கம் ஒருபுறம்; வான துந்துபியின் ஆர்ப்பு ஒருபுறம்!

அமரர் பணிந்துசூழ் அணிமுடி மாமலைகள் ஒருபக்கம்; புனித கற்பகப் பொன்னரி மாலைகள் ஒருபக்கம்; கோடி கோடி குறட்சிறு பூதங்கள் பாடி ஆடும் ஒருபக்கம்; அரம்பையர் ஆடப் புரந்தரன் முதலாங் கடவுளர் ஒருபக்கம்!

நாயகன் கழல் சேவிக்க, நான்முகன் பேய காலங்கிட்டாது அலமருகிறான்; இந்திரனும், காலம் பார்த்துக் காத்துக் கிடக்கிறான்.

இங்ஙனம் வேதநான்முகன், புரந்தரன் முதலாம் விண்ணவர் எண்ணிலாராகக் குழுமியிருக்கின்றனர்! எதற்கு? ஆய்! மான் மழுவேந்திய கையன; கங்கைசூழ் சடையில் கதிரிளம் பிறை புனைந்தவன்; தன்னை யார்க்கும் அறிவறியாத் தன்மையன்; அந்தணர்தம் சிந்தையான்; அருமறையின் அகத்தான்; அணுவுக்கும் அணுவாயுள்ளான்; யார்க்கும் தெரியாத் தத்துவன்; தேனாகப் பாலாகத் திகழ் ஒளியாக விளங்குவான்! இத்தகு அண்ணலாம் சிவபெருமான் வீற்றிருக்கும் திருக்கயிலைக் காட்சியைக் காண்பதற்குத்தான் அனைவரும் குழுமியுள்ளனர்!

இத்தகு கயிலைமலைக் காட்சியினை நாவுக்கரசர் காண விழைந்ததில் வியப்பில்லையன்றோ!

கலைவாய்மைக் காவலனாராம் நாவுக்கரசர், கயிலைக் காட்சி காணக் காதலுடன் புறப்பட்டார். நாடுகள், காடுகள், ஆறுகள், கவின்சோலைகள், அருஞ்சுரங்கள், அழகிய பழனங்கள் பல கடந்தார்; கங்கையையுங் கடந்தார்; கற்சுரங் கண்டார்; மனிதர் எவரும் கடத்தற்கரிய கடுநெறி அது! ஆயினும் மனந்தளர்ந்தாரிலர் அப்பர் பெருமான்! இரவு பகலெனப் பாராது நடந்தார்; வெய்யவன் கதிர்ப்பரப்பால் பாலை நிலம் பிளந்து கிடந்தது; அந்நிலத்திலும் சென்றார்; அருஞ்சுரத்தே நடந்ததால் அழகிய கால்கள் தேய்ந்தன; நடக்க வியலவில்லை ஆயினும், மங்கை பங்கர்தம் வெள்ளிமால்வரை வைத்த சிந்தை மறந்தாரிலர்! தம் திருக்கரங்கள் இரண்டினால் தாவித் தாவிச் செல்லலானார். அந்தோ! அக்கைகளும் கரைந்து சிதைந்தன. ஆனால் அவர் உள்ளமோ, கயிலைக் காட்சி காணும் அன்பால் மேலும் பொங்கியது. ஆதலின், மார்பால் உந்தி உந்திச் சென்றார்! பின்பு, புரண்டு புரண்டு சென்றார்! இறுதியில் உறுப்புக்கள் எல்லாம் இழந்த நிலையில், புரண்டு செல்லவும் இயலாமல், அக்கடுநெறியில் சோர்ந்து கிடந்தார் தமிழாளியராம் நாவுக்கரசர்!

இளமையிலேயே இன்னல் பல ஏற்றவர்; புறச்சமயத்தாரால் அவர் அடைந்த துன்பங்களோ அளப்பில. உழவாரப் படை ஏந்தி உலகுய்ய நெறிகாட்டிய உரவோரல்லவா நம் நாவுக்கரசர்! அத்தகைய அருளாளருக்கு ஆண்டவன் கயிலைக்

காட்சி தராது நீட்டித்தல் நேரிதோ? அடியவரை சோதித்தற்கும் எல்லையில்லையோ! என்றெல்லாம் கேட்கத் தோன்றுகின்றது. தெய்வச் சேக்கிழார். செம்மையான விடை ஒன்றினைத் தருகின்றார்.

''நாவுக்கரசர், நாளும் பாடும் நற்றமிழ்ப் பாக்களை, தேவாரத் திருப்பாக்களை என்றும் கேட்டுக் கொண்டேயிருக்க வேண்டும்; இப்பூவுலகில், நாவுக்கரசர் நிலைபெற்ற முத்தமிழை-தீந்தமிழை இன்னும் சால்லிக் கொண்டேயிருக்க வேண்டும்!'' என்று கண்ணுதற பெருங்கடவுள் விரும்பினார்; ஆதலாற்றான் அப்பரடிகள், கயிலை அணைவதற்கு அருள் செய்தாரிலர் என்கின்றார் சேக்கிழார்!

''அன்ன தன்மையர் கயிலையை அணைவதற் கருளார்
மன்னு தீந்தமிழ் புவியின்மேற் பின்னையும் வழுத்த''

என்பது சேக்கிழார் திருவாக்கு!

மனிதர்க்குக் குறிக்கோள் வேண்டும்; அதுவும் நல்லதாக இருக்க வேண்டும் என்று முன்னர்க் கண்டோம. நல்ல குறிக்கோளாக இருந்தால் மட்டும் போதுமா? அதனை அடைய வேண்டாமா? அடைவதற்கு உள்ளத்தே ஊக்கமும், உறுதியும் வேண்டும். மனத்தே திண்மை இருப்பின், எண்ணியன அடையலாம்.

''எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்''

என்பது வள்ளுவர் வாய்மொழியல்லவா?

கயிலைக் காட்சி காணுதலே தம் குறிக்கோள் எனக் கொண்டார் நாவரையர். அம்மட்டோடு நின்றாரா! அதனை அடைவதற்கு முயற்சி செய்தார். எத்துணை இடுக்கண்கள்? மனங்கலங்கினாரா? செல்லும் செலவைத் தவிர்த்தாரா? உள்ளத்தே கலங்காத உறுதி கொண்டிருந்தார். இவ்வுறுதியை எல்லாம் வல்ல எம்பெருமான் அறியானோ? நன்கு அறிவான்; அங்ஙனமாயின் அப்பரைச் சோதிக்கக் கருதியமை யாங்ஙனம்! அப்பர் மனத்திண்மையை மாதொருபாகன் அறிவானாயினும், அதனை உலக மக்கள் அறிய வேண்டுமல்லவா! தம் வாழ்விலும் கடைப்பிடித்து ஒழுக வேண்டுமல்லவா! இதற்காகவே ஆண்டவனின் சோதனை! சோதனையில் அப்பரடிகள் வெற்றியும் பெற்று விடுகின்றார். எங்ஙனம்?

நீண்ட அந்நெறியில் எவர்துணையுமின்றி மனம் ஒன்றே செயல்பட, ஏனைய பொறிகள் ஓய்ந்து கிடக்க, அப்பரடிகள் கிடந்த அவ்வேளையில், முக்கண்ணன், முனிவர் வேடங்-கொண்டு நெடும்புனல் தடங்கொண்டு வந்தான். அயர்ந்து கிடந்த அப்பரைக் கண்டான். ஒன்றும் தெரியாதவன்போல அவரை நோக்கி, ''இவ்வுறுப்பு அழிந்திட இந்த வெங்கடத்து வந்து எய்தியது ஏன்?'' என்றான். அம்முனிவரைக்கண்ட அளவில் நாவுக்கரசருக்குப் பேசும் உணர்வு பிறந்தது. உடனே அவர், ''மலைமகளுடன் வடகயிலை வீற்றிருக்கும் அன்பர் நாயகனைக் கண்டு கும்பிட வந்தேன். என் கொள்கை— குறிக்கோள் — குறிப்பு இதுவேயாம்!'' என்றார்

முனிபுங்கவனோ, ''கயிலைமால் வரையைக் காசினி மாந்தர் அடைய இயலாது; அஃது அமரரும் அணுகுதற் கரிது! ஆதலின் திரும்பிப் போதலே நுமக்கினிக் கடன்!'' என்றான். அப்போது நாவுக்கரசர் நவின்ற மறுமொழி, அவரது திண்ணிய நெஞ்சத்தை, உள்ள உறுதியை, உயரிய கொள்கையை நமக்குத் தெள்ளெனக் காட்டுகிறது.

''ஆளும் நாயகன் கயிலையில் இருக்கைகண் டல்லால்
மாளும் இவ்வுடல் கொண்டு மீளேனென மறுத்தார்''

என்னே துணிவு! எத்தகைய விருப்பு! எண்ணிப் பார்த்-தால்இதயம் துளும்பும்! அவர்தம் துணிவறிந்தான் மாதவன்; அவ்விடம் மறைந்தான். ''ஓங்கு நாவினுக்கரசனே! எழுந்திரீர்!'' என்று விண்ணொலி எழுப்பினான். நாவுக்கரையர் நல்லுட-லுடன் எழுந்தார். அப்போதுங்கூட அவர் உறுதி குலைந்-தரால்லர். ''கண்ணினால் திருக்கயிலையில் இருந்த நின்-கோலம், நண்ணி நான் தொழ நயந்தருள் புரி'' என வேண்டினார். ஆண்டவன் ''இப்பொய்கையில் மூழ்கித் திரு-வையாற்றில் கயிலைக் காட்சியைக் காண்க'' எனப்பணித்தான். அங்ஙனமே அப்பொய்கையில் மூழ்கினார் பொய்யா நாவுக்கரசர். உலகம் வியப்ப ஐயாயிற்று வாவிமீது எழுந்தார். 'எம்பிரான் கருணை இதுவே' என இருகண் அருவிநீர் சோர நின்றார். அக்கணமே அழகிய கயிலைக் காட்சியைக் கண்டார்.

பொன்மலைக் கொடியுடன் அமர் வெள்ளியம் பொருப்-பில் சத்தியும் சிவமுமாம் தன்மை... இத்தகு காட்சியுடன் பொருந்திய கோயில்முன் வந்தார் நாவுக்கரசர். அக்கோயிலோ, கயிலைமால் வரையாய்க் காட்சி தந்தது. ஆங்கோ அயன்,

இந்திரன் முதலான தேவர் அன்போடு போற்றி இசைத்துக் கொண்டிருந்த ஒலி எழுந்தது மாமறைகள் தனித்தனி முழங்கின; தேவர், தானவர், சித்தர், விச்சாதரர், இயக்கர், மாதவர், முனிவர், பக்கங்களில் சூழ்ந்து நின்றனர், பெருங்கண நாதர்களும் பூத வேதாளங்களும் போற்ற, நந்தி எம்பெருமான் நடுவிலிருந்தார். வெள்ளி வெற்பு; அதன்மேல் மரகதக்கொடி; இவற்றுடன் விளங்கும் பேரொளிப் பவளவெற்பு என்று சொல்வதுபோல் வள்ளற் பெருமானாம் சிவபெருமான், தம் இடப்பக்கத்தே மாமலையாளோடு வீற்றிருந்தான். இவ்வழகிய திருக்காட்சிபற்றிக் கூறவந்த சேக்கிழார்,

''வெள்ளி வெற்பின்மேல் மரகதக் கொடியுடன் விளங்கும்
தெள்ளு பேரொளிப் பவளவெற் பெனஇடப் பாகம்
கொள்ளு மாமலை யாளுடன் கூட வீற்றிருந்த
வள்ள லாரைமுன் கண்டனர் வாக்கின்மன் னவனார்!''

என்கிறார்!

கயிலைக்காட்சி கண்ட நாவரசர், கைகுவித்து, எதிர்விழுந்து, எழுந்து, மெய்குலைய, அண்டர்முன்பு நின்று ஆடினார்; பாடினார்; அழுதார்!

அப்பர் அடைந்த அளவிலா மகிழ்ச்சியைச் சொல்லவந்த சேக்கிழார் பெருமான்,

''தொண்டனார்க்கு நிகழ்ந்தன யார் சொல வல்லார்?'' என்கிறார். அப்படியானால் நாம் எங்ஙனம் சொல்ல முடியும்?

கயிலைக் காட்சி அத்தகையது! அதனைக் கண்டால் வரும் களிப்புச் சொல்லுந்தரமன்று! கட்டுரைக்குந் திறமன்று!

# 10

# அப்பர் அருள்மொழிகள்

சிவபெருமானைத் தம் பட்டறிவால் நேரே கண்டு பேரின்பப் பெருவாழ்வு பெற்ற சிவனடியார்கள் பலருண்டு தமிழகத்தில்! அவருள், 'அலகில் கலைத்துறை தழைப்ப அருந்தவத்தோர் நெறிவாழ உலகில் வரும் இருள்நீக்கி ஒளிவிளங்கு கதிர்போல'த் தோன்றியவரே நாவுக்கரசர்!

சைவத் திருமுறைகள் பன்னிரண்டு: அவற்றுள் நான்கு, ஐந்து, ஆறாந் திருமுறைகளெனத் திகழ்பவை 'அப்பர்' என்னும் அருமைத் திருப்பெயர் பெற்ற நாவரசரின் தேவாரப் பாக்களாகும்! அப்பாக்களனைத்தும் கற்பவர்தம் உள்ளத்தைக் கனிவிக்கும் தன்மையன; நினைப்பவர்தம் நெஞ்சத்தை நெகிழ்விக்கும் இயல்பின; மனங்குளிரப் பாடுபவர்தம் பண்பைப் பெரிதும் வளம்படுத்துவன; சுருங்கச் சொன்னால், எல்லாம் வல்ல ஈசனைக் கண்டு இன்பந்தரும் இணையிலா வழியைக் காட்டுவன! அவற்றுள் ஒருசிலவற்றை ஈண்டுக் காண்போம்.

''கல்வி கற்றதன் பயன் மெய்யறிவுடைய இறைவனைத் தொழுதலேயாம்! இறைவனைத் தொழவேண்டுமானால் அவன் எங்குளான்?'' என்ற வினா எழும்! இதற்கு அப்பர் அடிகள் தமது தேவாரப் பதிகத்தில்,

> ''பனைக்கை மும்மத வேழ முரித்தவன்
> நினைப்ப வர்மனங் கோயிலாக் கொண்டவன்''

என்கிறார். ஆண்டவன், தன்னை நினைப்பவர் நெஞ்சத்திலே கோயில் கொண்டுள்ளான் என்றால், நினையாதார் நெஞ்சத்தில் கோயில் கொள்ள மாட்டானோ என்ற கேள்வி பிறக்கும்.

> ''உள்ளுமாய்ப் புறமு மாகி உருவுமா யருவு மாகி
> வெள்ளமாய்க் கரையு மாகி விரிகதிர் ஞாயி றாகிக்
> கள்ளமாய்க் கள்ளத் துள்ளார் கருத்துமா யருத்த மாகி
> அள்ளுவார்க் கள்ளல் செய்திட் டிருந்தவாப் பாடி
> யாரே!''

என்று, அருவமும் உருவமுமாக யாண்டும் நீக்கமற நிறைந்திருக்கும் நம்பெருமானைக் குறிப்பிட்டுச் செல்கின்றார் அவர்.

வேண்டுதல் வேண்டாமையில்லாத இறைவன், சில நுள்ளத்து மட்டும் கோயில் கொண்டு, சில நுள்ளத்துக் கோயில் கொள்ளா-திருக்க மாட்டான்! அவன் அனைவர்தம் உள்ளககமலங்களிலும் வீற்றிருக்கக் கூடியவனே! விறகில் தீயுண்டு; பாலில் நெய் யுண்டு! ஆயினும் பற்றவைக்கும் போதே விறகிலுள்ள நெருப்பு வெளிப்படுகின்றது. கடைந் தெடுக்கும் போதே பாலிலுள்ள நெய் தோன்றுகின்றது இவற்றைப் போலவே, எல்லாருடைய நெஞ்சத்திலும் மறைய வீற்றிருக்கின்றான் இறைவன்! அவன் யாருக்கு வெளிப்படுவான்? 'நெக்கு நெக்கு' நினைப்பவர்க்கே வெளிப்படுவான்: ஊனினுள் ளுயிரை வாட்டி யுணர்வினார்க் கெளியனாய்த் தோன்றுவான்! ஏனையோர்க்கு அரியனாகின்றான்!

> ''கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானைக் கரவார்பால்
> விரவாடும் பெருமானை விடையேறும் வித்தகனை''

என்கின்றார் நாவரசனார்! எனவே, நினைப்பவருக்குப் புலனாகின்ற தன்மையை 'இறைவன் கோயில் கொண்டுள்ளதாகவும்' நினையாதாற்குப் புலனாகாத தன்மையை 'இறைவன் கோயில் கொள்ளாததாகவும்' ஈண்டுக் குறிக்கப்பட்டன!

சைவம் விட்டுச் சமணம் சார்ந்த நிலையினின்றும் மீட்டவன்; சூலை நோய் தவிர்த்து ஆட்கொண்டவன்; கற்-றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சியபோது நற்றுணையாக நின்றவன்; நீற்றறையிலிட்டபோது நீங்காத் துணை புரிந் தவன்; அமணர் தந்த நஞ்சை அமுதாக்கியவன்; ஆ! அவன் தான் அம்பலக்கூத்தன்! அவனை-அவன் செய்த நன்றியை மறப்பது நன்றன்று! 'எழுமை எழுபிறப்பும்' உள்ளுதல் வேண்டும்; தினைப்பொழுது மறந்தாலும் உய்வில்லை!

> ''பனைக்கை மும்மத வேழ முரித்தவன்
> நினைப் பவர்மனங் கோயிலாக் கொண்டவன்''

என்று பாடிய அப்பரடிகள், மேலும் தொடர்கின்றார்:

> ''அனைத்தும் வேடமாம் அம்பலக் கூத்தனைத்
> தினைத்த னைப்பொழு தும்மறந் துய்வனோ!''

என்று தம் நிலையைக் கூறுவார்போல் பிறருக்கு வழிகாட்டுகின்றார் நாவுக்கரசர்!

எல்லார்க்கும் நலஞ்செய்கின்ற நேசனை-ஈசனை, நித்தலும் நினைத்தல் வேண்டும்; அவன் மலர்ச்சேவடியைத் தொழுதல் வேண்டும்; புண்ணியனை நண்ணுதல் வேண்டும்! இவ்வாறு செய்தால் என்ன பயன்? ஆம்! ''யார்க்கும் அடிமையாக வேண்டாம்; கூற்றுவனுக்குக்கூட அஞ்சவேண்டாம்; நரக துன்பத்தை நுகர வேண்டாம்; நோய்க்கு உள்ளாக வேண்டாம்; எவர்க்கும் பணிய வேண்டாம்; என்றும் எவர்க்கும் ஆட்பட வேண்டாம்! அம்மட்டோ? நமக்குப் பகைவர் எவரும் இருநிலத்தில் இல்லை; நமக்கு என்றும் குறைவில்லை; நமக்குத் துன்பம் இல்லை; என்றும் இன்பமே, இன்பமே!''

இவ்வாறு பெருமையோடு பேசுகின்றார் நாவரசர்!

''நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்
நரகத்தி லிடர்ப்படோம் நடலை யில்லோம்
ஏமாப்போம பிணியறியோம் பணிவோ மல்லோம்
இன்பமே யெந்நாளுந் துன்ப மில்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான
சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே!''

''என்றும்நாம் யாவர்க்கும் இடைவோ மல்லோம்
இருநிலத்தில் எமக்கெதிரா வாரு மில்லை
சென்றுநாம் சிறுதெய்வம் சேர்வோ மல்லோஞ்
சிவபெருமான் திருவடியே சேரப் பெற்றோம்
ஒன்றினாற் குறையுடையோ மல்லோ மன்றே
உறுபிணியார் செறலொழிந்தி ட்டோடிப் போனார்
பொன்றினார் தலைமாலை யணிந்த சென்னிப்
புண்ணியனை நண்ணியபுண் ணியத்து ளோமே!''

இத்துணை இன்பந் தருகின்ற இறைவனைக் காணவும், கண்டு பேரின்ப நிலை எய்தவும் வேண்டுமானால் மனிதப் பிறவியே வேண்டற்பாலது? அந்தப் பிறவியே தனக்கும் வேண்டும்! என்று நம்பெருமானை வேண்டுகின்றார் நாவரசர்!

''குனித்த புருவமுங் கொவ்வைச் செவ்வாயிற் குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போன் மேனியிற் பால்வெண் ணீறும்

இனித்த முடைய எடுத்தபொற் பாதமுங் காணப் பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே யிந்த மாநிலத்தே!''

சிற்றம்பலத்துள் திருநடனம் புரியும் கூத்தனின் புருவத்தையும், புன்சிரிப்பையும், சடை முடியையும், வெண்ணீற்றையும், பொற்பாதத்தையும், கண் குளிரக் காணவேண்டும், காண்பதற்குரிய பிறவி எது வென்றால் இம் மனிதப் பிறவியே! என்று சொல்லும் அரசர், ''இம்மானிடப்பிறவி பெறுதற் கரியது; எனவே இதனை மதித்திடுக!'' என்று மற்றவர்க்கும் அறிவுறுத்துகின்றார்.

''வாய்த்தது நந்தமக் கீதோர் பிறவி மதித்திடுமின்!'' என்பது அவரிட்ட கட்டளை!

ஆனால், 'ஒருவேளை இம்மனிதப் பிறவி கிடைக்காது போயின்' என்ற அச்சம் அப்பர் உள்ளத்தே தோன்றுகின்றது! ''எந்தப் பிறவி கிட்டினும் சரி; துடிதுடிக்கும் புழுப்பிறவி கிடைத்திடினும் சரி, இறைவா! உன் பொன்னடிகளை என் மனத்தினின்றும் நீங்காத் தன்மையை எனக்குத் தந்தருளும்! இதுவே நான் உன்னிடம் வேண்டும் வரம்!'' என்று மன்றினுள்ளாடும் மாணிக்க மலையை மன்றாடுகின்றார் அவர்!

''புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா வுன்னடி யென்மனத்தே
வழுவா திருக்க வரந்தர வேண்டுமிவ் வையகத்தே
தொழுவார்க் கிரங்கி யிருந்தருள் செய்பா திரிப்புலியூர்ச்
செழுநீர்ப் புனற்கங்கை செஞ்சடை மேல்வைத்த தீவண்ணனே!''

''வாழ்ந்தால் உயரிய குறிக்கோள் ஒன்றைக் கொண்டு வாழ்தல் வேண்டும்; அந்தவொரு குறிக்கோளும், இறைவனின் இணையடியை நண்ணுதற்குரிய வழியைத் தருதலாகவும் இருத்தல் வேண்டும்!'' என்று தமது வரலாற்றைச் சொல்லுபவர் போல் ஏனையோரை இடித்துரைக்கின்றார் திருநாவுக்கரசர்!

''பாலனாய்க் கழிந்த நாளும் பனிமலர்க் கோதை மார்தம்
மேலனாய்க் கழிந்த நாளும் மெலிவொடு மூப்புவந்து

கோலனாய்க் கழிந்த நாளுங் குறிக்கோளி லாது
கெட்டேன்
சேலுலாம் பழன வேலித் திருக்கொண்டீச்
சரத்துளானே!''

இவ்வளவும் எடுத்துரைத்தபின்பு எதுவுஞ்செய்யாமல் வீணே காலத்தைக் கழிக்கின்றார்களே சிலர், அவர்களைக் கண்டு மனம் வெதும்புகின்றார் வாகீசனார்: வாய்விட்டுக் கதறி அழவும் செய்கின்றார்!

''திருநாமம் அஞ்செழுத்துஞ் செப்பா ராகில்
தீவண்ணர் திறமொருகால் பேசா ராகில்
ஒருகாலுந் திருக்கோயில் சூழா ராகில்
உண்பதன்முன் மலர்பறித்திட் டுண்ணா ராகில்
அருநோய்கள் கெடவெண்ணீ றணியா ராகில்
அளியற்றார் பிறந்தவா றேதோ வென்னிற்
பெருநோய்கள் மிகநலியப் பெயர்த்துஞ் செத்தும்
பிறப்பதற்கே தொழிலாகி யிறக்கின்றாரே!''

— இப்பதிகத்திலேதான் எத்துணை இரக்கம்! எத்துணைக் கனிவு!

இவைபோன்ற அப்பரின் அருண்மொழிகள் அளவிறந்தன! அவற்றில் ஒருசிலவற்றையாவது உணர்ந்து உய்வோமாக!

11

# தூதுவிட்ட தொண்டர்

## (1) திருநாவுக்கரசர்

பிறைசூடும் பெம்மானின் பெருமைகளையெல்லாம் பாடிப்பாடிப் பரவசமடைந்து பேரின்பப் பெருவாழ்வு பெற்ற பத்தர்கள் பலர். அவருள் நற்றமிழ்வல்ல நாவுக்கரசரும் ஒருவராவர்.

''பாவுற்றலர் செந்தமி ழின்சொல்வளப்
பதிகத்தொடை பாடிய பான்மையினால்
நாவுக்கர சென்றுல கேழினுநின்
னன்னாம நயப்புற நண்ணுக''

என்று யாவர்க்கும் வியப்புண்டாம்படி இறைவனே கூறும் நிலையில் பெருமை பெற்ற அடியார்க்கும் அடியார் அவர்.

எல்லாம் வல்ல முழுமுதற் கடவுளைத் தலைவராகவும் தம்மைத் தலைவியாகவும் கருதிப் பாடுதல் அடியார்கட்கியல்பு அம்முறையில் நம் நாவுக்கரையரும் இறைவனைத் தலைவனாகத் தம்மைத் தலைவியாக எண்ணி உளமுருகிப் பாடுகின்றார்!

திருப்பழனத் திருத்தலத்தில் வீற்றிருக்கும் சிவபெருமான் தமக்குக் காட்சியளித்துப் பல நாட்கள் ஆகிவிட்டன. அவன் நினைவால் பெரிதும் வாட்டமுற்றார். 'அரசர்' சொல்லொணாத் துயர்க்கடலில் ஆழ்ந்தார். தம்நிலையைப் பிறரிடஞ் சொல்லுதற்கோ தக்க துணைவர் யாருமிலர்; உடல்மெலிந்தார்: உள்ளஞ் சோர்ந்தார்; தமக்கினிய தலைவன் வாரானோ, வந்து காட்சி தாரானோ என்று எண்ணியது அவரின் கனிந்த உள்ளம்! துயர நிலையைத் தூதுபோக்கியாகிலும் அமைதி பெறலாமென்றெண்ணியது அவர் நெஞ்சம்!

பசுஞ்சோலையில் புகுந்தார்; ஆண்டுச் சிறிது இளைப்மாறினார். அப்போது ஆங்கிருந்த குயில் கூட்டம் தனது அமிழ்தினுமினிய குரலால் கூவுவது அவர் செவிகளில்

விழுந்தது. இன்பத்தேன் வந்து பாய்வது போன்றதோர் உணர்ச்சி உண்டாயிற்று. ''ஆம்! என்னுடைய நாயகனின் பெருமைகளையன்றோ அவைகள் பேசுகின்றன'' என்று எண்ணியது அவர் உள்ளம்; ஈசனார்பால் வைத்த காதன் மிகுதியே அவரை அவ்வாறு எண்ணச் செய்தது! ''ஏன் அவைகளையே அவனுக்குத் தூதாக விடுத்தல் கூடாது?'' என்ற வினா அவர் உள்ளத்தே எழுந்தது. ''ஆம்! நமக்குத் துணை அவைகளே!'' என்ற விடையும் உடன்பிறந்தது; குயில்களையே ஈசனார்பால் தூதுவிடக் கருதினார் நாவுக்கரசர்.

குயிற்கூட்டத்தை அன்புடன் அழைத்தார். குயில்கள் இயல்பாகக் கூவுதலைத் தமது தலைவனைப் பற்றித்தான் அவை பாடிக் கொண்டிருக்கின்றன என்ற கற்பனையால் குயில்களை விதந்து பேசலானார்.

''கீதமினிய குயிலே!'' என்று மாண்புறு மணிவாசகனார் அருளினாரல்லவா! அவர் இட்ட சீரிய கட்டளைக்கிணங்கப் பலகாலும் சிவன்சீர்ச் சொற்களைக் கீதமாகச் சொல்லிப் பயிற்சி பெற்ற குயில்களின் வழிவழி வந்த செல்வமன்றோ நீங்கள் என்று மெதுவாக அவைகளைப் புகழ்ந்து பேசலானார். அவைகளும் அவர் பேச்சினைச் செவிமடுப்பது போன்று, தமது கூவுந்தொழிலை நிறுத்தி இவரையே நோக்கியவண்ண-மிருந்தன; நாவுக்கரசருக்கு மகிழ்ச்சி தாங்க முடியவில்லை! மேலும பேசத் தொடங்கினார்.

''உங்கள்பால் யான் ஒன்று இரந்துசொல்லுவன்; அதனை அன்பு கூர்ந்து என் தலைவனிடத்தே சென்று எடுத்துக் கூறினால் பெரிதும் நன்றியறிதலுடையவனாவேன்! திருப்-பழனம் என்னும் திருப்பதியை நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள். வற்றாத காவிரியாற்றின் வடகரையில் ஐம்பதாவது தலமாக இலங்குகின்றது. பல கோடுகளையுடைய வண்டுகள் வரிசை யாக இசைபாடுதற்கிடமான அவ்வூரிலேதான் என்தலைவன் வீற்றிருக்கின்றான்; அவனை அறியாதார் யாருமிலர். 'பண் மிழற்றும் பழனத்தான்; பாட்டோவாப் பழனத்தான்: பலர் பாடும் பழனத்தான்; பண்டரங்க வேடத்தான்! மதியாதார் வேள்விதனை மதித்திட்ட மதிகங்கை விதியாளன்; மண் பொருந்தி வாழ்பவர்க்கும் மாதீர்த்த வேதியர்க்கும் விண்-பொருந்து தேவர்க்கும் வீடுபேறாய் நின்றவன்; பண்பொருந்த இசைபாடும் பழனம்சேர் அப்பன்; உள்ளுவார்வினை தீர்ப்பவன்;

விண்ணின்மிக்க பரமசிவன் என்று இவ்வாறாகப் பலரும் பலவாறு அவனைப் புகழ்ந்து போற்றுவர் என்றாலும் நானும் சில அடையாளங்கள் கூறுகின்றேன். அந்தி மாலைப்பொழுதில் அழகாக ஒளிவீசுகின்ற பிறைச்சந்திரன் விளங்குகின்ற சடை-முடியைத் தலையிலே தரித்திருப்பான்! முடியில் சந்திரனை-யும், மார்பில் அழகிய பொன் மாலையினையும் காட்டி என்னை மயக்கி வஞ்சித்து வளைகவர்ந்த கள்வன் அவன்! இளங்குயிற் கூட்டமே! எனது புதுநலமும் எழினலமும் உண்டும் என் தளிர்வண்ணம் கொண்டும் என்உயிர்மேல் விளையாடியும் முன்னைநாள் என்னை ஆட்கொண்ட வள்ள-லாகிய அப்பழனத்தான் இப்போது என்னைத் தனியே தவிக்க விட்டுச் சிறிதுங் குறிக்கொள்ளாது இகழ்வானோ? என்னை மறந்தானோ? இனி ஒருபோதும் எனக்கின்பம் தாரானோ? என்றாலும் என் கண்பொருந்தும் போழ்தும் கைவிடக் கடவேனோ? நான் நினைக்கின்ற இந்நினைப்-பெல்லாம் அவனிடத்தே சென்று அன்புகூர்ந்து உரைப்பீராக! இது ஒன்றே நீங்கள் எனக்குச் செய்யும் மிகப் பேருதவி-யாகும்!'' என்று அருள் கனிந்த உள்ளங்கொண்ட நாவுக்-கரசர் பேசுகின்றார். அவர் பேச்சிலேதான் எத்துணைக் கனிவு! எத்துணை இரக்கம்! இப்போது பாடலைப் பார்ப்-போம்:

> ''சொன்மாலை பயில்கின்ற குயிலினங்காள்! சொல்லீரே
> பன்மாலை வரிவண்டு பண்மிழற்றும் பழனத்தான்
> முன்மாலை நகுதிங்கள் முகிழ்விளங்கு முடிச்சென்னிப்
> பொன்மாலை மார்பனென் புதுநலமுண் டிகழ்வா-
> னோ!'' (தேவாரம் 4,12,1)

[சொன்மாலை-சொன்மாலையாகிய கீதம்; பயிலுதல்-பல காற் சொல்லுதல்: வரி-கோடு; பழனத்தான் - திருப்பழனம் என்னுந்திருத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவன்; முன் மாலை-அந்திமாலை: பொன்மாலை மார்பன்-பொன் நிறமான கொன்றை மாலையைச் சூடிய மார்பினையுடையவன்.]

நாவுக்கரசர் பாடிய நன்மைபுரி தீந்தமிழின் தொடை மாலைத் திருப்பதிகத்தை நாமும் பயின்று பேரின்பப் பெரு-வாழ்வு பெற்று உய்வோமாக!

## (2) திருஞான சம்பந்தர்

இன்ப துன்பங்கள் இவ்வுலக இயற்கை. இன்பம் வருங்கால் மகிழ்வது-துன்பம் வருங்கால் துயருறுவது - அனைத்துயிர்க்கும் பொது! இன்ப துன்பங்கள் ஏற்படுங்கால் அவற்றாலுண்டாகும் உணர்ச்சிகளைப் பிறரிடத்தே கூறி ஒருவகையில் ஆறுதலடைகின்ற நிலையினைக் கண்கூடாகக் காண்கின்றோம்!

ஒரு தலைவி! தன் தலைவனைப் பிரிந்து எத்துணையோ நாட்களாகி விட்டன. அவனைக் காணக் கண்கள் துடித்தன; அவனின் அன்பு மொழிகளைக் கேட்கக் காதுகள் விழைந்தன; அவனுடன் உரையாட வாய் விரும்பியது; அவனைத் தீண்ட உள்ளம் உவகை கொண்டது! ஆனால் தலைவனோ அவளின் உளக்கருத்தினை உணர்ந்தும் உணராதவன் போல் வாளா விருந்தான்! நெஞ்சங் குமுறினாள் தலைவி தனக்குரிய தலைவன் - தனக்கினிய தலைவன், தன்னைப் பிரிந்து பலநாட்கள் ஆகியும், விரைவில் தன்னைக் காண விருப்பமில்லாதவன்போல் இருக்கின்றானே என ஏக்கங் கொண்டாள். அவனது பிரிவால் வாட்டமுற்ற அவளிடத்தே 'பசப்புத் தேமலு'ங்கண்டு விட்டது! ''பிரிய வேண்டிய நிலைபற்றி என்பாற் கூறியபோது யானே மகிழ்ந்து உடன்பட்டேன்! ஆனால், இன்றோ அதனை ஆற்றாது பசந்த என் நிலையினை யாரிடங் கூறவல்லேன்! முன்னர் உடம்படுதலும் பின்னர் ஆற்றாது பசத்தலும் பண்புடையார்க்கு அழகன்றே! யான் செய்து கொண்ட துன்பத்தினை இனியொருவர்க்குச் சொல்லலும் பழியாகுமன்றோ! விளக்கினது மெலிவு பார்த்து நெருங்கிவரும் இருளேபோல, என் தலைவன் முயக்கினது மெலிவு பார்த்து நெருங்கி வருகின்றதே இப் பசப்பு! முன்பெல்லாம் அவனைப் புல்லிக்கிடந்த யான், உண்மை உணராது புடைபெயர்ந்தேன்; உடனேயே, இப்பசப்பு அள்ளிக் கொள்வதுபோல வந்து செறிந்துவிட்டதே! இரங்கத் தகுந்த இவ்விரு நிலையினைப் பிறரிடங்கூறி ஆறுதலடையலாமோ வெனின் அதுவும் முடியாததாயிருக்கின்றதே! 'பிரிவை ஆற்றியிராது பசந்தாள்!' என்று இவ்வுலகம் என்னைப் பழி கூறுகின்றதேயன்றி, 'அவளைப் பிரிந்து சென்றவன் கள்வன்' என்று அவனைப் பழிகூறுகின்றிலதே! யான் என் செயவல்லேன்?'' என்று தனக்குள்ளேயே சொல்லி வருந்திக் கொண்டிருந்தாள் தலைவி!

அது சமயம் அவ்வழியே பறந்து சென்ற நாகணவாய்ப் பறவையொன்று அவள் இல்லத்தின் பின்புறத்தே அமைந்திருந்த மரக்கிளையில் அமர்ந்தது! தன் துயர நிலையினைத் தலைவனுக்குத் தூதுபோக்கியாகினும் தெரிவிக்கலாமே என்ற எண்ணந் தோன்றியது அவளுக்கு! உற்றார், உறவினருள் யாரேனும் ஒருவர்வழித் தூது போக்கலாமென்றாலோ, தனக்கு நீங்காப்பழி உண்டாகும் என்ற அச்சம் ஒருபுறம்! ஒருவேளை தூதுசென்றாலும், தலைவனிடத்தே ஒன்றுக்குப் புறம்பாக மற்றொன்றைக் கூறிவிட்டால் என் செய்வது என்ற அச்சம் ஒருபுறம்! எனவேதான், ஆங்கு வந்தமர்ந்த நாகணவாய்ப் பறவை மூலமாகத் தன் கருத்தை வெளியிட்டுத் தூதனுப்பலாம் என்று எண்ணியது போலும் அவள் பேதை நெஞ்சம்!

பறவையைப் பார்த்துப் பேசலுற்றாள் அவள்! "ஏ நாகணவாய்ப் பறவையே! உன்னை யான் அன்புடன் போற்றுகின்றேன்!...உன்னுடைய வாய் - உனக்கே ஒருவிதத் தனியழகைத் தருகின்றது! எப்போதும் இன் சொற்களையே சொல்லிச் சொல்லிப் பயிற்சி பெற்ற வாயன்றோ அது! பகுத்தறிவு பெற்ற மக்கட்கூட்டங்கூட உன்னிடமிருந்தன்றோ நல்ல சொற்களைப் பயிலவேண்டியிருக்கின்றது!......உன்னை யான் போற்றுகின்றேன்; உன் இனம் என்றும் வாழ வாழ்த்துகின்றேன்!...உன்பால் யானொன்று கூற எண்ணுகின்றேன்; அன்புடைமையால் என் கூற்றைச் செவிசாய்த்து உன்னாலியன்ற இச்சிறு உதவியினைச் செய்வாய் எனப் பெரிதும் நம்புகின்றேன்!"

"திருத்தோணிபுரம் என்று பலராலும் பெருமையாகப் பேசப்படும் திருத்தலத்தைப்பற்றி யான் சிறிது சொல்ல விழைகின்றேன்! சோறு சோறு என்று அலைகின்றவர்கட்கெல்லாம் வரையாது வழங்கும் சோழ நாட்டின் சிறப்பை நீ நன்கு தெரிந்திருப்பாய்! அத்தகைய நாட்டில், பன்னிரு திருப்பெயர்களோடு திகழ்கின்றது திருத்தோணிபுரம் என்ற சிவத்தலம். செண்பக மரங்கள் மிக்க தண்ணறும் பெரிழில்களினூடே அழகுறக் காட்சியளிக்கும் மாட்சிமைப்பட்ட அவ்வூரின்கண்ணே, தமிழோடு இசைபாடும் இளஞ்சிறார்களின் இன்னிசை ஒலி, நாள்தவறாமல் முழங்கிக் கொண்டேயிருக்கும். வானத்தையும் முட்டி மோதி நிற்குமளவில் நீண்டுயர்ந்த மாடங்கள் பலவற்றைத் தன்னகத்தே கொண்ட அவ்வூரிலே உள்ள பாதைகளோ, தேர்கள் அடிக்கடி நகர்வலம் வருதலால் மேடும்பள்ளமுமாகக் காணப்படும்! 'தென்றல்வந்துலவும் திருத்தோணிபுரம்' என்று சிறப்பா-

கப்பெற்ற அவ்வூரிலேதான், எனக்கினிய தலைவன் வீற்றிருக்கின்றான்; என்னுடைய மூன்றாம் வயதிலேயே என் உள்ளத்தைக் கொள்ளைகொண்டு சென்ற பன்மாயக் கள்வன் அவன்! 'கண்ணுதலான்; கமழ் சடையான்; கறையணி கண்டன்; பிஞ்ஞகன்; பிறையணி செஞ்சடையான்; மறைமொழி வாய்மையினான்; மழுவாட் படையினான்; மறை பல்கலை நூலுடையான்; வெண்ணீற்றான்; வெண்தோடணி காதினான்; விடையேறி, பெண்ணிதமாம் உருவத்தான்'' என்பன போன்ற பல திருப்பெயர்களை உடையவன்! அவன் பெருமையினை நாள்தோறும் சொல்லிக்கொண்டே இருக்கலாம். ஆனால் சுருக்கமாக ஒன்றிரண்டு உனக்குச் சொல்லுகிறேன். 'பிரளய காலத்தில் உலகம் அழிந்தபோது பிரணவம் தோணியாக மிதக்க அதில் வீற்றிருந்த பெருமை பெற்றவன் அவன்! 'பிரமபுரீசுவரர்' என்றும் 'தோணியப்பர்' என்றும் அருமையாக அவனை அழைப்பர்!''

''ஏ நாகணவாய்ப் பறவையே! அத்தகைய தலைவன் என்னைத் தனியே தவிக்கவிட்டுச் சென்று நாட்கள் பல கடந்தன: அவனை மறக்கவும் என்னால் இயலவில்லை; அவனைக் கண்டு ஆறுதல் பெறுதற்கும் என்னாற்கூடவில்லை! அவன் பிரிவால் வாட்டமுற்ற என் உடம்பில் பசப்புத் தேமலுங் கண்டுவிட்டது; ஊரார் என் நிலைமையினைக்கண்டு ஏளனம் செய்கின்றனர்! இவற்றையெல்லாம் என் தலைவன்பாற்சென்று கூறமாட்டாயா?'' என்று கனிந்த உள்ளத்துடன் பேசுகின்றாள்

அவள் பேச்சினைச் செவிமடுப்பது போல் அமைதியாக இருந்த நாகணவாய்ப் பறவை, சிறிது நேரத்தில் வெளியே பறந்து சென்றது! ''தன்னுடைய குறைகளையெல்லாம் தன் தலைவன்பாற் கூறத்தான் போகின்றது!'' என்று நினைந்து மகிழ்ச்சியிற்றிளைத்தாள்! சிறிது நேரங்கடந்தது; வான் வழியே பறந்து சென்ற கிள்ளை ஒன்று ஆங்கே, அவளருகே வந்தமர்ந்தது! தன் தலைவனைக் காணக் கொடுத்துவைக்காவிடினும் அவனின் திருப்பெயரையாவது கேட்டு ஆறுதலடையலாமே என்ற எண்ணந் தோன்றியது தலைவிக்கு! ''சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளை!'' என்ற பழமொழியை நன்கு உணர்ந்தவள் அவள்! ''நமது தலைவனின் திருப்பெயரை அக் கிள்ளையிடத்தே கூறுவோமேயானால் சிறிது நேரங்கழித்துத் தானே திரும்பச் சொல்லுமன்றே! அப்போதாவது அவன்

திருப்பெயரைக் கேட்கும் பேறு கிட்டுமே!'' என்ற ஆர்வம் அவளுக்கு!

''கைம்மாறு கருதாது பணி புரியுந் தன்மை மக்கட் கூட்டத்தே கூடக் காணமுடிவதில்லை; அவ்வாறிருக்கக் கிள்ளைகள் மட்டும் விதிவிலக்கா?'' என்று எண்ணினாள். ''ஆம்! நாம் ஏதாவதொரு சிறு உதவியைச் செய்தால் அக் கிள்ளையும் நம் விருப்பத்தினை நிறைவேற்றும்!'' என்று துணிந்தாள்! அக்கிள்ளையும் உணவுதேடுதற்காக அங்குமிங்கும் அலைந்து ஒன்றுங் கிட்டாமல் தவித்து நிற்கும் துயர நிலையி-னைக் கண்டு கொண்டாள்; அதற்கு உடனடித் தேவை உணவு! ''தலைவன் பிரிவாலுண்டாகும் துயரத்தால் நமக்கோ உணவு கொள்ள முடிவதில்லை! அவ்வுணவை இக் கிளிப்பிள்ளைக்குக் கொடுத்தால், அதன் வயிறும் நிறையும்; நம் விருப்பமும் நிறைவேறும்! நாமும் சிறிது மன நிறைவு கொள்ளலாம்!'' என்று எண்ணியவளாய்க் கிள்ளையைப்பார்த்துப் பேசலுற்றாள்!

''அன்புக் கிளியே! ஒருமுறை இங்கேவா!...இளங்கிளியே! உன்னுடைய சிறகுகள தாம, கண்ணையும் கருத்தையும் கவரத் தக்க முறையில் எவ்வளவு அழகாக அமைந்துள்ளன! பசித் துன்பம் தாளாமையினால் பெரிதும் வாட்டமுற்றிருக்கின்றாய் போலும்! உன் பசியைப் போகக என்னிடத்தே அருமையான உணவு இருக்கின்றது! தேனும் பாலும் கலந்த அவ்வுணவை நீ உண்ணும்படி, யானே - என் கையினாலே முறையாகத் தரு-வேன்! ஆனால் நீ எனக்கு ஒரு உதவி செய்தல் வேண்டும்! அவ் வுதவியை நின்னையன்றி வேறு யாருஞ் செய்தல் இயலாது; பிறர்க்குதவி செய்யும் பெற்றியில் உனக்கு நிகர் யாருமில்லை என்று துணிந்து சொல்லுவேன்!... நீ இப்போது செய்யும் உதவியை யான் என்றும் மறவேன்! 'நன்றி மறப்பது நன்றன்று' என்ற கருத்தினை நானுமறிவேன்! ஆதலின், நீ இப்போது என் தலைவனின் திருப்பெயரைப் பலமுறை கூடச் சொல்ல வேண்டு மென்பதல்ல; ஒரேஒருமுறை சொல்! அதுவே போதும்! ...என் தலைவன் - யார் என்பதையும் சொல்லி விடுகின்றேன்! .. மிக்க பவளமும் முத்தும் துறையிலே நிறைந்துள்ள கடலினை அடுத்த திருத்தோணிபுரம் என்னும் அருமையான ஊரின்கண் இருப்-பவன்; தன் முடியிலே அசைகின்ற இளம்பிறை சூடியவன்; எல்லார்க்கும்தான் ஈசன்; ... அவனுடைய 'திருப்பெயர்களை யான் மகிழும்படி ஒரே ஒருமுறை சொல்லமாட்டாயா? அதனைக் கேட்டாகிலும் சிறிது ஆறுதலடைவேனே!'' என்று நெஞ்சம்

குழைந்துருகும்வண்ணம் பேசுகின்றாள்! அவள் பேச்சினை நாமும் காது குளிரக் கேட்போம்:

''நற்பதங்கள் மிக அறிவாய் நானுன்னை வேண்டு கின்றேன்
பொற்பமைந்த வாயலகிற் பூவைநல்லாய்! போற்று கின்றேன
சொற்பதஞ்சேர் மறையாளர் திருத்தோணி புரத்-துறையும்
விற்பொலிதோள் விகிர்தனுக்கென் மெய்ப்பயலை விளம்பாயே''

''சிறையாரு மடக்கிளியே! இங்கேவா தேனொடுபால்
முறையாலே உணத்தருவன் மொய்பவளத் தொடு தரளந்
துறையாருங் கடல்தோணி புரத்தீசன் துளங்குமிளம்
பிறையாளன் திருநாமம் எனக்கொருகாற் பேசாயே''

[பூவை-நாகணவாய்ப் பறவை; பொற்பு-பொலிவு; அழகு; விகிர்தன்-இறைவன்; பயலை-காமத்தால் உண்டாகும் பசப்புத்தேமல்; சிறையாரு மடக்கிளியே - சிறகுடைய இளங்கிளியே; தரளம்-முத்து; துளங்கு - அசைகின்ற; இப் பாடல்கள் 'காம மிக்க கழிபடர் கிளவி' என்ற அகத்துறை-யினைச் சார்ந்தன.]

இவ்வாறு உளமுருக, ஊன் உருகப் பாடிய தலைவி தான் யாரோ? ஆம்! 'திருநெறிய தமிழ்வல்ல திருஞான சம்பந்தர்' தாம்! தம்மைத் தலைவியாகத், தம்மை ஆட்கொண்ட அருள் வள்ளலாம் 'பிறைசூடும் பெம்மானை'த் தலைவனாகக் கருதிப் பாடுகின்றார்! 'விளம்-பாயே! பேசாயே!' என்ற சொற்களிலேதான் எத்துணைக் கனிவு பார்த்தீர்களா? பத்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய அவர்தம் பாக்கள் 'உயிர்க்கு ஆக்கந்' தருவன! அவற்றை நாமும் நாள்தோறும் பாடிப் பிறவிப் பெருங்கடலை நீந்துவோமாக! வெல்க சம்பந்தர் புகழ்!

# 12

# பாவைப் பாடல்கள் - ஓர் ஆய்வு

''ஆதியும், அந்தமும் இல்லா அரும்பெருஞ்
சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாட்டடங்கண்
மாதே வளருதியோவன் செவியோ நின்செவிதான்
மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலி
போய்
வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்ம்மறந்து
போதா ரமளியின்மேல் நின்றும் புரண்டிங்ஙன்
ஏதேனும் ஆகாள் கிடந்தாள்-என் னேயென்னே
ஈதேஎந் தோழி பரிசேலோர் எம்பாவாய்!''

''மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்
நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர்!
சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள!
கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன் குமரன்
ஏரார்ந்த கண்ணி யசோதை இளஞ்சிங்கம்
கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல்முகத்தான்
நாராய ணனே! நமக்கே பறைதருவான்
பாரோர் புகழப் படிந்தேலோர் எம்பாவாய்!''

என்ற பாடல்களை ஆண்டுதோறும் மார்கழித்திங்களில் காது குளிர, மனங்குளிரக் கேட்கின்றோமல்லவா? தெய்வத் தமிழ் மணம் கமழும் இத்தகு பாவைப் பாடல்களைப் பற்றி ஆராய்வது அறிவுக்கு விருந்தாகுமல்லவா?

வான்கலந்த மாணிக்கவாசகர் பாடிய பனுவல் திரு வெம்பாவை. அரங்கனார்க்குத் துழாய் மாலை முடிசூடிக் கொடுத்த சுடர்க்கொடியாம் ஆண்டாள் அருளிய பனுவல் திருப்பாவை. இவ்விரு பாவைகளும் தமிழ்ப் பெருமக்களுக்கு இருகண்களாம்.

ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் 'எம்பாவாய்' என்னும் தொடர் அமைந்துள்ளதால் இப்பனுவல் 'பாவை' என்னும் பெயர் பெற்றன போலும். 'தெய்வத்தன்மை' என்ற பொருள் பெற்ற மங்கல அடைமொழியாகிய 'திரு' என்னும்

நற்றமிழ்ச் சொல்லோடு 'திருப்பாவை' 'திருவெம்பாவை' என்றழைக்கப்பட்டன. 'பாவை' என்ற சொல் எங்ஙனம் வந்தது என்பது சிந்திக்கத்தக்கது.

பாவையரை முன்னிலைப்படுத்தியதால், 'பாவை' எனும் பெயர் பெற்றதா? அன்றி மணலிற பாவை செய்து மகளிர் விளையாடுவதால் 'பாவை' எனும் பெயர் பெற்றதா? அன்றிப் பாவையர் நோன்பு நோற்பதால் 'பாவை' எனும் பெயர் பெற்றதா? இம்மூன்று காரணங்களுமே பொருத்தமாகத் தோன்றுகின்றன.

ஆற்றிலே புதுவெள்ளம் வந்தால் அதனைக் கண்டு களிக்கவும், அதில் நீந்தி விளையாடவும இளைஞர்கள் விரும்புவது இயல்பே. தெய்வத் திரு நதிகளில் நீராடுவது உடலுக்கு மட்டுமன்று. உள்ளத்துக்கும் உவப்பு என்றும், அதனால் கிடைப்பது பெரும் புண்ணியம் என்றும் நம் நாட்டுப் பெண்கள் கருதினர். ஆற்றிலே வெள்ளம் வந்தால் அளவிலா ஆனந்தம் அவர்களுக்கு!

வையை யாற்றிலே வெள்ளம் வந்தது; மதுரை மக்கள் அதில் நீராட விரைந்தனர். அங்ஙனம் விரைந்தவர்களைப் பற்றிப் பண்டைப் பரிபாடல் இப்படிப் பகர்கிறது :

> ''முதியர், இளையர், முகைப்பரு வத்தர்
> வதிமண வம்பலர், வாயவிழ்ந் தன்னார்
> இருதிற மாந்தரும், இன்னினி யோரும்
> விரவு நரையோரும், வெறுநரை யோரும்
> பதிவத மாதர் பரத்தையர் பாங்கர்
> அதிர்குரல் வித்தகர்'' (பரிபா : 10 : 19 24)

—இப்படிப் பலதிறத்தினர்! யானை மீது சென்றோர்; குதிரை மீது சென்றோர்; பல்லக்கிற் சென்றோர்; நடந்து சென்றோர் எனப் பலர், உள்ளத்திலே களிப்பு; நடையிலே மிடுக்கு. எனவே தோள்கள் பூரித்தன; தோள்வளை செறிந்தன. தொய்யிற் கொடியும் மார்பு ஆரமும் கலந்து மயங்கி உதிர்ந்தன. சந்தனக் குங்குமக் குழம்புகளில் மூத்துச் சரம் படிந்து, நிறமே மாறிவிட்டனவாம். இப்படி ஆரவாரத்துடன் ஆற்றுக்குச் சென்றனர், நீராடும் மங்கையர்கள், ஒவ்வோர் வரம் கேட்டு உவப்படைவர். அழகும் இளமையும் கொண்ட கன்னிப் பெண்கள் மணலால் 'பாவை' அமைத்து விளையாடு·

வர்; அப்பாவைகளைப் புதுவெள்ளம் சிதைத்துவிடும்; அது கண்டு அழுவர் அப்பெண்கள்.

> ''மாதர் மடநல்லார் மணலின் எழுதிய
> பாவை சிதைத்தது என அழ''

என்று பரிபாடல் பேசும்.

இன்று மார்கழித் திங்களில் கொண்டாடும் இவ்விழா. முன்பு 'தைந்நீராடல்' என்று போற்றப்பட்டது. மார்கழி நீராடல் திருவாதிரைக்குப் பத்து நாட்களுக்கு முன் தொடங்கித் திருவாதிரையில் முடிவுபெறுவது; ஆனால் தைந்நீராடல் என்பது, மார்கழித் திருவாதிரையில் தொடங்கித் தைத்திங்கள் தொடக்கத்தில் முடிவு பெறுவது. இதனைப் பரிபாடல் மிக விளக்கமாகப் பேசுகிறது.

''அதிரும் மேகங்கள் வானத்தைவிட்டு நீங்கின; பின்-பனிப் பருவமும் வந்தது. அப்போது ஞாயிறு காய்ந்து வருத்துவதில்லை. குளிர்ந்த பின் மழையும் பெய்யும். வானத்தே வெண்ணிலா விளங்கும் திருவாதிரை நாளிலே, விரிந்த நூலைக் கற்ற அந்தணர்கள், சிவபிரானுக்கு விழாச் செய்தலைத் தொடங்கினர். முப்புரிநூல் அந்தணர்கள், பொற்கலங்களில் பூசைப் பொருள்களை ஏந்தி நின்றனர். இதனை ''மாயிருந் திங்கள் மறுநிறை ஆதிரை, விரிநூல் அந்தணர் விழவு தொடங்கப், புரிநூல் அந்தணர் பொலங்கலம் ஏற்ப'' எனப் பரிபாடல் குறிக்கின்றது.

திருவாதிரை நாளில் அந்தணர், 'பரந்த இந்நிலப்பரப்-பானது வெம்மையால் வாடா திருப்பதாக' என வேண்டினர். அழகிய வளையல் அணிந்த கன்னிப் பெண்கள் மார்கழி நோன்பேற்றவராக நீராடியபடி நின்றனர். சடங்குகளை நன்கறிந்த முதுபெண்டிர், அக்கன்னிப் பெண்களுக்கு, நோன்பு பூண்டு நீராடும் முறையைச் சொல்லித் தருகின்றனர். பொய்-யான பல விளையாட்டுக்களை ஆடுவர். பொய்யாகக் கணவன் மனைவி எனத் தம்முள் கொண்டு விளையாடுவர். தம் தாய்மார் களின் அருகே இருந்துகொண்டு தவமாகிய தைந்நீராடலை மேற்கொள்வர் அக்கன்னிப் பெண்கள்!''

> ''வெம்பா தாக வியனில வரைப் பென
> அம்பா ஆடல்''

என்று பரிபாடலில் வரும் 'அம்பாஆடல்'தான் 'எம்பா ஆடல்'' என்றாயிற்றோ என்றும் எண்ணத் தோன்றுகின்றது.

கன்னியர்கள் தமக்குச் சிறந்த கணவன்மார் கிடைக்க வேண்டும் என்பதற்காக இந்நோன்பை மேற்கொண்டார்கள் என்பது மட்டுமன்று, இப்பரந்த நிலத்தே மழை பொழிந்து இப் பூமி வெம்மையின்றிச் செழிக்க வேண்டும் என்பதற்காகவும் இந் நோன்பை மேற்கொண்டனர் என்று சொல்லலாம்!

2000 ஆண்டுகட்கு முன் கொண்டாடப்பட்ட அதே விழாத்தான், இன்று மார்கழித் திங்களில் பாவை விழாவாகக் கொண்டாடப்படுகின்றது.

மணிவாசகப் பெருமான், திருத்தலந்தோறும் சென்று எம்பெருமானை வணங்கி வருங்கால் திருவண்ணாமலை வந்து சேர்ந்தார். அப்போது மார்கழித் திங்கள் வந்தது. கன்னிப் பெண்கள் பலர், திருவாதிரைக்கு முன் 10 நாட்கள் தொடங்கி வைகறைப் பொழுதில் கண்விழித் தெழுந்து, தம் தோழிமாரையும் எழுப்பி அழைத்துக்கொண்டு சிவபெருமான் பெருமைதனை வாயாரப் பாடிக்கொண்டு நீர் நிலைக்குச் சென்று நீராடினர்; பார்வதியின் திருவுருவை ஈரமணலாற் சமைத்து வழிபட்டனர்; தமக்கு நல்ல கணவன்மார் கிட்ட வேண்டும் என்றும், நாடு செழிக்க மழை பொழிய வேண்டும் என்றும் வேண்டினர். இவர்களின் செயலைக் கண்ணாரக் கண்ட வாதவூரார், அப்பெண்களே கூறியதாகப் பாடிய பாடல்களே திருவெம்பாவையாம்! இவ்வுண்மையை,

> ''அன்னவர் இயல்பு கண்டார் ஆங்கவர் புகன்ற தாக
> மன்னிய திருவெம் பாவை வாசகம் பேசி''

என்ற திருவாதவூரடிகள் புராணம் கூறும். அன்றியும்,

''அண்ணாமலையான் அடிக்கமலம் சென்றிறைஞ்சும் விண்ணோர்'' என்ற இவர்தம் வாக்கும் இவ்வுண்மைக்கு அரண் செய்கின்றது.

திருவெம்பாவை தோன்றுதற்கான காரணம் இங்ஙன-மிருக்கத் திருப்பாவை தோன்றுதற்கான காரணம் என்ன-வெனக் காண்போம்.

திருவாய்ப் பாடியில் கண்ணபிரான் ஆயர் மங்கைகளுடன் ''குரவை'' கோத்து விளையாடும் போது ஆநந்தரசம்

தலைப்பற்றி வாய்க் கொண்டு செல்ல, 'இனி நற்கேடு கெடலாகாது' என்று அந்தரசம மாறுகைக்காகக் கண்ண-பிரான் பெண்களைப் பிரிந்து மறைந்திருக்க, அப்போது அப்பெண்பிள்ளைகள் தங்கள் ஆற்றாமையாலே, 'இனி எவ்வகையாலாயினும் நாம் தரிக்க வேணும்' என்று ஓர் ஆய்ச்சி 'நான் காளிய நாகத்தின் வலியை அடக்குகிறேன் காண்' என்பது; வேறொருத்தி, 'நான் தேநுகாசுரனைத் தொலைத்தொழிக்கின்றேன்' காண் என்பது மற்றொருத்தி, 'நான்; பூதனை முலையைச்சுவைத்துஉண்கிறேன் காண்!' என்ப தாய் இப்படி அனைவரும் தாங்கள் கண்ணபிரான் போல அநுகாரம் செய்து ஒருவாறு துயர்தீர்ந்து தரித்தார்கள்'' என்று சொல்லிக்கேட்ட ஆண்டாள், தானும் அவ்வாய்ச்சிகளைப் போல் அநுகரித்துத் தரிக்கும்படியைக் கூறுவது 'திருப்பாவை' என்னும் திவ்வியப் பிரபந்தமாகும்.

'இவ் ஆண்டாள், அந்தணர் தலைவரான பெரியாழ்வார் தம பெண் பிள்ளையாய் இருந்து ஆய்ச்சியர்களுக்குச் சமமாக அநுகரிக்கிற இது பொருந்துமா?' என்ற கேள்வி எழுகின்றது. இதற்கு அண்ணங்கராசாரிய சுவாமிகள் இப்படி அமைதி கூறுகின்றார்:

'ஒரு யாகம் செய்யத் தொடங்கினவர்கள் தமது நிஜ நாமதேயங்களை விட்டிட்டு யாகம் முடியுமளவும் யஜமானன்' என்றும் 'அத்வர்யு' என்றும் 'ஹோதா' என்றும் இவை போன்ற சில நாமங்களை ஏறிட்டுக் கொள்ளுமாறு போல இவ்வாண்டாளும் ஸ்ரீவில்லிபுத்தூரைத் திருவாய்ப்பாடியாக-வும், அங்குள்ள பெண்களை ஆய்ப் பெண்டிராகவும் தன்னையும் அவர்களுள் ஒருத்தியாகவும், வடபெருங்கோயிலை ஸ்ரீநந்தகோபர் திருமாளிகையாகவும், அதில் எழுந்தருளி-யிருக்கின்ற எம்பெருமானைக் கண்ணபிரானாகவும் அநு-சந்தித்துத் தனது திருவுள்ளத்தைத் திருவாய்ப் பாடியிற் செலுத்தி, பாவனையின் முதிர்ச்சியாலே அநுகாரம் முற்றி, இடைநடையும் இடைமுடியும் இடைப் பேச்சும் முடைநாற்றமு-மாய்த் தன்மயமாயினள் என்றால் இதிற் பொருந்தாதது ஒன்றுமில்லை என்றுணர்க!''

ஆண்டாள் அம்மையார் பாடிய திருப்பாவையோடு மணிவாசகர் மொழிந்த திருவெம்பாவையை ஒப்பிட்டு நோக்-குங்கால் மற்றோர் உண்மையும் நமக்குத் தெரியவரும்.

அருட்குணமிக்க ஆண்டவனைத் தலைவனாகவும், அன்பு முதிர்ந்த உயிரைத் தலைவியாகவும் கொண்டு, உலகியலிற் காணப்படும் தலைவன்-தலைவியருடைய காதல் ஒழுக்கத்தை ஏறிட்டு ஞானானுபவப் பொருள் தோன்ற நாயன்மார்களும் ஆழ்வார்களும் பாடல் பாடியமை நாமறிவோம். ''முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள் மூர்த்தி அவன் இருக்கும் வண்ணம கேட்டாள்'' என்ற நாவுக்கரசர் பாடல் இதற்குச் சான்று. இம்முறையில் மாணிக்கவாசகரும் தம்மைத் தலைவியாகவும், சிவபிரானைத் தலைவனாகவும் கொண்டு பாடிய பாடல்கள் திருவாசகத்தில் உள. இம்முறையின் தொடக்கமே இத்திருவெம்பாவைப் பாடல்!

''இத்திருவெம்பாவையில் ஆன்மநாயகனாகிய இறைவனை அடைதற்குரிய பக்குவ முதிர்ந்த உயிர்களையே கன்னிப் பெண்களாகவும் ஆணவ மல இருளிற் பிணிப்புண்டிருத்தலையே உறங்கிக் கிடத்தலாகவும், மலவாற்றல் ஒழியப் பெறும் நிலையே துயில் நீத்தெழும் நிலையாகவும், மலபரிபாகமுடைய உயிர்கள் அஃதில்லாத உயிர்களை உணர்த்தி அன்பு நெறிப்படுத்து இறையருளில் தோய்வித்தற்கு அழைத்தலையே நீராட அழைத்ததாகவும் அமைத்துக் கொண்டு இஃது அருளிச் செய்யப்பட்டது என்க'' என்று விளக்கம் தருகிறார் பண்டிதமணி கதிரேசன் செட்டியார்.

இத் திருவெம்பாவைக்கு மேலும் சில தத்துவப் பொருட்கள் கூறப்படுவதுண்டு. திருவெம்பாவையின் முதல் 8 திருப் பாடல்கள் வரை ஒவ்வொரு திருப்பாடலிலும் ஒவ்வொரு பெண்ணே எழுப்பப்பட, அவ் எண்மரோடு முதலில் எழுப்பிய ஒருத்தியையும் சேர்த்தால் ஒன்பதின்மர் ஆவர். அவ் ஒன்பதின்மரும் 'மனோன்மணி' முதல் 'வாமை' ஈறாக நவசக்திகள் ஆவர். இச்சக்திகளின் இயக்கத்தால் இவ்வுலக நிகழ்ச்சி நடை பெறுதலைக் குறிப்பால் புலப்படுத்துவதே இத்திருவெம்பாவை என்பர் சிலர். ஆனால் பண்டிதமணி கதிரேசச் செட்டியாரோ, ''கன்னியர் 5 ஆண்டு முதல் 12 ஆண்டுத் தொடக்கம் வரை ஆண்டு வகையால் எண்வகைப்படுவர். ஈண்டுப் பாவை நோன்பு மேற்கொண்டவர் இவ்வெண் வகையினரே! முதலில் பன்னீராண்டுத் தொடக்கமுடைய பெரிய கன்னிப் பெண்கள் சிலர் தாமே விடியுமுன் துயில் நீத்தெழுந்து உடல் தூய்மை செய்து கொண்டு இறைவன் புகழைப் பாடிக் கொண்டு தம்மோ-

டொத்த பருவத்தினளான 12 ஆண்டுத் தொடக்கப் பருவத்து ஒரு பெண்ணை எழுப்பினர் எனவும், பின்னர் முறையே 11, 10, 9, 8, 7, 6, 5 ஆண்டுகளான பெதும்பைப் பருவத்தினரையும் எழுப்பினர் எனவும் கொள்ள வேண்டும்!'' என்று கூறி இதற்கான சான்றுகளும் காட்டுவர்

'ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் சோதி' என்று தொடங்கும் திருவெம்பாவை 20 பாடல்களைக் கொண்டது. 'மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளால்' என்றுதொங்கும் திருப்பாவை 30 பாடல்களைக் கொண்டது.

2 பாவைகளிலும் பெண்கள் விளிக்கப்படுகின்றனர். வாட்டடங்கண்மாதே, நேரிழையாய், முத்தன்ன வெண்ணகையாய், ஒண்ணித்தில நகையாய், பாலூறு தேன்வாய்ப் படிறீ, மானே, அன்னே, என்பன திருவெம்பாவையில் வருவன.

நேரிழையீர், சிறுமீர்காள், பேய்ப் பெண்ணே, மாமான் மகளே, பொற்கொடியே, புற்றரவல்குல் புனமயிலே, செல்வப் பெண்டாட்டி, நற்செல்வன் நங்காய், பாவாய், நங்காய், இளங்கிளியே, என்பன திருப்பாவையில் வருவன.

மார்கழித் திங்களில் நடைபெறுவது இப்பாவை நோன்பு என்பதற்கு இவ்விரு பாவைகளும் சான்றாய் நிற்கின்றன. 'மார்கழி நீராடேலோர் எம்பாவாய்' எனத் திருவெம்பாவையின் இறுதிப்பாட்டுக் கூறுகின்றது. ஆண்டாள் பாசுரத்திலோ, 'மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்' (1) 'மார்கழிநீர் ஆட' (4) 'மார்கழிநீர் ஆடுவான்' (26) எனப் பலவிடத்தும் பகரப்படுகின்றது.

பாவை நோன்பு நோற்கும் மகளிர், நீராடுவதைப் பற்றியும் இருபாவைகளும் எழிலுறக் காட்டுகின்றன :

> ''மொய்யார் 'தடம்பொய்கைபுக்கு முகேர் என்னக்
> கையாற் குடைந்து குடைந்து'' (11)

> ''.. வளைசிலம்ப, வார்கலைகள்
> ஆர்ப்பரவம் செய்ய, அணிகுழல்மேல் வண்டார்ப்பப்
> பூத்திகழும் பொய்கை குடைந்து உடையான் பொற்பாதம்
> ஏத்தி இருஞ்சுனைநீர் ஆடேலோர் எம்பாவாய்!'' (12)

''பொங்கு மடுவில் புகப்பாய்ந்து பாய்ந்து நம்
சங்கம் சிலம்பச் சிலம்பு கலந்தார்ப்பக்
கொங்கைகள் பொங்கக் குடையும் புனல் பொங்கப்
பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோர் எம்பாவாய்!''
(13)

''காதார் குழையாடப் பைம்பூண் கலனாடக்
கோதை குழலாட வண்டினம் குழாமாடச்
சீதப் புலனாடி'' (14)

''ஏர் உருவப் பூம்புனல் பாய்ந்து'' (15)

''பங்கயப் பூம்புனல் பாய்ந்து'' (17)

என மணிவாசகர், மங்கையர் நீராடும் இயல்பினை மொழிகின்றார்.

''நீராடப் போதுவீர்'' (1);

''நாட்காலே நீராடி'' (2)

''நாங்கள் நம் பாவைக்குச் சாற்றிநீர் ஆடினால்'' (3)

''குள்ளக் குளிரக் குடைந்து நீர் ஆடாதே
பள்ளிக் கிடத்தியோ'' (13)

என ஆண்டாள் அருளிச் செய்கின்றார்.

காலைக் காட்சியைக் கவினுறக் காட்டுவதிலும் இயற்கையை இனிது எடுத்து இயம்புவதிலும் இவ்விரு அடியார்களும் வல்லராகத் திகழ்கின்றனர்.

''கோழி சிலம்பச் சிலம்பும் குருகெங்கும்
ஏழில் இயம்ப இயம்பும வெண்சங்கு எங்கும்'' (8)

''பைங்குவளைக் கார்மலராற் செங்கமலப் பைம்போதால்
அங்கம் குருகினத்தால் பின்னும் அரவத்தால்'' (13)

''கண்ணார் இரவி கதிர்வந்து கார்கரப்பத்
தண்ணார் ஒளிமழுங்கித் தாரகைகள் தாமகல''(18)

என்பன திருவெம்பாவைக் காட்சிகள்!

''புள்ளும் சிலம்பினகாண் புள்ளரையன் கோயிலில்
வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ'' (6)

''கீழ்வானம் வெள்ளென்று எருமை சிறுவீடு
மேய்வான் பரந்தனகாண்!'' (8)

''கனைத்திளம் கற்றெருமை கன்றுக் கிரங்கி
நினைத்து முலைவழியே நின்று பால்சோர
நனைத்தில்லம் சேறாக்கும்'' (12)

''வெள்ளி எழுந்து வியாழம் உறங்கிற்று
புள்ளும் சிலம்பினகாண்'' (13)

''உங்கள் புழைக்கடைத் தோட்டத்து வாவியுள்
செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து ஆம்பல்வாய்கூம்பினகாண்''
(14)

''வந்தெங்கும் கோழி அழைத்தனகாண் மாதவிப்
பந்தல்மேல் பல்கால் குயிலினங்கள் கூவினகாண்'' (18)

எனப் பல்வேறு பாடல்களிலும் இயற்கைக் காட்சியை இயம்புவர் ஆண்டாள் அம்மையார்!

இவ்விரு பாவைகளிலும் உவமை நயங்களும் ஆங்காங்கு மிளிர்கின்றன.

உள்ளம் உருகுதலைச் சொல்ல வந்தபோது, 'தீசேர் மெழுகு ஒப்பாய்' (7) என்றும்; பைங்குவளைக் கார்மலரால் விளங்கும் பொய்கையானது, ''எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்று'' இசைந்துள்ளது என்றும் (13); கடல் நீரை முகந்து விண்ணில் விளங்கி மின்னி முழங்கிப் பொழியும் மேகமானது, ''எழுந்துடையாள் என்னத் திகழ்ந்து, எம்மை ஆளுடையாள் இட்டிடையின் மின்னிப் பொலிந்து, எம்பிராட்டி திருவடிமேற் பொன்னஞ் சிலம்பிற் திருப்புருவம் என்னச் சிலை குலவி, அவள் நமக்கு முன் சுரக்கும் இன்னருளே என்னப்'' பொழியும் என்றும்-(16); கதிரவனைக் கண்டதும் தாரகைகள் தண் ஆர் ஒளி மழுங்கி மறைதலானது ''அண்ணாமலையான் அடிக்கமலம் சென்று இறைஞ்சும் விண்ணோர் முடியின் மணித் தொகை வீறு அற்றாற்போல்'' ஆயிற்று என்றும் (18) வாசகர் கூறுகின்றார்.

ஆண்டாள் பாவையிலும் இத்தகு உவமைகள் உண்டு. மழை பொழியும் மேகத்தைச் சொல்ல வந்த போது, ''ஆழியுள் புக்கு முகந்துகொடு ஆர்த்து ஏறி, ஊழி முதல்வன் உருவம் போல் மெய்கறுத்துப் பாழியந் தோளுடைப் பற்பநாமன்

கையில் ஆழி போல் மின்னி வலம்புரி போல் நின்று அதிர்ந்து, தாழாதே சார்ங்கம் உதைத்த சரமழை போல்'' திகழ்வதைக் காட்டுகின்றார். (4) 'தாமோதரனைத் தொழுதல் என்னாகும்' என்ற வினாவுக்கு, நம் பாவங்கள் எல்லாம் 'தீயினில் தூசு' அதாவது 'நெருப்பிலிட்ட பஞ்சு' போல உருமாய்ந்து போகும் என்பது இவர் வாக்கு (5).

ஆய்ச்சியர்கள், கண்ணபிரான் அருகே நின்றது. 'அங்கண்மா ஞாலத்து அரசர், அபிமான பங்கமாய் வந்து (நின்) பள்ளிக் கட்டிற் கீழே சங்கம் இருப்பார் போல்' காட்சியளித்தது. (22). அவனுடைய கண்களோ, 'கிண்கிணி வாய்ச் செய்த தாமரைப் பூப்போல!' விளங்குபவை. (22); பூவைப்பூ வண்ணன், தன் திருக்கோயிலினின்றும் எழுந்தருளிச் சீரிய சிங்காசனத்து அமர வேண்டும் என்று ஆய்ச்சியர்கள் வேண்டும்போது,

> ''மாரி மலைமுழஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்
> சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து,
> வேரி மயிர்பொங்க எப்பாடும் பேர்ந்து உதறி
> மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்
> போதருமா போலே'' (23)

என்ற உவமையை ஆள்கின்றனர்.

நாள் எல்லாம் கடுமையாக உழைத்துவிட்டு இரவில் கண்ணுறங்குகின்றோம். அயர்ந்து தூங்கும் அவ்வேளையில் யாராவது எழுப்பினால் கடுமையான கோபம் வரத்தானே செய்யும். எத்துணையளவு தான் விரைந்து செய்யவேண்டிய வேலையாயினும் எழுப்பியவுடனே எழுந்திருத்தல் என்பது கடினந்தான். அதிலும் மலர்ப்படுக்கையில் படுத்திருந்தால் கேட்கவா வேண்டும்? இத்தகு உலகியலும் இப்பாவைப் பாடல்களில் அழகுறச் சித்திரிக்கப்பட்டுள்ளது.

> ''வாட்டடங்கண் மாதே! வளருதியோ வன்செவியோ, நின்செவிதான் ..
> போதார்அமளியின் மேல் நின்றும் புரண்டு இங்ஙன் ஏதேனும்
> ஆகாள் கிடந்தாள் என்னே என்னே!'' (1)

> ''இப் போதார் அமளிக்கே நேசமும் வைத்தனையோ'' (2)

> ''கண்ணைத் துயின்று அவமே காலத்தைப் போக்காதே'' (4)

> ''வன்னெஞ்சப் பேதையர் போல் வாளா கிடத்தியால்
> என்னே துயிலின் பரிசு'' (1)

> ''ஈதென்ன உறக்கமோ? வாய்திறவாய்'' (8)

என்று தூங்குகின்ற பெண்ணை இப்படிப் பேசுகின்றனர் திரு-வெம்பாவை மகளிர்.

'நாளைக்கு உங்களையெல்லாம் நானே வந்து எழுப்பு-வேன்!' என்று சவால் விட்ட பெண், இப்போது என்ன ஆனாள்? கொஞ்சமும் நாணம் இன்றித் தூங்குகின்றாள்.

> ''மானே! நீ நென்னலை நாளை வந்து உங்களை
> நானே எழுப்புவன் என்றலுமே நாணாமே''

கிடக்கும் இயல்பினைச் செப்புகின்றனர் அவர்கள்.

> ''வெள்ளை விளி சங்கின் பேரரவம் கேட்டிலையோ?
> பிள்ளாய் எழுந்திராய்!'' (6)

> ' கீசுகீசு என்று எங்கும் ஆனைச்சாத்தன் கலந்து
> பேசின பேச்சரவம் கேட்டிலையோ, பேய்ப் பெண்ணே!
> காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து
> வாச நறுங்குழல் ஆய்ச்சியர் மத்தினால்
> ஓசைப்படுத்த தயிர்அரவம் கேட்டிலையோ?'' (7)

> ''ஊமையோ அன்றிச் செவிடோ அனந்தலோ
> ஏமப் பெருந்துயில் மந்திரப் பட்டாளோ!'' (9)

> ''கூற்றத்தின் வாய்வீழ்ந்த கும்பகரணனும்
> தோற்றும் உனக்கே பெருந்துயில்தான் தந்தானோ?''
> (10)

> ''இனித்தான் எழுந்திராய் ஈதென்ன பேருறக்கம்'' (12)

> ''எங்களை முன்னம் எழுப்புவான் வாய்பேசும்
> நங்காய் எழுந்திராய்'' (14)

என்பன திருப்பாவைப் பெண்கள் கூற்றாகும்.

'வண்ணக்கிளி மொழியார் எல்லாரும் வந்தாரா?' எனத் திருவெம்பாவையில் வரும் பெண் கேட்கிறாள். 'எல்லாரும் போந்தாரோ?' எனத் திருப்பாவைப் பெண் கேட்கிறாள்.

''தித்திக்கப்பேசுவாய் வந்து உன் கடைதிறவாய்'' (3); ''பாலூறு தேன்வாய்ப் படிறீ கடைதிறவாய்'' (5) எனத் திரு-

வெம்பாவையிலும்; ''தேசமுடையாய் திறவேலோர் எம்-பாவாய்'' (7) ''மணிக்கதவம் தாள் திறவாய்'' 9)''தேற்றமாய் வந்து திறவேலோர் எம்பாவாய்'' (10) எனத் திருப்பாவையி-லும் வரும் 'கடைதிறவாய்' என்பது, கலிங்கத்துப்பரணியில் வரும், 'தேயும் கபாடம் திறன்மினோ' என்ற பகுதியை நினைப்-பூட்டுகிறது.

பாவை நோன்பு நோற்கும் பெண்கள், அந்நோன்பினை எப்படி மேற்கொள்வது என்பதற்குத் திருப்பாவை நல்ல விளக்கம் தருகின்றது.

நோன்புக் காலத்தில், ஐயமும் பிச்சையும் ஒல்லும் வகை இடவேண்டும்; பால், நெய் அருந்தலாகாது; கூந்தலிற் பூச்-சூடக் கூடாது; செய்யத்தகாத செயல்களைச் செய்யலாகாது; மறந்தும் புறங்கூறுதல் கூடாது; அதிகாலையிலேயே நீராட வேண்டும். அந்நீராடலும் பாவை நோன்புக்காகவே அமைய வேண்டும். நோன்பு நோற்பதற்காகவே ஒரு குறிப்பிட்ட இடம் உண்டு. அங்கே எல்லாப் பெண் பிள்ளைகளும் சென்று அந் நோன்பினை மேற்கொள்ள வேண்டும.

''வையத்து வாழ்வீர்காள்! நாமும்நம் பாவைக்குச்
செய்யும் கிரிசைகள் கேளீரோ பாற்கடலுள்
பையத் துயின்ற பரமன் அடிபாடி
நெய்யுண்ணோம் பாலுண்ணோம் நாட்காலே நீராடி
மையிட் டெழுதோம் மலரிட்டு நாம் முடியோம்!
செய்யாதன செய்யோம் தீக்குறளை சென்றோதோம்
ஐயமும் பிச்சையும் ஆந்தனையும கைகாட்டி
உய்யுமாறு எண்ணி உகந்தேலோர் எம்பாவாய்!'' (2)

என்ற பாடலிலும்;

''பிள்ளைகள் எல்லாரும் பாவைக் களம் புக்கார்''
என்ற தொடரிலும் இவ்விளக்கம் உள்ளது!

இத்தகு பாவை நோன்பினால் கிட்டும் பயன் யாது? என்ற கேள்வி எழுகின்றது. தன் நலமும் பொது நலமும், ஆகிய இருவகைப் பயன்கள் இதனால் உண்டாகின்றன. இப்பயன் களைப் பற்றிஇவ்விரு பாவைகளும் விளக்கமாகப் புகல்கின்றன.

''இறைவனை எண்ணித் துதிக்கும் அன்பர்களே, தங்கட்குக் கணவராக வேண்டும்'' - இது, பாவை நோன்பின் மூக்கிய குறிக்கோள் இதனை மணிவாசகர்,

'உன் அடியார் தாள்பணிவோம் ஆங்கவர்க்கே பாங்காவோம்
அன்னவரே எம்கணவர் ஆவார் அவருகந்து
சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்
இன்ன வகையே எமக்கு எங்கோன் நல்குதியேல்......
என்ன குறையும் இலோமேலோர் எம்பாவாய்!'' (9)

''எங்கொங்கை நின்னன்பர் அல்லார் தோள் சேரற்க'' (19)

என்னும் அடிகளால் தெளிவுபடுத்துகிறார்.

நெய்யும் பாலும் அருந்தாமல் நோன்பு நோற்றாரே வைணவப்பெண்டிர்! அந்நோன்பு முடிந்தபின அவர்கட்கு என்ன கிட்டும்? இதோ அவர்கள் கூற்று :

''கூடாரை வெல்லும்சீர்க் கோவிந்தா உன்றன்னைப்
பாடிப் பறைகொண்டு யாம்பெறும் சம்மானம்
நாடு புகழும் பரிசினால் நன்றாகச்
சூடகமே தோள்வளையே தோடே செவிப்பூவே
பாடகமே என்றனைய பல்கலனும் யாம்அறிவோம்,
ஆடை உடுப்போம் அதன்பின்னே பாற்சோறு
மூடநெய் பெய்து முழங்கை வழிவாரக்
கூடியிருந்து குளிர்ந்தேலோர் எம்பாவாய்!'' (2)

—இத்தகு பயன்களுக்கெல்லாம் மேலாக மிகச் சிறந்த பயன் கிட்டும். அது என்ன?

''கோவிந்தா!
எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்றன்னோடு
உற்றோமே யாவோம். உனக்கேநாம் ஆட்செய்வோம்
மற்றைநம் காமங்கள் மாற்றேலோர் எம்பாவாய்!''(29)

—இதைவிடப் பேறு வேறென்ன வேண்டும்?

வான்புகழ் வள்ளுவர் 'வான்சிறப்பு' எனும் ஓர் அதிகாரம் வகுத்து மழையின் மாண்பினை மன்பதைக்கு உணர்த்தினார். பாவைப் பாடல்களில் மழையின் சிறப்புப் பேசப்படுகின்றது. கன்னியர்கள், தங்கள் சொந்த நன்மைக்காக மட்டுமன்றி இவ்வுலக நன்மைக்காகவும் நோன்பு நோற்ற பெருந்தகைமை அறிய முடிகின்றது.

''எங்கோமான் அன்பர்க்கு
முன்னி அவள் நமக்கு முன்சுரக்கும் இன்னருளே
என்னப் பொழியாய் மழையேலோ ரெம்பாவாய்!'' (16)

என்பர் மணிவாசகர் காட்டும் மகளிர்.

> "ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி
> நாங்கள்நம் பாவைக்குச் சாற்றிநீ ராடினால்
> தீங்கின்றி நாடெல்லாம் திங்கள்மும் மாரிபெய்து!
> ஓங்குபெருஞ் செந்நெல் ஊடு கயல்உகளப்
> பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்பத்
> தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி
> வாங்கக்குடம்நிறைக்கும் வள்ளற் பெரும்பசுக்கள்
> நீங்காத செல்வம் நிறைந்தேலோர் எம்பாவாய்!" (3)

> 'தாழாதே சார்ங்கம் உதைத்த சரமழைபோல்
> வாழ உலகினில் பெய்திடாய் ...
> மார்கழிநீ ராட மகிழ்ந்தேலோர் எம்பாவாய்!" (4)

என்பன ஆண்டாள் காட்டும் ஆய்ச்சியர் வேண்டுவன. நாடு செழிக்க மழை வேண்டும் என்பது ஒருபுறமிருக்க, மார்கழி நீர் ஆடுதற்கும் மழை வேண்டுமே என்ற கருத்தும் இதில் அடங்கி-யுள்ளது!

எல்லாவற்றிற்கும் மேலாக எம்பெருமான் திருப்புகழை உலகினர்க்கு உணர்த்துதற்கு இப்பாவைப் பனுவல் என்னும் கருவியைப் பயன்படுத்தினர் நம் ஆன்றோர் என்றும் கூறலாம். அரசர்களுடைய அல்லது வள்ளல்களுடைய கொடையையும் புகழையும் உணர்த்துவதற்கு எப்படி ஆற்றுப்படை நூல்கள் அமைந்துள்ளனவோ, அவ்வாறே இப்பாவைப் பனுவல்களும் இறைவன் தண்ணளியைத் தரணிக்குணர்த்துவன வாயின.

> "பெற்ற பெருவளன் பெறாஅர்க்கு அறிவுறீஇச்
> சென்று பயன் எதிரச் சொன்ன பக்கம்"

எனத் தொல்காப்பியர் கூறும் விதியும் இப்பாவைக்கு ஒரு வகை-யில் பொருந்தும் எனலாம்.

இவ்விரு பாவையின் ஒவ்வொரு பாடலுமே கடவுட் டன்மையைக் கழறுவதாய் அமைந்துள்ளது.

சிவபெருமான் பெருமை பேசவந்த மணிவாசகர்,

"ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் சோதி; தேசன், சிவலோகன், தில்லைச்சிற்றம்பலத்துள் ஈசன், அத்தன், ஆனந்தன், அமுதன், விண்ணுக்கொருமருந்து, வேத விழுப் பொருள், கண்ணுக்கு இனியான், ஞாலமே விண்ணே பிறவே

அறிவு அரியான், பல அமரர் உன்னற்கரியான், ஒருவன் இருஞ் சீரான்; ஆழியான், ஊழிமுதல்வனாய் நின்ற ஒருவன், ஏழை பங்காளன், முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம் பொருள், பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப் பெற்றியன், பேதை ஒருபால் திருமேனி ஒன்றல்லன், ஒரு தோழன், வெண்ணீறாடி,சிறுமருங்குல் மையார் தடங்கண் மடந்தைமணவாளன்; இவ்வானும் குவலயமும் காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடும் வித்தகன், செங்கமலப் பொற்பாதம் தந்தருளும்சேவகன்; பெண்ணாகி ஆணாய் அலியாய்ப் பிறங் கொளிசேர் விண்ணாகி மண்ணாகி இத்தனையும் வேறாகிக் கண்ணார் அமுதமுமாய் நின்றான்; எல்லா உயிர்க்கும் தோற்றம் எல்லாவுயிர்க்கும் போகம்; எல்லாவுயிர்க்கும் ஈறு!''

—இப்படி இறைவனின் எண்ணிலா இயல்புகளை அடுக்கிக் கொண்டே போகிறார் மணிவாசகப் பெருந்தகையார்!

இனி, சூடிக் கொடுத்த சுடர்க்கொடி காட்டும் கண்ணபிரானைக் காண்போம்:

''கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன் குமரன்; யசோதை இளஞ்சிங்கம், நாராயணன்; பாற்கடலுள் பையத் துயின்ற பரமன்; ஓங்கி உலகளந்த உத்தமன்; ஆழிமழைக் கண்ணன்; ஊழி முதல்வன்; பாழி அம்தோளுடைப்பற்பநாபன்; மன்னு வடமதுரை மைந்தன்; தூய பெருநீர் யமுனைத் துறைவன்; ஆயர் குலத்தினில் தோன்று மணிவிளக்கு; தாயைக் குடல் விளக்கம் செய்த தாமோதரன்; பேய்முலை நஞ்சுண்டு கள்ளச் சகடம் கலக்கு அழியக் கால் ஓச்சி, வெள்ளத் தரவில் துயில் அமர்ந்த வித்து; மாவாய் பிளந்தானை மல்லரை மாட்டிய தேவாதி தேவன்: சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற மனத்துக்கினியான்; புள்ளின் வாய் கீண்டான்; பொல்லா அரக்கனைக் கிள்ளிக்களைந்தான்; சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன்; பங்கயக் கண்ணான்; வல் ஆனை கொன்றான்; மாற்றாரை மாற்றழிக்க வல்லான்; மணிவண்ணன் முப்பத்து மூவர் அமரர்க்கு முன்சென்று கப்பம் தவிர்க்கும் கலி; உலகினில் தோற்றமாய் நின்ற சுடர்; பூவைப்பூ வண்ணன்; அன்று இவ்வுலகம் அளந்தவன்: பொன்றச்சகடம் உதைத்தவன்; கன்று குணிலா எறிந்தவன்; குன்று குடையாய் எடுத்தவன்; ஒருத்திமகனாய்ப் பிறந்து ஓர் இரவில் ஒருத்தி மகனாய் ஒளித்து வளரத் தரிக்கிலானாகித் தான் தீங்கு நினைத்த கருத்தைப் புதுப்பித்துக் கஞ்சன் வயிற்றில் நெருப்பன்ன நின்ற நெடுமால்;

ஆலின் இலையமர்ந்தான்; வங்கக்கடல் கடந்த மாயவன்!'' என்று கண்ணபிரானைப் பல்வேறு வகையாகப் பாடிப்பரவுகின்றார் ஆண்டாள்!

இறைவனை வாழ்த்துவதும்கூட நாம்வாழ்வதற்கே! இவ்விரு பாவைகளும் இறைவன் திருவடியை ஒருமுகமாக வாழ்த்துகின்றன.

மாணிக்கவாசகர் தம் திருவெம்பாவையின் இறுதிப் பாட்டில் ''போற்றி அருளுகநின் ஆதியாம் பாதமலர், போற்றி யருளுகநின் அந்தமாம் செந்தளிர்கள்''என்று போற்றிப்பண் இசைக்கின்றார். ஆண்டாளும் தம் திருப்பாவையின் 24ஆவது பாடலில்,

> ''அன்று இவ்வுலகம் அளந்தாய் அடி போற்றி!
> சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய் திறல்
> போற்றி!''

என்று போற்றிப் பண் பாடுகின்றார்.

இங்ஙனம் இவ்விரு பாவைகளையும் ஒப்பிட்டு நோக்கி ஆராய்ந்தால் இன்னும் பல உண்மைகள் புலனாகும். பாவைப் பனுவல்கள் அளவில் சிறியனவேயாயினும், திருக்குறள்போல் ஓதற்கு எளிதானவை; உணர்தற்கு அரிதானவை; வேதப் பொருளாய் மிக விளங்கும் தன்மை கொண்டவை. இப்பாடல் ஒவ்வொன்றிற்கும் பல்வேறு சமயத் தத்துவ நுண்பொருள் உரைப்பர். அவையெல்லாம் ஈண்டுச் சுட்டப்படவில்லை. இலக்கிய நோக்கில் ஆராயப்பட்டதே இது ! பாவைப் பாடல்களைப் பக்திச் சுவையுடன் படிப்போம்; நமக்கும் பயன் உண்டு; நாட்டுக்கும் நலன் உண்டு!

## 13

# மருந்தும் மந்திரமும்

மக்கள் வாழ்விற்கு வேண்டப்படும் பொருள்கள் பலப்பல; அவற்றுள் குறிப்பிடத்தக்கன இரண்டு. ஒன்று மருந்து, மற்றது மந்திரம்.

இவ்வுலகில் பிறந்த எல்லா உயிரினங்களும் நெடுங்காலம் வாழவே விரும்புகின்றன. இவ்விருப்பத்திற்கு ஆறறிவு படைத்த மக்களும் விலக்கானவரல்லர்.

மனிதர் ஒவ்வொருவரும் நோயின்றி நீண்டநாள் வாழ விரும்புவது இயல்பே! நோய் வாராமல் உடம்பைப் பேணுவதற்கே பலரும் முயற்சி செய்கின்றனர். ஆனாலும் நோய் வந்து உடம்பை ஆட்கொண்டு விடுகின்றது. நோய் வருவதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. ஒன்று முற்பிறப்பிற் செய்த தீவினையினால் வருவது; மற்றொன்று, உணவு, செயல்கள் ஒவ்வாமையினால் வருவது. இவ்விரண்டில் தீவினையால் வரும் பிணியை நுகர்ந்தே தீரல் வேண்டும். உணவு, செயல் ஒவ்வாமையினால் வரும் நோயை நீக்குவதற்கு 'மருந்து' பயன்படும்.

### நோயற்ற வாழ்வு

ஒருவன் எத்துணையளவு பெருஞ்செல்வம் பெற்றவனாயினும், மனைவி மக்களோடு வாழ்பவனாயினும், சுற்றத்தோடு சூழ இருப்பவனாயினும் அவனிடத்தே 'நோய்' நீங்காது நிலை பெற்றிருக்குமாயின் எவ்வித இன்பமும், பயனும் நுகர முடியாமல் வருந்தி வருந்தி உழல்வான்.

நோய் இருக்குமாயின் இம்மை இன்பம் மட்டுமன்று மறுமை இன்பமும் பெற முடியாது. இறைவன் அருளும் அடைய முடியாது. இதனை நன்குணர்ந்தே வள்ளல் இராமலிங்க அடிகளார் ஆண்டவனிடத்து முறையிடுங்கால் உனை மறவாதிருக்க வேண்டும் என்றார். அங்ஙனம் மறவாதிருக்க 'மதி வேண்டும்' என்றார். மதிமட்டும் இருந்தாற் போதாது, நின் கருணை நிதிவேண்டும் என்றார். இத்தனையிருந்தும் அவற்றை நுகர்தற்கு இயலாதவாறு நோய் உடம்பாக

இருந்தால் என்ன பயன்! ஆதலின் இறுதியில், நோயற்ற வாழ்வில் நான் வாழவேண்டும் என்றார். முருகனைப் பற்றிப் பாடவந்த சிதம்பர சுவாமிகள் என்பார்,

> ''நோயுற் றடராமல், நொந்துமனம் வாடாமல்,
> பாயிற் கிடவாமல், பாவியேன் — காயத்தை
> ஓர்நொடிக்குள் நீக்கியெனை ஒண்போரூர் ஐயாநின்
> சீரடிக்கீழ் வைப்பாய் தெரிந்து''

எனத் திருப்போரூர்ச் சந்நிதிமுறைத் திரட்டு எனும் நூலில் வேண்டுகின்றார்.

மந்திரம்

எக்காரணத்தினாலோ உடம்பில் நோய் வந்துவிட்டால் உடனே மருந்தின் உதவியை நாடுகின்றோம். மருந்தினால் நோய் தீராவிடில் மந்திரத்தின் உதவியை நாடுகின்றோம். மந்திரத்தினால் தீராவிடில் திரும்பவும் மருந்தைப் பயன்படுத்துகின்றோம். எப்படியாவது நலம் பெற்று வாழ வேண்டும் என்ற அவாவினாலேயே இங்ஙனமெல்லாஞ் செய்கின்றோம். பொருள் வசதி மிகுதியாகப் பெற்றவர்கள், மருந்துக்காக, மந்திரத்துக்காக நிறையச் செலவு செய்கின்றனர்; முடிவில் தாம் விரும்பியவாறு நல்ல பயனைப் பெறாது போதலும் உண்டு!

காசு, பணம் செலவின்றி, நல்ல மருந்தையும், நல்ல மந்திரத்தையும் நாம் பெறலாம்! 'எங்கே, எங்கே?' என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா? ஆம்! தமிழகத்தில் தோன்றிய அருளாளர்களாகிய நன்மருத்துவர்கள், இவ்வுலகம் உய்யும்பொருட்டு நல்மருந்தையும், நல்மந்திரத்தையும் காட்டிச் சென்றுள்ளனர்! அங்ஙனம் அவர்கள் காட்டிய வகையினைக் கீழே காண்போம்.

சிவப்பணி

சைவமும் தமிழும் தழைத்தினிதோங்கத் தோன்றிய சமயகுரவர்களில், குறிப்பிடத்தக்கவர் திருநாவுக்கரசர் ஆவர்! மறந்தரு தீநெறி மாயவும், மணிகண்டர் வாய்மை நெறியறத்தை உலகுக்கு வழங்கவுமாகத் தோன்றியவர் அவர். சைவநெறி ஏழுலகும் பாலிக்குந் தகைமையினால் தெய்வநெறிச் சிவம் பெருக்க வந்தவர், அவர். அத்தகு நல்லார்,

சைவ சமயத்தினின்றும் அமண் சமயஞ் சேர்ந்தார்; தமக்கை திலகவதியாரின் விருப்பத்திற்கேற்பச் சிவபெருமான் நாவுக்கரசருக்குச் சூலைநோய் தந்தனன். நோய் நீக்க எத்தனை வகை மருந்துகள் அருந்தியும் எவ்விதப் பயனு-மில்லை! முடிவில் தம் தமக்கையார் திருவடியில் வீழ்ந்து புலம்பினார். அப்போது, அருள் உள்ளங்கொண்ட தமக்கை-யார் தம் அருமை இளவலை அழைத்துக் கொண்டு திருவ-திகைக் கோயிலுக்குச் செல்ல விழைந்தார்; தம் தம்பியை மீண்டும் சைவனாக்க எண்ணிய அம்மையார், நாவுக்கரசருக்குத் திருநீற்றைத் திருவைந்தெழுத்து ஓதிக்கொடுத்தார்! அதைப் பெற்ற அரசருக்கு, நீண்ட நாட்களாகத் தொல்லை கொடுத்த சூலை நோய் நீங்கிப் பெருவாழ்வு வந்துவிடும் என்ற பேருணர்வு பிறந்தது. இருவருமாகக் கோயில் சென்றனர்; ஆண்டவனைப் போற்றித் துதித்தனர். திருவருள் உணர்த்தத் தமிழ்ப் பாமாலை பாடத் தொடங்கினார். நோயும் நீங்கியது. அன்று முதல் சிவப்பணி செய்யும் திருப்பணியிலீடுபடலானார் அப்பர் பெருமானார்!

''என்றபொழு தவரருளை யெதிரேற்றுக் கொண்டிறைஞ்ச
நின்றதபோ தலியாரு நின்மலன்பே ரருள்நினைந்து
சென்றுதிரு வீரட்டம் புகுவதற்குத் திருக்கயிலைக்
குன்றுடையார் திருநீற்றை அஞ்செழுத்தோ
திக்கொடுத்தார்''

''திருவாளன் திருநீறு திலகவதியா ரளிப்பப்
பெருவாழ்வு வந்ததெனப் பெருந்தகையார்
பணிந்தேற்றங்
குருவார வணிந்தமக் குற்றவிடத் துய்யுநெறி
தருவாராய்த் தம்முன்பு வந்தார்பின் தாம்வந்தார்''

எனத் தெய்வப் புலமைச் சேக்கிழார் கூறுவதனால் இவ்வுண்மை யறியலாம். இதனால், அப்பர் பெருமானுக்கு வந்துற்ற நோயைப் போக்கியவை அரு மருந்தாகிய திருநீறும் நன் மந்திரமாகிய நமச்சிவாயமுமாகும் எனத் தெளியலாம்!

'மந்திரம்' என்பதற்கு இலக்கணம் சொல்லவந்த தொல்-காப்பியர்,

''நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப''

என்றார். ''தகுதி நிறைந்த மொழியினையுடைய ஆன்றோர்-தம், தலைமைப் பாட்டினால் வெளிப்போந்த மறைமொழிகளே மந்திரம் என உரைப்பர் மேலோர்'' என்பது இந் நூற்பாவின் பொருள். இவ்விலக்கணத்திற்கேற்ப, எல்லாம் வல்ல எம்பெரு-மானது திருவருட் பேற்றைப் பெற்ற பேரருளாளர்தம் நாவின் றெழுந்த நற்றமிழ் மந்திரமே 'நமசிவாய' ஆகும்! இம் மந்திரம் செய்யும் செயல்களோ விந்தையானவை!

நமச்சிவாயவே!

நற்றமிழ் வல்ல நாவுக்கரசருக்குத் துன்பம் இழைக்கத் துணிந்த மன்னன், இறுதியில் அவரைக் ''கல்லுடன் கயிறு பிணித்துக் கடலிடைப் பாய்ச்சுக'' என்று ஆணையிட்டான். அங்ஙனமே செய்யப்பட்டது. அந்நிலையிலும் நாவரசர் நலிந்தாரல்லர்!

''எப்பரி சாயினு மாக ஏத்துவன் எந்தையை என்று
செப்பிய வண்டமிழ் தன்னாற் சிவன்அஞ் செழுத்தும்
துதிப்பாம்''

என்றே இறுமாந்து இருந்தார். கல்லிலே கட்டிக் கடலிலே அவரைத் தள்ளியபோது, அவருக்கு உறுதுணையாய் இருந்து காப்பாற்றிய நன்மந்திரம் 'நமச்சிவாய'வே ஆகும்.

''சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணை திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே!''

என்பது, அப்போது அவர் பாடிய அழகிய திருப்பதிகமாகும். நமச்சிவாய எனும் மந்திரம், நற்றுணையாக, நாவினுக்கு அருங்கலமாக, நடுக்கம் கெடுப்பதாக, நலமிகக் கொடுப்பதாக, நல்லக விளக்கமாக, நன்னெறியாக விளங்குவது. இன்னும் கூறப்புகுந்தால், பிறவி என்னும் பெரிய பிணியையே போக்க-வல்ல ஆற்றல் பெற்றது. பிறவிப் பெருங்கடலை நீந்தி, ஆண்டவனின் திருவடியாகிய கரையினை அடைதற்கு உரிய அருமந்திரமாகிய நமச்சிவாயம், நாவுக்கரசரோடு பிணிக்கப்-பட்ட கல்லை, அக் கடலினின்றும் மீட்டது வியப்பில்லையன்-றோ? நன் மந்திரத் துணையோடு நாவரசர் கரையேறினார். மந்திரத்தின் ஆற்றலை அப்போதே அனைவரும் அறியலாயினர்!

தமக்கு உறுதுணையாய் நின்ற இவ் அஞ்செழுத்தின் சீர்மையைச் செல்லுமிடமெல்லாம் சொல்லிச் செல்கின்றார் நாவரசர்!

''ஆலைப் படுகரும்பின் சாறு போல
அண்ணிக்கும் அஞ்செழுத்தின் நாமத்தான் காண்''

''ஓடினேன் ஓடிச்சென் றுருவங் காண்டலும்
நாடினேன் நாடிற்று நமச்சி வாயவே!''

''மந்திரம் நமச்சிவாய ஆகநீ (று) அணியப் பெற்றால்
வெந்தறும் வினையும் நோயும் வெவ்வழல் விறகிட்டன்றே''

''கருவாய்க் கிடந்துன் கழலே நினையுங் கருத்துடையேன்
உருவாய்த் தெரிந்துன்றன் நாமம் பயின்றேன் உனதருளால்
திருவாய் பொலியச் சிவாய நமவென்று நீறணிந்தேன்
தருவாய் சிவகதிநீ பாதிரிப் புலியூர் அரனே''

இங்ஙனம் நமச்சிவாயத்தின் மாண்பைப் பலவற்றாலும் சொல்லிச் செல்லும் நாவரசர், 'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்பதற் கேற்ப, இவ்வுலகமும் இதன் பெருமை தெரிந்து பிறவிப் பிணி நீங்கவேண்டும் என ஏங்குகின்றார். ஆதலின் இவ்வுலகத்து மக்களை நோக்கி,

''இருந்து சொல்லுவன் கேண்மின்கள் ஏழைகாள்!
அருந்தவந் தரும்அஞ் செழுத் தோதினால்
பொருந்து நோய்பிணி போகத் துரப்பதோர்
மருந்தும ஆகுவர் மன்னுமாற் பேறரே!''

எனக் கூவி அழைக்கின்றார். ''அறியாமைப் படுகுழியிலே வீழ்ந்து தடுமாறும் அறிவற்றவர்களே! யான் பெற்ற பட்டறிவி-லிருந்து இதனைக் கூறுகின்றேன் கேளுங்கள்! எந்த மருந்-தினாலும் தீராத, எந்தவித நோயினால் நீங்கள் பற்றப்-பட்டிருந்தாலும் கவலை கொள்ளவேண்டாம். அரிய மருந்து ஒன்று உண்டு; அதுவே நமச்சிவாய மந்திரம்! அதை இடை-விடாது கூறுங்கள்; ஓதுங்கள்; நோயும் பிணியும் தாமே விலகி ஓடிவிடும்! சிவபெருமான் உங்களைப் பாதுகாப்பான். இவ்வுண்மையை இப்போது உங்களிடம் சொல்லி விட்டு

எங்கோ சென்று விடுவேன் என்று எண்ணாதீர்கள். நான் இங்கு இருந்துகொண்டே சொல்லுகிறேன். என் உரை எக் காலத்தும் பொய்க்காது!'' என அறைகூவி உரைக்கின்றார் அப்பரடிகளார்!

திருநீற்றின் பெருமை

இங்ஙனம் அறுதியிட்டு உறுதியாக உரைத்தும் கேளாத மக்களைப் பார்த்து மனம் இரங்குகின்றார்; உள்ளம் உருகு கின்றார். அவ் உருக்கம் பாடலாக வெளிவருகிறது! படித்துப் பாருங்களேன்;

''திருநாமம் அஞ்செழுத்தும் செப்பா ராகில்
தீவண்ணர் திறமொருகால் பேசா ராகில்
ஒருகாலும் திருக்கோயில் சூழா ராகில்
உண்பதன்முன் மலர்பறித்திட் டுண்ணா ராகில்
அருநோய்கள் கெடவெண்ணீ றணியா ராகில்
அளியற்றார் பிறந்தவா றேதோ என்னில்
பெருநோய்கள் மிகநலியப் பெயர்த்தும் செத்தும்
பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின் றாரே!''

அப்பரடிகளைப் போலவே, ஞானத்தின் திருவுருவென வந்து தோன்றிய ஞானசம்பந்தப் பெருமானும், திருநீற்றின் பெருமையையும், திருவைந்தெழுத்தின் சிறப்பையும் உலகறியச் செய்தார்.

நோய் தீர்த்தல்

பங்கயச் செல்வியாகிய மங்கையர்க்கரசியாரின் வேண்டு-கோளுக்கிணங்க மதுரை வந்த ஞானசம்பந்தருக்கு அமணர் தீங்கு சூழ்ந்தனர். அப் பெருமான் தங்கியிருந்த திருமடத்துக்கு நெருப்பிட்டனர். உண்மையறிந்த சம்பந்தர், 'பொய்யராம் அமணர் கொளுவுஞ்சுடர், பையவே சென்று பாண்டியற் காகவே' எனப் பணித்தார். அதனால், பாண்டியனுக்குக் கடுஞ் சுரம் கண்டது. இறுதியில் சம்பந்தப் பெருமானே, அந்நோய் நீக்க வேண்டியவரானார். அப்போது,

''மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் திருவால வாயான்
திருநீறே!''

என்னும் செந்தமிழ்ப்பதிகம் பாடி, நன்மருந்தாகிய திருநீ-றளித்து. நோயைக் குணமாக்கினார். திருநீற்றின் தெய்வத் தன்மையை இதைவிட வேறெவர் கூற முடியும்? இவ்வாறே, நமச்சிவாயத்தின் சிறப்பையும் ஞானசம்பந்தர் கூறும் கூற்றைக் கேட்போம்.

''காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினு மெய்ப்பொருள் ஆவது
நாதன் நாமம் நமச்சி வாயவே!''

என்ன அழகான பாடல் பார்த்தீர்களா?

''ஒன்று கண்டீர் இவ்வுலகுக் கொருகனி
நன்று கண்டாயஅது நமச்சிவாயக் கனி
மென்று கண்டால்அது மெத்தென் றிருக்கும்
தின்று கண்டால்அது தித்திக்குந் தானே!''

எனத் திருமூலர், நமச்சிவாயத்தை நற்கனி என்றும், அது தின்னத் தின்னத் தெவிட்டாக் கனி என்றும் கூறும்போது, நம் நாவில் நீர் சுரக்கிறதல்லவா?

இரு கண்கள்

இத்துணை உயரிய தன்மைகளையெல்லாம் உளத்துட் கொண்டே மணிவாசகப் பெருந்தகையார், எம்பெருமானை வழுத்த வந்தபோது, முதற்கண்ணதாக, ''நமச்சிவாய வாழ்க! நாதன்தாள் வாழ்க!'' என வாழ்த்தலானார்! எனவே சைவ உலகுக்கு இரண்டு கண்களெனத் திகழ்வன மருந்தும் மந்திரமும்! மருந்தாகிய திருநீற்றின் நீர்மையையும், மந்திரமாகிய நமச்சிவாயத்தின் உயர்வையும் உலகறியச் செய்வது சைவப் பெருமக்களின் கடமையாகும்!

வாழ்க மருந்து! வாழ்க மந்திரம்!

# 14

# சேக்கிழார் வாய்ச்சொல்

முன்னுரை

யாப்பின் இலக்கணம் இயம்பவந்த தொல்காப்பியர்,

> ''எழுத்து முதலா ஈண்டிய அடியிற்
> குறித்த பொருளை முடிய நாட்டல்
> யாப்பென மொழிப யாப்பறி புலவர்''
>
> (தொல்.செய்.74)

என்று குறிப்பிடுவர். 'எழுத்து முதலாக அடி ஈறாகக் குறித்த பொருளை முற்றுப்பெற நிறுத்துதல் யாப்பென்று சொல்லுவர் யாப்பறி புலவர்'' என்பது இதன்பொருள். எனவே செய்யுட் செய்யுங்காலத்து எழுத்திற்கும் அவ் எழுத்தான் ஆகும் அசைக்கும், அவ் அசையான் ஆகும் சீர்க்கும், அச்சீரான் ஆகும் அடிக்கும் பொருளிருக்குமாறு பார்த்தமைத்தல் வேண்டும். தொல்காப்பியர் மொழிந்த இவ்விலக்கணத்திற்கேற்பவே நந்தமிழ்ப் புலவர்கள் நூல்களை யாத்துள்ளனர். அவர்களில் தெய்வப்புலமைச் சேக்கிழாரும் ஒருவர். அவர்தம் 'வாய்ச்சொல்'லின் மாண்பினைச் சிறிது காட்டுவது இக்கட்டுரையின் நோக்கம்.

வள்ளுவரும் கம்பரும்

'ஒழுக்கமுடையவர்கள் எங்ஙனம் பேசுவர்' என்பதற்கு விடையாக வள்ளுவர் மொழியும் வாய்மைக் குறள் இது :

> ''ஒழுக்கம் உடையார்க் கொல்லாவே தீய
> வழுக்கியும் வாயாற் சொலல்'' (குறள் 139)

''மறந்தும் தீய சொற்களைத் தம் வாயாற் சொல்லுந் தொழில்கள், ஒழுக்கம் உடையவர்க்கு முடியா'' என்று உரை கூறுவர் பரிமேலழகர். 'சொன்னான்' எனின் 'வாயினாற் சொன்னான்' என்றும், 'கண்டான்' எனின் 'கண்ணினாற் கண்டான்' என்றும் பொருள் விளங்கக் காணலாம். ஆனால் வள்ளுவப் பெருந்தகையோ 'வாயாற் சொலல்' என விதந்து கூறுவானேன்? இதற்கு அரிய விடையாக அமைகிறது பரி-

மேலழகர் உரைக் குறிப்பு : ''சொலல் எனவே அமைந்திருக்க வாயால் என வேண்டாது கூறினார், நல்ல சொற்கள் பயின்றது எனத் தாம் வேண்டியதன் சிறப்பு முடித்தற்கு!'' எனவே, வள்ளுவர் 'வாயால் என வாளா கூறினாரல்லர். ஒழுக்கமுடையவர்தம் வாய், மறந்தும் தீய சொற் கூறாது; கனவிலும் தீய சொற் கூறாது; உரை தடுமாறினும் தீயசொற் கூறாது என்பதை வற்புறுத்தற்கேயாம்! ஈண்டுத் தொல்காப்பியர் மொழிந்தவாறே 'வாயால்' எனும் ஒரு சீரே பொருள்நயமுள்ளதாக அமைந்துள்ள நுட்பம் அறியற்பாற்று.

'ஒன்றி உயர்ந்த பாலது ஆணையால்' முதன்முதல் சீதாபிராட்டியும் இராமபிரானும கண்ட காட்சியினைக் கம்பநாடர்,

'அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்'

என்பர். 'அண்ணல் நோக்கினான், அவள் நோக்கினாள்' எனவே சாலும். ஈண்டு அண்ணலும், அவளும் என 'உம்மை' கொடுத்ததன் நோக்கம் யாது? இதுகாறும் வேறு எப்பெண்ணையும் ஏறிட்டுப் பார்க்காத இராமன் இன்று சீதையை நோக்கினான் என்றும்; அவ்வாறே இதுகாறும் எந்த ஆடவரையும் நோக்காத சீதை, இன்று இராமனை நோக்கினாள் என்றும் பொருள் கொளக்கிடந்தது! செஞ்சொற் புலவர் புனையும் பாக்களில் தொல்காப்பியர் கூறியாங்கு 'எழுத்து'க்குங்கூடப் பொருள் உண்டு!

சேக்கிழார் 'வாய்ச்சொல்'

தெய்வப் புலமைச் சேக்கிழாரும், தெய்வப்புலமைத் திருவள்ளுவர் மொழிந்த குறளை உட்கொண்டே தாம் அருளிய பெரியபுராணத்தில் மறந்தும் தீய - அமங்கலமான சொற்களைச் சொல்லா மாண்பினராகக் காட்சியளிக்கின்றார். சான்றுக்கு இரண்டு காட்டலாம்.

தாண்டவம் புரியவல்ல தம்பிரானாருக் கன்பர்; அந்தணரின் மேம்பட்ட அப்பூதியடிகளார்! அவர், தம் இல்லத்திற்கு எழுந்தருளிய திருநாவுக்கரசரைக் கண்டபோது அற்றவர்கள் அருநிதியம் பெற்றாற்போல் முற்ற உளம் களிகூர்ந்தார்! அப்பர் பெருமானுக்கு வாழை மேய பொற் குருத்துக் கொண்டுவரச் சென்ற மூத்ததிருநாவுக்கரசை, வாளரா ஒன்று தீண்ட, அவனோ

விரைந்து வீடு வந்து குருத்தினை அன்னைபால் அளித்து அக்கணமே வீழ்ந்தான்! உண்மையறிந்த அன்னையும் தந்தையும் அவனைப் பாயினுட் பெய்து மூடிப் பிறமனை முன்றில் மறைத்து வைத்துவிட்டு அப்பரடிகளை அமுது செய்ய அழைத்தனர்!

உணவுண்ணச் செல்லுமுன் திருநீற்றிடுதல் சைவ நன் மரபு. ஆதலின் அப்பூதியடிகட்கும் அவர்தம் துணைவியார், பிள்ளைகட்கும் நீறு நல்கிய அப்பர் பெருமான், மூத்தபிள்ளை இல்லாமை கண்டு 'காதலர் இவர்க்கு மூத்த சேயையும் காட்டும்' என்றார். என்செய்வார் அப்பூதியார்? 'மகன் அரவு தீண்டி மாண்டான்' எனும் அமங்கலச் செய்தியை உரைத்தல் ஒல்லுமோ? ஆதலின் மிகத் தந்திரமாக,

''இப்போ திங்கவன் உதவான்!'' (பெ.புரா.அப்பூதி.32)

என்றார்!

'ஒழுக்கமுடையவர்கள் மறந்தும் தீயன சொல்லார்' எனும் வள்ளுவர் வாய்மொழிக்கேற்ப அந்தணர் அப்பூதியடிகளும் 'இறந்தான்' எனும் தீயசொல்லாற் கூறாது 'உதவான்' எனக் கூறியது எத்துணை நாகரிகம்?

அப்பூதியடிகளின் மறுமொழி கேட்ட நாவரசரோ வாளாவிருந்துவிடவில்லை! 'மெய்விரித்துரையும்' என்றார். பின் என் செய்வார் அடிகளார்? விதிர்ப்புற்று அஞ்சி விளம்பலானார். இதோ, சேக்கிழார் வாய்ச்சொல்!

''பெரியவர் அமுதுசெய்யும் பேறிது பிழைக்க என்னோ
வருவதுஎன் றுரையா ரேனும் மாதவர் வினவ வாய்மை
தெரிவுற உரைக்க வேண்டுஞ் சீலத்தால் சிந்தை நொந்து
பிரிவொடு வணங்கி மைந்தர்க் குற்றது பகர்ந்தார் அன்றே!'' (பெ பு.அப்பூதி 34)

'அரவு தீண்டி இறந்தான்' என்பதைச் சேக்கிழார், தம் வாயாற் சொல்ல விரும்பவில்லை. ஆதலினாற்றான், 'மைந்தர்க் குற்றது பகர்ந்தார்' என்று நயம்பட உரைக்கலானார்!

இவ்வாறே 'மெய்யெல்லாம் நீறுபூசி, வேணிகள் முடித்துக் கட்டிப் பொய்வேடம் பூண்ட முத்தநாதன், 'மெய்ப் பொருள் நாயனாரைக் கொன்றான்' என்று சொல்ல வந்த-விடத்தும்,

"தான்நினைந்த அப்பரிசே செய்ய" (பெ.பு.மெய்ப்)

என்று மொழியலானார் சேக்கிழார்!

முடிவுரை

'மறந்தும் தீமையாயின சொல்லாத் தண்டமிழ்ப் புலவர் சேக்கிழார்' எனும் உண்மையை இதனால் அறியமுடிகின்றது. சேக்கிழார் 'வாய்ச்சொல்', என்றும் அறிந்து இன்புறத் தகுவது; எல்லாராலும் பின்பற்றத் தகுவது!

வாழிய சேக்கிழார் திருப்பெயர்!

## 15

# தெய்வப் பாவையர்

முன்னுரை

'சைவத்தின் மேற் சமயம் வேறில்லை' என்று கூறிய நம் முன்னோர், 'மேன்மைகொள் சைவ நீதி விளங்குக உலக மெல்லாம்' என்றும் மொழிந்துள்ளனர். சைவநீதி உலகத்தில் விளங்கச் செய்த அருளாளர்களில் தெய்வப் புலமைச் சேக்கிழாரும் ஒருவர் அவர் அருளிய திருத்தொண்டர் புராணம் எனப்படும் பெரியபுராணம், சைவ நன்மக்கட்குத் திருமுறையாக - திருமறையாக விளங்குவது. அத் திருமுறையில் காட்டப்படும் 'தெய்வப் பாவையர்' பற்றிச் சிறிது விளக்குவதே இக் கட்டுரையின் நோக்கம்.

பெரியபுராணத்தில் பெண்பாலார்

சைவ நாயன்மார்கள் அறுபத்துமூவர் அவருள் அரசர் உண்டு; அந்தணர் உண்டு; ஆதிசைவர் உண்டு; வேளாளர் உண்டு; வணிகர் உண்டு; பாணர் உண்டு; பல்வகைத் தொழில் செய்வோரும் உண்டு. இவருள்ளும் ஆடவர் உண்டு; பெண்டிரும் உண்டு. அறுபத்துமூவரில்காரைக்காலம்மையார், மங்கையர்க்கரசியார், இசைஞானியார் ஆகிய இம்மூவரும் பெண்பாலாராவர். இவருள்ளும் இசைஞானியார், சுந்தரமூர்த்திநாயனாரைப் பெற்ற பெருமைக்குரியார்; சடையனாரின் அருமைத் துணைவியார். ''ஏதமில் கற்பின் வாழ்க்கை மனைஇசை ஞானியார்'' (தடுத்தாட். 3) என்பர் சேக்கிழார்! இவர்களைத் தவிர, இல்லறவாழ்க்கை மேற்கொண்டு சிவத்தொண்டில் ஈடுபட்ட நாயன்மார்களுக்கு உறுதுணை புரிந்தவர்கள், அவரவர்தம் துணைவியார் என்பதையும எண்ணல் வேண்டும். நாயன்மாரை உலகத்துக்கீந்த அவர்தம் அன்னையரும், நாயன்மாருடன்பிறப்பாளர்களும் நம்மால் வழிபடத்தக்கோராவர்.

'தெய்வப் பாவையர்'

சைவ சமயம் தழைக்கப் பாடுபட்டோர் இவ் அறுபத்துமூவராவர். அவருள்ளும் பெருமைக்குரியர் 'தேவாரம்' பாடிய

மூவராவர். இம்மூவரோடு 'திருவாசகம்' தந்தருளிய மணி வாசகரையும் சேர்த்து 'நால்வர்' என நவில்வது நம்மனோர் வழக்கு. இந் நால்வர் சொன்ன நெறியை நாடும் உலகமும் பின்பற்றவேண்டும் என்று கருதியே ''நாலுபேர் போன வழியே நாமும் போவோம்'' எனும் பழமொழியை அமைத்தனர் நம் முன்னோர்.

தேவாரம் பாடிய மூவரில், காலத்தால் முற்பட்டவர் நாவுக்கரசர். இவருக்குத் துணை நின்றவர், இவர்தம் தமக்கையார் திலகவதியார். அவ்வாறே சைவத்திற்குப் புத்துயிர் தந்த பெருமை மங்கையர்க்கரசியாருக்குண்டு. இம் மங்கையர்க்கரசியார்க்கும், திலகவதியார்க்கும் காலத்தால் முற்பட்டவர் காரைக்காலம்மையார். இம்மூவரையும் 'தெய்வப் பாவையர்' எனக் குறிப்பது சாலப் பொருத்தம்.

மூவர் தோற்றம்

''மானமிகு தருமத்தின் வழிநின்று வாய்மையினில் ஊனமில்சீர்ப் பெரு வணிகர்'' குடியில் தோன்றியவர் காரைக்காலம்மையார். தந்தை தனதத்தனார் செய்தவத்தால் காரைக்காலில் பிறந்தார். இவ் அம்மையாரின் இயற்பெயர் 'புனிதவதியார்'.

திருமுனைப்பாடி வளநாட்டில், தெய்வநெறிச் சிவம் பெருக்கும் திருவாமூரில், ஒழுக்கத்தின் மேதக்க வேளாளர் குலத்தில், குறுக்கையர் குடியில் தோன்றினார் திலகவதியார். இவர்தம் தந்தை - புகழனார்; தாய் - மாதினியார்.

வளவர் குலம் விளங்கச் சோணாட்டு மங்கையராய்த் தோன்றியவர் 'மங்கையர்க்கரசியார்'.

மூவர் வாழ்வு

புனிதவதியாருக்குக் கணவனாக வாய்த்தவன் பரமதத்தன். இவ் விருவரும் இல்லறம் நடத்திவருங்கால், ஒரு நாள், பரமதத்தன் கொடுத்த இரு மாங்கனிகளில் ஒன்றினைத் தன் இல்லத்திற்கு வந்த சிவனடியார் ஒருவர்க்கு அளித்துவிட்டார் புனிதவதியார். உண்மை தெரியாத பரமதத்தன், வீட்டில் இருந்த ஒரு பழத்தின் சுவையை உணர்ந்து, மற்றொரு பழத்தையும் கொணருமாறு பணித்தனன். அம்மையாரோ, உண்மை கூறின், தன் கணவன் ஏமாற்றமடையக்

கூடும் என்று எண்ணிப் பிறைசூடும் பெம்மானை வேண்டி-னார். அவ்வளவே! மாங்கனி ஒன்று கைக்குக் கிட்டியது. அதனைக் கணவனுக்குப் படைத்தார். ‘முன்னையதைவிட இப் பழம் தேவாமிர்தமாக உள்ளதே, இப்பழம் ஏது?’ என்று கேட்டுவிட்டான் கணவன். உண்மையைத் தெளிவுபடுத்தினார் அம்மையார். நம்ப மறுத்த பரமதத்தன், ‘இப்பழம் இறைவனே தந்தான் எனில், இதே போல மற்றொன்றும் பெற்றுத்தா’ என்றான். என்செய்வார் அம்மையார்? கண் கலங்கினார். எனினும் திண்ணிய நெஞ்சினராய்ச் சிவபெருமானை எண்ணி, ‘ஈங்கு இது அளித்து அருளீரேல் என்னுரை பொய்யாம்’ என்று மன்றாடினார். மற்றுமொரு மாங்கனி வந்தது. உண்மை தெளிந்த பரமதத்தன், ‘இவள் இனி நமக்கு மனைவி அல்லள்’ எனத் துணிந்தான். வேற்றூர் சென்றான்; ஆங்கே வேறோர் பெண்ணை மணந்தான். பின்னர்க் கணவன் இருக்குமிடம் சென்றார் அம்மையார். அவனது நிலையை நேரில் கண்டார். ‘இவ்வழ கெல்லாம் இவன்பொருட்டன்றோ? இனி, இவ் வனப்பு எற்றுக்கு?’ என்று உறுதிகொண்ட புனிதவதியார் ‘பேய் வடிவு அடியேனுக்கு வேண்டும்’ என இறைவனை வேண்டினார். தலையினால் நடந்து திருக்-கயிலை நண்ணினார் அம்மையப்பராய்க் காட்சி தந்த எம் பெருமானிடம், அம்மையார்,

> ‘‘பிறவாமை வேண்டும்; மீண்டும் பிறப்பு உண்டேல்
> உனைஎன்றும்
> மறவாமை வேண்டும்; இன்னும் வேண்டும், நான்
> மகிழ்ந்து பாடி
>
> அறவாநீ ஆடும்போதுஉன் அடியின்கீழ் இருக்க’’

வேண்டினார். இறைவனும் அவ்வாறே அருள்செய்தான்.

—*இது, காரைக்காலம்மையார் வரலாறு.*

புகழனார் - மாதினியார் இவ்விருவர்க்கும் அருமைத் திருமகளாராகத் தோன்றியவர் திலகவதியார். இவருக்கும் தானைத்தலைவர் கலிப்பகையாருக்கும் திருமணம் செய்து வைக்கப் பெற்றோரும் உற்றாரும் முடிவுசெய்தனர். திருமண நாளும் முடிவுசெய்யப்பட்டுவிட்டது. ஆனால், எதிர்பாராவித-மாகக் கலிப்பகையார், போர்க்களம் செல்லவேண்டியதாயிற்று. ‘வெற்றியுடன் திரும்பிவந்ததும் திருமணம்’ என்று சொல்லிச் சென்று விட்டார் கலிப்பகையார். அவர் திரும்பி வருவதற்குள்,

புகழனார் இறையடி எய்த, மாதினியாரும் இவ்வுலக வாழ்வை நீத்தார். விதியின் வலிமையோ பெரிது. போருக்குச் சென்ற கலிப்பகையார் போர்க்களத்திலேயே உயிர்கொடுத்துப் புகழுடம்பு எய்தினார் இதனையறிந்த திலகவதியார் "என் பெற்றோர் அவருக்கே எனைக்கொடுக்க இசைந்தனர். ஆதலின் யான் அவர்க்கே உரிமை. இனி என் உயிரும் அவர் உயிரோடு செல்லத்தக்கதே" என எண்ணித் தம் உயிரை மாய்த்துக்கொள்ள முடிவுசெய்தார். அந்நிலையில் அவர்தம் திருவடியில் வீழ்ந்து வணங்கினார் ஒருவர். அவரே, அவரின் அருமைத் தம்பி 'மருள்நீக்கியார்'. ஆம்! நற்றமிழ்வல்ல நாவுக்கரசர்தாம்! "தம்பியார் உளராக வேண்டும்" என்ற ஒரே கருணையினால், தன் உயிரைத் துறவாது வாழத் துணிந்தார். ஆனால் எந்தத் தம்பிக்காக உயிர் வாழ்ந்தாரோ அந்தத் தம்பி - மருள்நீக்கியார் சைவ சமயம் விட்டுநீங்கிப் புறச்சமயம் சார்ந்துவிட்டார். 'ஐயகோ என்செய்வேன்?' என வருந்தினார் திலகவதியார். எனினும் மனந்தளர்ந்தாரிலர். 'மருள்நீக்கியார் மீண்டும் தூய சிவ நன்னெறியே சேர்வதற்கு' நாதன்தாளை நாளும் தொழுதுவரலானார். திருவாமூரைவிட்டுத் திருவதிகை வீரட்டானம் சேர்ந்தார். தனிமடம் அமைத்து, அதிலமர்ந்து, திருக்கோயில் திருப்பணி புரிந்துவரலானார். எம்பெருமானிடம், "என் பின் வந்தவனை ஈண்டுவினைப் பரசமயக் குழிநின்றும் எடுத்தாள வேண்டும்" எனப் பன்முறையும் விண்ணப்பம் செய்தார். இறைவன் கருணைபாலித்தான்; மருள்நீக்கியார்க்குச் சூலைநோயைத் தந்தான். அந்நோயின் கொடுமை தாங்காது தமக்கையாரை நாடி வந்தார் மருள்நீக்கியார். திலகவதியார், திருநீற்றை அஞ்செழுத்து ஓதியளித்தார். நீறுபெற்ற தம்பியார், 'பெரு வாழ்வு வந்தது' எனப் பெருமையுற்றார். தம்பியை வீரட்டானத் திருக்கோயிலுக்கு அழைத்துச் சென்றார் திலகவதியார். தம்பிரான் திருவருளால், உரைத்தமிழ் மாலைகள் சாத்தும் உணர்வு பெறக் 'கூற்றாயினவாறு' எனும் திருப்பதிகம் பாடச் சூலை நோய் நீங்கியது. திலகவதியார், உழவாரப் படை எடுத்துத் தம்பி கையில் கொடுத்துத் 'திருப்பணி செய்க' என்றுகூற அன்றுமுதல் தெய்வத் திருப்பணியைச் செய்யத் தொடங்கினார். செந்தமிழின் சொல்வளப் பதிகத் தொடை பாடும் பான்மையினால் 'நாவுக்கரசர்' எனும் நன்னாமம் நிலை பெறுவதாயிற்று.

—இது, திலகவதியார் வரலாறு.

சோழநாட்டு மங்கையாம் மங்கையர்க்கரசியார் பாண்டி நாட்டு மன்னனாம் நின்றசீர் நெடுமாறனுக்கு வாழ்க்கைத் துணைவியானார். ஆனால், பாண்டியனோ, சைவ நன்னெறியில் பற்றின்றிப் பிற சமயத்துக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வந்தான். மாண்புமிகு அரசியார், மனக்கலக்கம் கொண்டார். அமைச்சர் குலச்சிறையார், சிவனெறி போற்றும் சீலர். அரசியார், அமைச்சரை வரவழைத்துப் பாண்டியநாட்டில் சைவ நன்னெறி தழைக்கும் வழி வகைகளை ஆராய்ந்தார். அப்போது தான் ஞானசம்பந்தப் பெருமான், திருமறைக்காட்டில் தங்கியுள்ள செய்தி தெரியவந்தது. உடனே, தூதுவரை அனுப்பி அவர்கள் வாயிலாகச் சம்பந்தரை மதுரைக்கு வருமாறு அழைப்பு அனுப்பினர். சம்பந்தரும் அவ் அழைப்பினை ஏற்று மதுரை வந்தார். அவரை அரசியாரும் அமைச்சரும் வரவேற்றனர்.

> ''சென்றகா லத்தின் பழுதிலாத் திறமும் இனிஎதிர் காலத்தின் சிறப்பும்
> இன்றெழுந் தருளப் பெற்றபே றிதனால் எற்றைக்கும் திருவருள் உடையேம்;
> நன்றியில் நெறியில் அழுந்திய நாடும் நற்றமிழ் வேந்தனும் உய்ந்து
> வென்றிகொள் திருநீற் றொளியினில் விளங்கும் மேன்மையும் படைத்தனம்'
> (திருத். புரா. 6:659)

என்றனர். சம்பந்தர் தங்கிய திருமடத்துக்குப் புறச்சமயத்தார் நெருப்பிட்டனர். 'பையவே சென்று பாண்டியற்கு ஆக' என மொழிந்தார் சம்பந்தர். நின்றசீர் நெடுமாறன் வெப்பு நோயால் வெம்பினான். அரசியாரின் விருப்பத்திற் கிணங்கச் சம்பந்தர், பாண்டியனின் அருகே வந்தார்; 'மந்திரமாவது நீறு' எனும் மந்திரப் பதிகம் பாடித் திருவாளன் நீறுகொண்டு திருக்கையால் தடவினார். அவனது வெப்புநோய் நீங்கிற்று; பொய்கைபோல் குளிர்ந்தது அவன் மேனி. மீண்டும் பாண்டிநாட்டுப் பதிகள் எல்லாம் மங்கலம் பெறுவதாயிற்று.

—இது, மங்கையர்க்கரசியாரின் வரலாறு.

மூவர் வாழ்வு-ஒற்றுமையில் வேற்றுமை

காரைக்காலம்மையார், திலகவதியார், மங்கையர்க்கரசியார் இம் மூவரும், கணவனைத் தெய்வமாக வழிபட்டவர்கள் என்பதில் வேறுபாடில்லை. மண வாழ்வு அமையாம-

லிருந்தும், மணம் பேசிய நாளிலிருந்தே கலிப்பகையாரைக் கணவனாக எண்ணிப் போற்றிய வாழ்வு - திலகவதியாருக்குரியதாயிற்று. காரைக்காலம்மையாருக்கோ கணவன் இருந்தும் அவனோடு நெடிது வாழும் வாய்ப்புக் கிட்டாதொழிந்தது. கணவனோடு சேர்ந்து வாழ்ந்தும், அவன் புறச்சமயச் சார்பினனாயிருந்தான் என்ற கவலை, மங்கையர்க்கரசியாருக்குரியதாயிற்று.

கணவன், போர்க்களத்தில் புகழுடம்பு எய்தினான் என்றறிந்தும், உயிர் துறக்கத் துணிந்தார் திலகவதியார். கணவன், வேறொருத்தியை மணந்தான் என்றறிந்ததும், தன் அழகைப் பாழாக்கிப் பேயுருவம் பெற்றார் காரைக்காலம்மையார். கணவன், புறச்சமயச் சார்பினன் என்று அறிந்தும், அதற்காக அஞ்சாமல் அவனை மீண்டும் சைவ நன்னெறிக்குக் கொண்டு வந்தார் மங்கையர்க்கரசியார்.

மூவர் நோக்கம்

காரைக்காலம்மையாருக்குத் தன்னைப் பற்றிய சிந்தனை மிகுதி. திலகவதியாருக்குத் தன் தம்பியைப் பற்றிய சிந்தனை மிகுதி மங்கையர்க்கரசியாருக்குத் தன் கணவனைப் பற்றிய சிந்தனை மிகுதி. எனினும் இம் மூவரும் சிவநெறியே மேலாம் எனக் கொண்டொழுகியவர்கள்.

மூவகை நிலையில் மூவர்

மனித வாழ்விழ் மூக்கூறுகள் உண்டு. அவை : இன்பம், துன்பம், இன்பதுன்பம். ஒருசிலர்க்குப் பிறந்தது முதல் இறுதிவரை இன்பவாழ்வு கிட்டும்; வேறுசிலர்க்குப் பிறந்தது முதல் இறுதிவரை துன்ப வாழ்வே அமையும். மற்றுஞ் சிலர்க்கு ஒருபாதி இன்பம்; ஒருபாதி துன்பமாக அமையும். தேவாரம் பாடிய மூவரில், நெடிதுகாலம் வாழ்ந்து, எத்துணைத் துன்பங்கள் உண்டோ அத்துணைத் துன்பங்களும் நுகர்ந்தவர் அப்பர் பெருமான். அவர்தம் தமக்கையாரோ, இளம்வயதிலும் இன்பம் நுகராது, இறுதிவரை துன்பத்திலேயே சிக்கி உழன்றவர்கள். அந்தத் துன்பத்திலேயும், இறைவனுக்குத் தொண்டுசெய்து அதனால் மனஅமைதி பெற்றவர் திலகவதியார். அரச குடும்பத்தில் பிறந்து எல்லா இன்பங்களையும் நுகர்ந்தவர் மங்கையர்க்கரசியார். வாழ்க்கையில் ஒருபாதி இன்பம், ஒருபாதி துன்பம் எனும் நிலையில் வாழ்ந்தவர் காரைக்காலம்மையார்.

### அவரவர் நிலையில் மூவர் தொண்டு

எளிய குடும்பத்தில் பிறந்தாலும். இன்னல் வந்துற்ற போதும் தொண்டு செய்தவர் திலகவதியார். செல்வக் குடும்பத்திற் பிறந்தாலும் இறைவனை வழிபட்டு அவனருளைப் பெற்றவர் காரைக்காலம்மையார். அரசகுலத்திற் பிறந்தாலும் அதனால் செருக்குறாது சிவநெறி பெருக்கும் சீலத்தால் மேம்பட்டவர் மங்கையர்க்கரசியார்.

### மூவரால் விளைந்த நன்மைகள்

காரைக்காலம்மையார் பாடிய அற்புதத் திருவந்தாதி, திரு இரட்டை மணி மாலை, மூத்த திருப்பதிகம் முதலாயின, சைவப் பெருமக்கட்குக் கிடைத்த கருவூலங்கள். திலகவதியாரால், சைவ உலகுக்கு - தமிழ் உலகுக்குக் கிடைத்த அருங்கொடை - திருநாவுக்கரசரும் அவரருளிய தேவாரப் பாக்களும். மங்கையர்க்கரசியரால் சைவ உலகிற்குக் கிடைத்த பெருங்கொடை - பாண்டிய நாட்டில் சைவ மறுமலர்ச்சி.

### மூவர் பெற்ற சிறப்பு

சிவபெருமானுக்குத் திருத்தொண்டு செய்த பெருமை, திலகவதியாருக்கு உண்டு. சிவபெருமானுக்குப் பாமாலை சூட்டிப் பரவிய பெருமை, காரைக்காலம்மையாருக்குண்டு. ''மங்கையர்க்கரசி வளவர்கோன் பாவை வரிவளைக்கைம் மடமானி, பங்கயச்செல்வி பாண்டிமா தேவி'' என ஞான சம்பந்தப் பெருமானால் பாடப்பெற்ற பெருஞ்சிறப்பு, மங்கையர்க்கரசியாருக்குண்டு.

### சேக்கிழார் போற்றும் மூவர்

இம்மூவரையும் தெய்வச் சேக்கிழார் மனங்கனிந்து போற்றுவர். ''சிவமொன்று நெறிநின்ற திலகவதியார்'' எனத் திலகவதியாரையும், ''வாச மலர்த் திருஅனையார் காரைக்காலம்மையார்'' எனக் காரைக்காலம்மையாரையும்,

> ''சைவநன் மரபில் வந்த தடமயில் மடமென் சாயல்
> பைவளர் அரவே ரல்குல் பாண்டிமா தேவி''
>
> (திருத் 6:642)

> ''மங்கையர்க்குத் தனியரசி எங்கள் தெய்வம்
> வளவர்திருக் குலக்கொழுந்து வளைக்கை மானி

செங்கமலத் திருமடந்தை கன்னிநாடாள்
தென்னர்குலப் பழிதீர்த்த தெய்வப் பாவை
எங்கள்பிரான் சண்பையர்கோன் அருளினாலே
இத்தமிழ்நா டுற்றஇடர் நீக்கித் தங்கள்
பொங்கொளிவெண் டிருநீறு பரப்பி னாரைப்
போற்றுவார் கழல்எம்மால் போற்ற லாமே''
(திருத் மங்கை. 1)

என மங்கையர்க்கரசியாரையும் பராவுதல் காணலாம்.

மூவர் வாழ்வும் சைவப்பெருமக்கள் கடமையும்

காரைக்காலம்மையார், திலகவதியார், மங்கையர்க்கரசி-யார் ஆகிய இம்மூவரும், தத்தம் நிலையில் இருந்துகொண்டே சிவத்தொண்டு புரிந்தவர். ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதத்தில் உயர்ந்தவரே. எனினும் இம்மூவரில் நம்மால் மிக மிக இரக்கப்படத் தக்கவர் திலகவதியார் என்று எண்ணுங்-கால் எவர் உள்ளந்தான் இளகாது?

நாவுக்கரசரின் நற்றமிழ்ப் பெயர் சொல்லியே பேரின்பப் பெரு வாழ்வு பெற்றார் ஒருவர். அவரே அப்பூதியடிகள். அத்-தகைய நாவரசர் பெருமையை நம்மால் சொல்ல இயலுமா? அப் பெருமானை இவ்வுலகிற்குத் தந்தவர் திலகவதியாரெனும் தமக்கையாரன்றோ? நாவரசருக்கு இழைக்கப்பட்ட கொடுமை-கள் ஏட்டில் எழுத ஒல்லுமோ? முதற்கண் அவரை நீற்றறையில் இட்டனர். ஏழுநாள் கிடந்தார். 'மாசில் வீணை' பாடி உயிர் பெற்றார். அடுத்து, நஞ்சுகலந்த உணவை உண்பிக்கச் செய்தனர் அந்த நஞ்சோ சிவனருளால் அமுதாயிற்று அதிலும் உயிர் பெற்றார். பின்னர் மதங்கொண்ட யானைக்காலால் இடறச் செய்தனர்; 'சுண்ணவெண் சந்தனச் சாந்து' எனும் செந்தமிழ்ப் பதிகம் பாடி உயிர்பெற்றார். இறுதியாகக் கல்லிலே இறுகக் கட்டிக் கடலில் தள்ளினர். 'சொற்றுணை வேதியன்' எனும் சொற்றமிழ்ப் பதிகம் பாடி உயிர்பிழைத்தார். இவ்வாறு நான்குமுறை உயிர்பெற்றெழுந்த நாவரசரைப் போல இவ்வுலகில் எவரேனும் உண்டோ? அதனால்தான் சைவ உலகு அவரைத் தெய்வமாக எண்ணித் தொழுகிறது. இப்பேராளரைத் தந்த திலகவதியாரை மறக்கமுடியுமோ? (ஆனால், யாது காரணத்தாலோ சைவ நாயன்மார் அறுபத்துமூவரில் திலகவதி-யாரைச் சேர்க்கவில்லை. இஃது ஆராயத் தகுவது!)

தெய்வச் சேக்கிழார், 'தென்னர்குலப் பழிதீர்த்த தெய்வப் பாவை' என மங்கையர்க்கரசியாரைக் குறிப்பிடுவர். எனினும் காரைக்காலம்மையார், திலகவதியார் ஆகிய இவர்களையும் தெய்வப் பாவையர் எனல் பொருத்தமே.

சைவப் பெருமக்கள் செய்யத்தகுவன இவை : (1) நாளும் இறைவழிபாட்டின் போது சைவந் தழைக்கப் பாடுபட்ட இத் தெய்வப்பாவையர் மூவரையும் மனத்தில் எண்ணி வழிபடல் நன்று. (2) அக்காலத்தே திலகவதியார் திருமடம் அமைத்துச் சிவத்தொண்டு புரிந்தாரன்றோ? இக்காலத்தே, சைவப் பெருமக்களில், பெண்டிர் பலர், வாழ வழியற்றுத் தவிக்கின்றனர். கணவனை இழந்தோர், கைம்மை நோன்பு நோற்றோர், மக்கட்பேறின்றி வாழ வழியற்றோர், திருமணம் ஆனபின்பும் கணவனோடு வாழும் பேறில்லாதோர், கணவனால் கைவிடப்பட்டோர் - இப்படிப் பலவகையாக இருக்கக் காணலாம் இவர்கட்கெல்லாம் வாழ வழிசெய்தல் சைவ நன்மக்களின் கடமை. 'திலகவதியார் திருமடம்' எனத் திக்கற்றோர் இல்லம் அமைத்து, இத்தகு பெண்டிர்க்குப் புகலிடம் அளிக்கலாம். (3) நாவுக்கரசர். நம்மவர்க்காகப் பல கொடுமைகளுக்கு ஆட்பட்டுச் சிவபெருமான் அருளால் நான்குமுறை உயிர் பெற்றவர். அந்தத் தெய்வத் திருநாளை ஆண்டுதோறும் சிறப்பாகக் கொண்டாட வேண்டும். அந்த நாட்களிலாவது அவ் அருளாளரை எண்ணி உண்ணா நோன்பிருந்து, கூட்டு வழிபாடு மேற்கொள்ளலாம்.

முடிவுரை

இத் 'தெய்வப் பாவையர்' வாழ்வு, நம்மனோர்க்கு வழிகாட்டி. எத்திறம் ஆயினும், எந்நிலை ஆயினும், தத்தம் நிலையில் சிவத்தொண்டு செய்தால், அவனருள் கிட்டும்; பிறவாப் பெருநெறியும் பெறலாம்.

வாழ்க தெய்வப் பாவையர் !

## 16

# குமரகுருபரர் கற்பனைத் திறன்

தேவஉலகத்தையும் தொடுமளவிற்கு உயர்ந்த மாடங்கள்; அவை பசும் பொன்னாலானவை; பல்கோடி நிறைந்த செல்வப் பெருக்கமைந்தவை. அந்த மாடங்களின் மேலே நிலா முற்றம்! அஃது, உயர்ந்த பளிங்கினால் செய்யப்பெற்றது. அம் மாடத்தின் உச்சியறை மரகதத்தால் ஆனது!

தேவஉலகத்துக் காமதேனுவுக்கு ஒரே பசி! எங்கேனும் புல்கிடைக்காதா என்று அலைந்தது! பளிங்குநிலா முற்றம், கங்கைக்கரைபோல் தோன்றியது அதற்கு! அம்முற்றத்தே அமைந்திருந்த மரகத ஒளி, அக்கரை மீது முளைத்த பசும்புல்லாகத் தோன்றியது. ஒரே கொண்டாட்டம்! எனவே தன் சிவந்த நாவை நீட்டி வளைத்துத் தின்ன ஆசை கொண்டது! எப்படியிருக்கிறது இக் கற்பனை!

> ''... ...ஓங்கும் பளிக்கு நிலாமுற்றத்து
> உயர் குளிகையின் மரகதத்தின்
> ஒளிகால் வீசத் தெளிவிசும்பில்
> பல்கும் சுரபி தரங்கநெடும்
> பாகீ ரதியின் கரைக்கு இளைத்த
> பசும்புல் எனச்செந் நாவளைக்கும்!''

—இப்படிக் கற்பனையாகப் பாடியவர் யார் என்று கேட்கத் தோன்றுகின்றதல்லவா? ஆம்! அவரே குமரன் அருள்பெற்ற குழந்தைக் கவிஞர்-ஐந்திலக் கணமும் தோய்ந்த பழுத்த தமிழ்ப் புலமை பெற்ற குமரகுருபர அடிகளார்!

தமிழில் உள்ள தொண்ணூற்றாறு சிற்றிலக்கியங்களில் 'பிள்ளைத் தமிழ்' என்பதுவும் ஒன்று! கடவுளையோ, கடவுள் அருள்பெற்ற அடியாரையோ, மக்களில் மாண்புடையோரையோ, சிறு குழந்தையாகக் கருதிப் பாடப்படுவதே பிள்ளைத் தமிழின் இலக்கணம். இப்பிள்ளைத் தமிழும் இருவகைப்படும் (1) ஆண்பாற் பிள்ளைத் தமிழ் (2) பெண்பாற் பிள்ளைத்தமிழ். இப் பிள்ளைத்தமிழ், பொதுவாகப் பத்துப் பருவங்களால்,

பருவம் ஒன்றுக்குப் பாக்கள் பத்து வீதம் பாடப்படுதல் மரபு. குழந்தையின் 3ஆம் திங்கள் முதல் 21ஆம் திங்கள் முடியப் பருவம் ஒன்றுக்கு 2 திங்களாகக் கணக்கிட்டு அஃதாவது 3, 5, 7, 9, 11, 13, 15, 17, 19, 21 எனக்கொண்டு காப்புப் பருவம் முதல் பாடப் பெறல் வேண்டும். எனினும் ஆண் குழந்தைக்கு 3, 5,7 ஆண்டும் அருகி 12 ஆண்டும் சிறப்பிக்கப்பெறுதலும் உண்டு. பெண் குழந்தைக்குக் காமன் நோன்பு குறிக்கப்படின் 12 ஆண்டு விரிக்கப்படும். ஆணுக்கு 16 ஆண்டும், பெண்ணுக்குப் பூப்புப் பருவமும் எல்லையாதலும் உண்டு! ஆண்பாற் பிள்ளைத்தமிழாயின், காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை அல்லது வருகை, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர் எனப் பத்துப் பருவங்கள் அமையும்; பெண்பாற் பிள்ளைத்தமிழாயின் இறுதிப்பருவம் மூன்றுக்குப் பதிலாகக் கழங்கு, அம்மானை, ஊசல் இடம்பெறும். *

> ''மூன்றுமுதல் இருபத்தொரு திங்கள் முடிவளவாய்த்
> தோன்றும் நிலைபத்தும் சொல்லுவர் தோகையர் தங்களுக்கும்
> ஆன்ற புகழ்ச்சிக்கும் அவ்வகையாம் என்பர் ஐந்து ஏழுன
> ஏன்ற நல்லியாண்டின் அகவரை தானும் இயம்பு-வரே!''

என்று. இப்பிள்ளைத்தமிழின் இலக்கணத்தை நவநீதப்பாட்டி-யல் எடுத்துரைக்கும்.

இன்று. 'வைத்தீசுவரன் கோவில்' என்று அழைக்கப்படும் 'புள்ளிருக்கும் வேளூரி'ல் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள முருகப் பெருமான் மீது பாடப்பெற்றது 'முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்' ஆகும். இதனை 'ஆண்பாற் பிள்ளைத்தமிழ்' எனலாம். 'முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்' எனும் இந்நூலுக்கு 'முத்தையன் பிள்ளைத்தமிழ்', 'புள்ளிருக்கு வேளூர்ச் சேனாபதிப் பெருமாள் பிள்ளைத்தமிழ்', 'புள்ளிருக்குவேளூர்க் குமாரதேவர் பிள்ளைக்கவி' என்னும் வேறு பெயர்களும் உண்டு என்பர் தமிழ்த் தாத்தா உ.வே. சாமிநாத ஐயர்! இந்நூலில் காப்புப் பருவத்திற்கு முன், 'விநாயகக் கடவுள் துதி'யாக ஒரு பாடல் உண்டு. இதனையும் கணக்கிட்டால் மொத்தம் 101 பாடல்களாகும். இவற்றில், பருவம் ஒவ்வொன்றிலும் முதலில்

---

* 'பிள்ளைத் தமிழ் இலக்கணம்' முந்திய கட்டுரைகளிலும் இடம்பெற்றுள்ளது.

அமைந்த ஐந்தைந்து பாடல்களாக 50 பாடல்களில் மட்டும் 'குமரகுருபரர் கற்பனைத் திறன்' எங்ஙனம் வெளிப்படுகிறது என்பதைக் காண்போம்!

குழந்தை ஒரு காலை மடக்கி, ஒரு காலை நீட்டி. இரு கைகளையும் நிலத்தில் ஊன்றித் தலை நிமிர்ந்து, முகம் அசைய ஆடும் பருவம் செங்கீரைப் பருவம். இஃது ஐந்தாம் திங்களில் நடைபெறும். இதில் வரும் ஓர் அழகான கற்பனைக் காட்சி :

புள்ளிருக்கு வேளூரில் வீற்றிருக்கும் முருகப்பெருமான் எளிமையானவனா? கழகந்தொறும் கொத்து முத்தமிழ் மொய்த்த கந்தபுரி முத்துக்குமரன் - பூட்டிய சிறைவிடுத்து அமரர் குறை முடித்து உதவும் சேனாதிபதிப் பெருமான் - சூர்ப்பெயர் முதுபழம் பகையை அற எறிந்து அவுணர் முதல் தடிந்த தனி வில்லி - வேதபுரி கந்தபுரி புள்ளூர் எனப் பொலியும் வேளூரன் - காளையைக் கொடியாக உயர்த்திட்ட தம் தந்தையாகிய சிவபெருமானுக்கும் தம் தாயாகிய உமாதேவிக்கும் அருமருந்தாகி நின்றவன் - பிரமன் முதலான மூவர்களும் அடித்தொண்டு செய்யுமளவிற்கு மேலானவன் - இத்தகைய உயர்ந்தவன், இப்போது என்ன ஆனான் தெரியுமா?

இளம்பிறை போன்ற நெற்றியையுடையவள் - குறவர் குலத்திலே பிறந்தவள் - அவளருகே நின்றான் முருகன்! அவளின் குறிப்பினை உணர்ந்தான். முத்தமிழால் வைதாரையும் வாழவைக்கும் அருளாளன், தன் வாய்திறந்து, அவள்பால் 'உன் குற்றேவல் செய்யக் காத்துக் கிடக்கின்றேன்! உன் கடைக்கண்ணாற் சாடை காட்டு போதும்' என்று குறையிரந்தான்; அம்மட்டோ? அவளின் கொவ்வைக் கனி போன்ற வாயினின்றும் வெளிவரும் தேன் சுரக்கும் சொற்களைக் கேட்பதற்கு வாயூறி நின்றானாம்! குமரகுருபரரின் கற்பனையை என்னென்பது? இதோ கவிஞர் வாக்கு!

''மீனேறு குண்டகழி தீவாய் மடுத்ததினி
வில்லியா ரிளவ லோடும்
விதிமுறை வணங்கச் சடாயுபுரி யிற்கருணை
வெள்ளம்என வீற்றிருக்கும்
ஆனேறு உயர்த்திட்ட ஐயற்கும் அம்மைக்கும்
அருமருந் தாகிநின்ற

ஆதிப் பிரானென்று மும்முதற் கடவுளும்
அடித்தொழும்பு ஆற்ற. மற்றக்
கூனேறு மதிநுதல் தெய்வக் குறப்பெண்
குறிப்பறிந் தருகணைந்துன்
குற்றேவல் செய்யக் கடைக்கண் பணிக்கெனக்
குறையிரந்து அவள்தொண்டைவாய்த்
தேனூறு கிளவிக்கு வாயூறி நின்றவன்
செங்கீரை யாடியருளே!
செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள!
செங்கீரை யாடியருளே!'' (செங்.5)

நாவசைத்துப் பாடும் பாட்டுத் 'தாலாட்டு' எனப்படும். குழந்தையின் 7ஆம் திங்களில் நிகழ்வதாகப் பாடப்படுவது 'தாலப்பருவம்'. இப் பருவத்தில் வரும் பாடல்கள் பலவும் கற்பனை நயம் செறிந்தவை. நாம் முதலில் கூறிய 'ஓங்கும் பளிக்கு நிலா முற்றத்து' எனும் அடிகள் இத் தாலப் பருவத்தில் வந்தவையே. இப் பருவத்தில் மற்றொரு காட்சி:

கந்தபுரியில், செம்பொன்னாற் செய்யப்பட்ட மேன்மாடங்கள் மிக்குள்ளன. ஆங்கே, பருவம் பெறாப் பாவையர்! ஆயினும் அவர்கள் கண்கள்கூடப் பார்ப்போர் வேறாயினும் போர் செய்யும் வன்மை படைத்தவை! அவர்களின் கூந்தலோ, மிக அடர்ந்தும் நீண்டும் உள்ளன. அதற்கு அகிற்புகை ஊட்டிப் புலர்த்துகின்றனர்! உயர்ந்த மாடங்கள் மலைபோல் காட்சியளிக்க, அச் சிறுமியரின் கூந்தற்காடு, கரிய மேகம் போல் தோன்ற, அதுகண்டு மயில்கள் ஆடத் தொடங்கி விட்டன! அதுமட்டுமா? அச் சிறுமியர் காட்டும் புன்னகையை 'நிலவு' எனக் கருதிச் சகோரம் எனும் பறவை, அதனை அருந்த விரைந்ததாம்!

''தீற்றும் சுதைவெண் ணிலவுஎறிப்பத்
திரண்மா மணிகள் வெயில்விரிக்கும்
செம்பொன் தலத்துப் பேரமர்க்கண்
சிறியார் நறிய அகிற்புகையிட்டு
ஆற்றும் குழற்காட் டினைப்புயலென்று
ஆட மயில்கண்டு அம்பவளத்து
அரும்பு நகையைச் சகோரப்புள்
அருந்த விரிந்த முழுநகைவிண்டு

ஊற்று நிலவுக்கு இந்துசிலை
ஒளிர்மா ளிகையும் சூளிகையும்
உருகிப் பெருகும் கலுழிவெள்ளம்
உவரோ டுவரிக் கடற்புலவு
மாற்றும் கடவுட் கந்தபுரி
வாழ்வே தாலோ தாலேலோ
மலையான் வயிறு வாய்த்தமுழு
மணியே தாலோ தாலேலோ!'' (தால. 3)

என்கின்றார் அடிகளார்!

கந்தபுரியில் ஆழ்ந்து அகன்ற அகழி! ஆங்கே முதலைகள் சஞ்சரிக்கும்! வானத்தே தவழும் வெண்ணிற மேகங்கள், இவ் அகழியைப் பெருங்கடல் என்று கருதி, நீருண்ணக் கீழிறங்கும். அகழியருகே நின்ற ஓர் ஆண் யானை, அம் மேகத்தைத் தனக்குரிய பெண் யானை என்று கருதிப் பிளிறத் தொடங்கிற்று! அவ் ஓசை கேட்ட மேகமோ அஞ்சி, அகழியை அடுத்துள்ள உயர்ந்த மதிலைச் 'சக்கரவாளகிரி' என எண்ணி, அதன்மீது விரைவாக ஏறத் தொடங்கிற்றாம்!

''கிளைக்கும் சகரர் தொட்டபெரும்
கிடங்குஎன்று இடங்கர் மாஇயங்கும்
கீழ்நீர் அழுவக் குண்டுஅகழிக்
கெழும் புனல்தெண் டிரைபேய்ந்து
திளைக்கும் கமம்சூல் நெடும்புயலைச்
சிறுகண் பெருங்கைப் பகடுஎன்றுஓர்
செங்கண் களிறு பிளிற, நிமிர்
திகிரி கிரிஎன்று இவர்ந்துஉடலம்
இளைக்கும் படிவிண் தொடநிவந்த
எழில்பொன் புரிசை!'' (தால. 4)

எனும் தாலப்பருவ அடிகளில் இக் கற்பனை அமைந்து கற்பார்க்குக் களி பேருவகை தருகின்றது!

தேவேந்திரனின் திருவோலக்க மண்டபம்! தோகையை விரித்தாடும் மயில் போல, மயிர்ச் சாந்து அணிந்த கரிய கூந்தலையுடைய இளம் அரம்பையர்கள் நடனமாடிக் கொண்டிருக்கின்றனர். காலமோ, இளவேனிற் பருவம். ஆடிய ஆட்டத்தால் நீர்வேட்கை கொண்டு ஆட்டத்தை நிறுத்திவிட்டனர். புள்ளிருக்கும் வேளூர்ச் சோலைகளோ, தேவேந்திர உலகத்தைத் தொடுமளவிற்கு உயர்ந்தவை. அச் சோலைகளில் நீண்டு

உயர்ந்த தென்னை மரங்கள், ஆட்டமாடும் அரம்பையரின் மெலிவைக் கண்டு, 'ஐயோ பாவம் இப் பாவையர்' என்று இரங்கித் தாம் தாறுகளோடு செவ்விள நீரினைத் தந்தனவாம்! சோலையில் உள்ள கமுகு மரங்களோ, மேகத்தின் முகத்தைத் துடைத்துப் பழுத்த காயாகிய பவளத்தோடு, ஒளியுள்ள முத்துக்களை விரித்துப் பாளையாம் சாமரங்களை வீசி அரம்பையர்களைப்பைப் போக்கினவாம்! எத்துணை உயர்ந்த கற்பனை பார்த்தீர்களா?

''சோலைப் புறம்முப் புடைக்கனிகள்
தூக்கும் முடத்தெங் கு இமையவர்தம்
தோன்றல் திருவோ லக்கத்துத்
தோகை மயிலின் நடம்குயிற்றும்
ஏலக் கருங்கொந் தளஅகத்து
இளமா தருக்கு முதிர்வேனில்
இளைப்பாற் றுதற்குத் தாற்றொடும்செவ்
விளநீர் கொடுப்ப, ஈற்றுஉளைந்த
காலப் புயலின் முகம்துடைக்கும்
கமுகு பழுக்காய்ப் பவழமுடன்
கதிர்முத் திட்டுச் செழும்பாளைக்
கற்றைக் கவரி புடையிரட்டும்
மாலைப் பழனப் பருதிபுரி
வாழ்வே தாலோ தாலேலோ!
மலையான் வயிறு வாய்த்தமுழு
மணியே தாலே தாலேலோ!'' (தால. 5)

பிள்ளைத்தமிழின் ஆறாவது பகுதி 'வருகைப் பருவம்' ஆகும். நடக்கும பருவக் குழந்தையைத் தம்பால் 'நடந்து வருக' எனப் பெற்றோர் வேண்டுவதாகப் புனையப்படுவது இது. 13ஆம் திங்களில் நிகழ்வது. இதில் ஒரு காட்சி :

சிறு குழந்தைகள் செய்கின்ற சேட்டைகளை நாளும் நாம் கண்டு வருகின்றோம். ''செம்பொற் கருங்கழல் அரிக்குரற் கிண்கிணி சிலம்பொடு கலின் கலின் எனத். திருவரையில் அரைமணி கிணின் கிணின் என'' ஒலிக்கும்படி நடந்துவரும் முருகப்பெருமான் ஆடும் விளையாடல்கள் வியப்பானவை!

அவன், தன் அரையிலே வெண்மைப் பட்டாடை உடுத்தியிருக்கின்றான். மழலைமொழி பேசும் இளமைக் கனிவாயினின்று தேன் போலும் இனிய எச்சில் ஒழுகுகிறது;

அஃது அவனது வெள்ளாடையை நனைத்து விடுகிறது. தன் அன்னையாம் பார்வதியின் அழகிய வயிற்றிலே தாவிக் குதித்து ஏறுகிறான்; அவள் அருகே வீற்றிருக்கும் தந்தையாம் சிவ பெருமானின் மார்பிலே குரவைக் கூத்து ஆடுகிறான்; அவனது ஒருகையிலே உள்ள 'துடி' எனும் உடுக்கையைத் தட்டுகிறான். அது, சிறு பறைபோல் முழங்குகிறது. சிவபெருமானின் மற்றொரு கரத்திலே நெருப்பு உண்டல்லவா? அவனின் தலைமீது இருக்கும் கங்கையின் நீரை மொண்டு, அந்த நெருப்பை அவித்து விடுகிறான்! சிவனின் தலையிலே உள்ள இளம்பிறையைக் கையிலே பிடுங்கி, அவனின் கழுத்திலே சுற்றியிருக்கும் பாம்பின் வாயிலில் செறிக்கிறான். இறைவனின் மற்றொரு கரத்திலே மான்கன்று உள்ளதன்றோ? அக்கன்றின் பசிக்கு, அவன் தலைமீதுள்ள அறுகம்புல்லைக் கொடுத்து உண்பிக்கின்றான்! தந்தையின் அழகான சிவந்த மேனியில் மிதித்து விளையாடுகிறான்; அதனால், அம்மேனியின்கண் உள்ள திருவெண்ணீறு, புழுதியாகக் கிளம்புகிறது. அப்புழுதி போக்க நீராட வேண்டுமே. என் செய்வது? தந்தையின் சடைக்காட்டில் உள்ள கங்கை நீரில், திருக்கண்கள் சிவக்கச் சிவக்க முங்கி முங்கிக் குளிக்கிறான்! இவ்வாறெல்லாம் சேட்டை செய்கிறானே என்று சிவனும் உமையும் சினந்தார்களா? இல்லை! இல்லை! மாறாகப் பெருமகிழ்வு கொண்டார்கள்! இங்ஙனம் சிறுகுறும்பு செய்யும் செவ்வேளை நோக்கி 'வருக வருகவே?' என வாயார அழைக்கின்றார் குமரகுருபர அடிகளார்! இதோ இனிய தமிழ்ப் பாட்டு :

''மழவுமுதிர் கனிவாய்ப் பசுந்தேறல் வெண்டுகில்
மடித்தல நனைப்ப அம்மை
மணிவயிறு குளிரத் தவழ்ந்தேறி எம்பிரான்
மார்பினில் குரவை ஆடி
முழவுமுதிர் துடியினில் சிறுபறை முழக்கிஅனல்
மோலிநீர் பெய்து, அவித்து
முளைமதியை நெளிஅரவின் வாய்மடுத்து
இளமானின்
முதுபசிக்கு அறுகு அருத்தி
விழவுமுதிர் செம்மேனி வெண்ணீறு தூள்எழ
மிகப்புழுதி யாட்டுஅயர்ந்து
விரிசடைக் காட்டினின் திருவிழிகள் சேப்ப,முழு
வெள்ளநீர்த் துளையம் ஆடிக்

குழவுமுதிர் செவ்விப் பெருங்களி வரச்சிறு
குறும்புசெய் தவன்வருகவே!
குரவுகமழ் தருகந்த புரியிலருள் குடிகொண்ட
குமரகுரு பரன்வருகவே!'' (வருகை 2)

வானத்தே உள்ள நிலவைக் குழந்தையுடன் விளையாடு தற்குச் செவிலித் தாயர் முதலியோர் அழைத்தல் 'அம்புலிப் பருவம்' ஆகும். இது 15ஆம் திங்களில் நிகழ்வது. நிலவை அழைக்குங்கால் சாம, பேத, தான, தண்டம் எனும் நால் வகை உபாயங்களைப் பயன்படுத்துவர். குழந்தையையும் நிலவையும் சமமாகக் கூறுதல் 'சாமம்'; நிலவைவிடக் குழந்தை உயர்ந்தது என வேறுபடுத்திக் கூறுதல் 'பேதம்'; குழந்தையுடன் விளையாடினால் நிலவுக்குக் கிடைக்கும் நன்மைகளைக் கூறுதல் 'தானம்'; வாராதிருந்தால் நிலவுக்குக் கிடைக்கும் தண்டனைகளைக் கூறுதல் 'தண்டம்'. பிள்ளைத் தமிழ் பாடும் புலவர்க்குத் தம் கற்பனை முழுதும் காட்டக் கருவியாய் அமைவது இவ் அம்புலிப் பருவமே ஆம். குமர-குருபரரின் கற்பனைத் திறனுக்கு அம்புலிப் பருவப் பாடல்-களே போதும் எனலாம். ஈண்டு ஒரு சான்று காட்டலாம்:

''அம்புலியே! புகழ்பெற்ற தேவர்கள், நின் கிரணமாகிய அமுதத்தை விருந்தாகக் கொள்ள, அதுகண்டு நீ மகிழ்ந்தாய்! மலைபோல அலை மோதும் ஒளிபொருந்திய கடலையும் விரும்பினாய்! குற்றமில் குணங்கொண்ட இரவில் மலரும் மலர்கள் வாடாதிருக்கச் செய்தாய்! நினக்குப் பகைவன். தாமரை நாயகனாம் சூரியன். அவன் வரக் கூவும் சேவலையும் கொடிய பொருளாக வைத்தாய்! குமுதம் மலர, அதிலிருந்து தண் தேன் ஒழுக, ஒளி நிலாத் தந்தாய்! ஆதலின் உன் செயல்-கள் அனைத்தும் எம்பெருமான் செய்கைகளை ஒத்துள்ளன! நீலகண்டனான சிவபிரான் பெற்ற இச் செல்வக் குமரனுடன் அம்புலியே ஆடவா!'' என்றழைக்கும் கவிஞர் பிள்ளைத்தமிழ்ப் பாட்டு இது!;

''சொல்தரு பெரும்புலவர் கலையமுது கொளவிருந்
தோகைமேல் கொண்டருளினாய்!
தோற்றிமுன் பொங்கிமலை போல்அலை மோதும் அச்
சோதிவே லையு மகந்தாய்!
குற்றமில் குணத்தைக் குறித்தஇர வலர்முகம்
கோடா தளித்தல்செய்தாய்

கோகனக நாயகன் வரக்கூவிடும்,குக்
குடம்கொடிய தாகவைத்தாய்!
உற்றிடும் இதழ்க்குமுதம் விண்டுதண் தேன்ஒழுக
ஒளிநிலா நகைமுகிழ்த்தாய்!
உன்செய்கை எம்பிரான் தன்செய்கை போலுமால்
உனையும்இவன் ஒவ்வாதிரான்!
அல்பொதி களத்தவன் அளித்தகும ரேசனுடன்
அம்புலீ ஆடவாவே!
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ ஆடவாவே!'' (அம்பு 2)

இப்பாடல் முழுதுமே 'சாம உபாயம்' அமைந்த அம்புலி-யைப் பற்றியது என்றாலும் இதன் சிலேடைப் பொருளாக வேறொன்றும் இதன்கண் அமைந்துள்ள நுட்பம் அறிந்து இன்புறுதற்குரியது!

'சொல்தரு பெரும்புலவர் கலையமுது கொளவிருந் தோகை மேல் கொண்டருளினாய்' என்பதற்குச் 'சொல்லைத் தரும் பெரும்புலவர்களாகிய நக்கீரர் முதலானோரின் தமிழ்க் கலைச் சுவையாகிய அமுதத்தைக் கொள்வதற்குப் பெரிய மயிலின் மேல் வந்தருளினான்' என்றும்; 'வேலையு முகந்தாய்' என்பதற்கு 'அலை வீசும் கடலை மோதி ஒளிபொருந்திய வேற் படையை விரும்பினான்' என்றும்; 'இரவலர் முகம் கோடாது அளித்தல்' என்பதற்குத் தம்பால் வந்து அருள் வேண்டி நின்-றார்க்கு முகம் கோணாது காப்பவன்' என்றும்; 'குக்குடம் கொடியதாக வைத்தாய்' என்பதற்குச் 'சேவலைக் கொடியாகக் கொண்டவன்' என்றும்; 'நகை முகிழ்த்தாய்' என்பதற்கு 'வாயாகிய குமுதமலர் மலர, அதிலிருந்து தேன்போல் எச்சில் ஒழுகப் புன்முறுவல் பூத்தவன்' என்றும் முருகப் பெருமானுக்கு ஏற்றி உரைக்கும் படி இப்பாடல் அமைந்துள்ளது. கற்பனைத் திறனின்றி இத்தகைய சிலேடைப் பொருளைப் பாடமுடியாது!

முருகனின் திருவடி, பரந்துபட்ட ஒளியுடையது அதனைக்கண்ட தாமரை மொட்டுக்கள், 'இஃது இளஞ்சூரியன்' என்றெண்ணி மலரத் தொடங்கிவிட்டனவாம்! அவனின் புன்-முறுவலோ, ஒளி வீசும் அதனைக் கண்ட குமுத மொட்டு, 'இது நிலவொளியன்றோ?' என்று எண்ணி மலரத் தொடங்-கினவாம்! (வருகை. 3).

சோழவள நாடு சோறுடைத்தன்றோ? உண்டான் எஞ்சிய சோற்றுத் திரள், நீர் பாயும் மடைகளை அடைத்துக் கொள்கிறதாம்! அதனோடு, பசுக்கள் சொரியும் பாலும் கலந்துவிடுகிறதாம்! காவிரி என்னும் மங்கை நல்லாள், தன் வளைக்கரத்தால், இப் பாலும் சோறும் கலந்த உணவை ஈர்த்துக் கொண்டு கடல் என்னும் நாயகன் உண்ணும்படி ஊட்டுகின்றதாம்!

> "சுடர்வால் வளைத்தென் திரைக்கரத்தால்
> சுரபி சொரிவான் மடையடைத்த
> சோற்றி னோடும் கலந்தூட்டிச்
> செழிக்கும் தடங்கா விரி!" (சிற்றில். 3)

என்பர் குமரகுருபரர்! இவர் பாடிய இப் பிள்ளைத்தமிழ் எனும் கடலில் மூழ்கினால் இவை போன்ற கற்பனை முத்துக்களை வாரி எடுக்கலாம். ஆம்! "கற்பனைக்கு ஒரு கவிஞர் என்றால் அவர் குமரகுருபரரே!"

# 17

# அழகர் செய்த ஆடல்

மதுரையைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட மன்னர்கள் பலர். அவருள் ஒருவன் வரகுணபாண்டியன். முறை வேண்டினார்க்கும் குறை வேண்டினார்க்கும் அருள் பொழியும் பெருந்தகையாளன். தன்பால் வருவோர் யாராயினும் நன்முகங்காட்டி இன்னுரை பகர்வான். வேண்டுவன தந்து விருப்புடன் அனுப்புவான். ஆதலின் முத்தமிழ்த் துறையின் முறை போகிய வித்தகக் கவிஞர்கள் அவனை என்றும் சூழ்ந்து கொண்டே இருப்பர்!

ஒருநாள், ஏமநாதன் என்னும் யாழிசை வல்ல புலவன் ஒருவன் வடநாட்டினின்றும் மதுரை வந்து வரகுண பாண்டியனைக் கண்டான் கற்ற இசையனைத்தையும் காட்டி மன்னனை மகிழ்வித்தான். இன்னிசையில் உள்ளத்தைப் பறிகொடுத்த பாண்டியன், ஏமநாதன் வேண்டும் பொருளனைத்துங் கொடுத்துப் பெருமைப் படுத்தினன்; மேலும் இருக்க இடமும் தந்து அவன் சின்னாள் தங்கிப் போக ஏற்பாடும் செய்தான். ஆனால், தனக்களித்த வரவேற்பினையும் சிறப்பினையுங் கண்ட ஏமநாதனோ, தன்னைவிட இன்னிசை பாடவல்ல தான யாழ்ப்புலவர் வேறு எவருமில்லை எனத் தருக்கி நின்றான். அதனைப் பலரும் அறியப் பறை சாற்றினான். இச் செய்தி பாண்டியனுக்கு எட்டியது.

மதுரை மாநகரின்கண் யாழிசை வல்ல புலவர் பலர் வாழ்ந்து வந்தனர். அவருள் 'பண்பால் யாழ்பயில் பாணபத்திரன்' என்பாரும் ஒருவர். நாளும் இன்னிசை பாடி இறைவனை வழுத்தும் நாவினர்; எளிய உருவமும் இனிய முகமும் உடையவர்; கல்விச் செருக்குச் சிறிதும் இல்லாதவர்; பாண்டியனது அவையின் இசைப்புலவர். இத்தகு பாணரைப் பாண்டியன் வரவழைத்தான். ''பத்திரா! ஈண்டுப் புதிதாக வந்திருக்கும் ஏமநாதன் என்னும் வடநாட்டுப் புலவனோடு நீர் இசைபாட வல்லீரோ?'' என்றான். உடனே பாணபத்திரர் ''தென்னவர் பெரும! உன் அன்பும் இறைவன் அருளும் கொண்டு அந்த ஏமநாதனை வென்று அவன் பெற்ற விருது-

களையும் பறித்தல் இயலும்!'' என்று பணிவுடன் உரைத்தார். அதுகேட்ட அரசன் ''நன்று! நீர் நாளையே அவனுடன் பாடி வெல்க!'' என்று கூறினான்.

அரசனது ஆணையைத் தலைமேற்கொண்ட பத்திரர். தம் இல்லம் ஏகினார். அப்போது ஏமநாதனிடம் இசை பயிலும் மாணவர் சிலர் மதுரை நகரின் கடைத்தெரு, அம்பலச்சாவடி, நாற்சந்தி கூடுமிடம் ஆகிய இடங்களில் நின்று கொண்டு பலரும் அறியும்படியாக இன்னிசைப் பாடல்கள் பல பாடித் தம் பெருமையினையும் தம் ஆசிரியன் பெருமையினையும் விளக்கி நின்றனர் அவரறைக் கேட்ட பத்திரர், நன்று என்று வியந்து, ''ஏமநாதனிடத்து இசை கற்கும் மாணவர்கள் பாடும் பாட்டே இத்துணைச் சிறப்புடையதாயின், அவ் விசைவல்லான் பாடும் முறை எத்தகையதோ? அவனை நாளை இசை பாடி வெல்வது யாங்ஙனம்?'' என்று ஏக்க முற்றவராய்ச் செய்வதின்னதெனத் தெரியாமல் திகைத்தார். ''திக்கற்றவர்க்குத் தெய்வமே துணை'' என்பதையறிந்த பத்திரர், உடனே ஆடலேற்றழகராம் சொக்கநாதர் கோயிலுக்குச் சென்றார். மதுரை நாயகனை மனதார வணங்கினார். ''மெய்யனே! அடியேற்கு உன் அருள் துணை செய்ய வேண்டும்!'' என வேண்டினார். உடனே வீடு திரும்பினார். கவலையின்றி இருந்தார்.

உண்மையடியார்தம் உளத்தில் உறையும் ஆண்டவர், பாண பத்திரர் வேண்டுதலை நிறைவேற்றா திருப்பரோ? வருத்தனாகி வந்த தம் அன்பன் பாணபத்திரரது இசைப் பகையினை மாற்றத் திருவுளங்கொண்டார். வயது முதிர்ந்த கிழவராக விறகு விற்பவராகத் திருவுருவத்தை மேற்கொண்டார்; அழுக்கு மூழ்கிய கிழிந்த ஆடையை இடையிலே சுற்றினார்; வெட்டி வெட்டித் தேய்ந்து போன வளைந்த அரிவாளை வலப்புறத்தில் செருகினார்; கிழிந்த தோல் செருப்பைக் காலிலே மாட்டிக் கொண்டார்; பழைய உறைக்குள் யாழ் ஒன்றை வைத்துத் தோளில் தொங்க விட்டார்; களாய்க் காய்களைக் காதுகளில் அணிந்து கொண்டார்; தலைமயிர் சரிந்து தொங்க சும்மாடு கட்டினார்; அதன் மேல் வெட்டின விறகுக்கட்டை வைத்தார். அவரது தலை நாள்தோறும் விறகு சுமந்ததால் ஏற்பட்ட பள்ளம் உடையதாய்க் காணப்பட்டது. பார்த்தவர்கள் ஐயோ! என இரங்குபடி, வியர்வை தோன்ற, இருமிக் கொண்டு, மதுரைத் தெருக்களில் அவர் நடந்து வந்தார். தண்ணீர் இருக்குமிடத்தில் சுமையை இறக்குவதும்

மீண்டும் தூக்குவதுமாக விறகை விற்றுக் கொண்டு வந்தார். யாரேனும் விலை கேட்டால், வாங்கத் தகாத விலை சொல்லிப் பல தெருக்கள் கடந்து, முடிவில் ஏமநாதன் தங்கியிருந்த வீட்டின் முன்புறம் வந்து சேர்ந்தார். இதற்குள் மாலை நேரமும் வந்துற்றது. மெல்ல மெல்ல இருட்டத் தொடங்கியது. தம் விறகுக்கட்டை ஒருபுறத்தில் இறக்கிச் சாத்திவிட்டு, ஏமநாதனது வீட்டுத் திண்ணையில் அமர்ந்து சிறிது இளைப்பாறினார். பின்னர் மெதுவாக இன்னிசை எழுப்பிப் பாடினார்.

அப்போது வீட்டினுள்ளே இருந்த ஏமநாதன் அவ்விசையைக் கேட்டு ''இவ்வாறு பாடுகின்றவன் யாவன்?'' என வியந்து வெளியில் வந்து விறகு வெட்டியைக் கண்டான்; 'நீ யார்?' என்று வினவினான். விறகுவெட்டியாக வந்த இறையவர், ''நான் இந்நகரத்தில் வாழும் யாழிசையில் வல்ல பாண பத்திரனின் அடிமை. அவரிடம் இசை பயிலும் மாணவர் பலராவர்; அவருள் நானும் ஒருவன். ஆனால், பாணபத்திரரோ, 'நீ தசையெல்லாம் ஒடுங்க முதிர்ந்துவிட்டாய்! இனி, இசைக்கிழமைக்கு ஆகாய்' என்று கூறி என்னை விலக்கி விட்டார். வாழ்வதற்கு வழியின்றி விறகு வெட்டி அதனை விற்று இவ்வயிற்றைப் பாதுகாக்கின்றேன்!'' என்றார். இசைநூல் வல்ல ஏமநாதன் ''விறகு வெட்டியே! நீ இப்போது பாடிய அப்பாடலை மீண்டும் ஒருமுறை பாடு'' என்று வேண்டினான்.

உடனே இறையவர் தம்மிடமிருந்த யாழினை எடுத்து இடத்தோளில் வைத்து முருக்காணிகளை முறுக்கிச் சுருதி கூட்டிப் பண்ணுக்கு ஏற்றவாறு விரல்கள் நடந்துவரச் சாதாரிப் பண்ணைப் பாடினார்.

அவர் பாடும்போது ''வயிறு குழிய வாங்கல், அழுமுகங் காட்டல், புருவம் ஏறல், தலை நடுங்கல், கண்ணசைதல், கழுத்து வீங்கல், பையைப் போல வாயைத் திறத்தல், பல்லைக் காட்டல்'' ஆகிய உடற்குற்றங்கள் நிகழவில்லை. ''வெள்ளை, காகுளி, கீழோசை, வெடிகுரல், குழறு நாசி'' ஆகிய இசைக் குற்றங்கள் தோன்றவில்லை. ''ஓரிடத்திலே நின்று இரட்டித்துச் சொல்லுதல், அளவு கடந்து மிக நீண்டு ஒலித்தல், இளைத்து நெடுமூச்சு விட்டுத் துடித்தல்'' முதலான பாடற்றொழில் குற்றங்கள் உண்டாகவில்லை. ''இழும் என்னும் அருவி ஓசை, மத்தள ஓசை, வெண்கலத் தொனி

சங்கநாதம், வண்டின் குரல்'' ஆகிய இசைக் குணங்கள் பொருந்தி யிருந்தன. ''மூங்கிலிலிருந்து உதிரும் இலை போலவும் மீன் கொத்திக் குருவி மீன்மேல் விழுதலைப் போலவும் 'பாடற்குணங்கள்' அமைந்திருந்தன. ''மந்திரம், மத்திமம், தாரம், துள்ளல், தூழ்தல், தெலிதல், மிகுதல்'' ஆகிய நாதகீதங்கள் தப்பாமல் இருந்தன.

இறைவர் பாடிய இவ் இன்னிசை வலையிலே, படங்கொண்ட பாம்பு, பல் பொறி மயில், யானை, சிங்கம், மான், புலி போன்ற விலங்கினங்களும் பறவை யினங்களும் அகப்பட்டுக் கொண்டன வாதலின் தத்தம் வழிகளை அறியாமல் மயங்கி நின்றன. அவர் பாடிய முல்லைப் பண்ணாகிய சாதாரிப் பண், எல்லா உயிர்களையும், உலகையும் விழுங்கித் தன்வயமாக்கியது எனின், அவ் ஏமநாதனின் உடம்பையும் உயிரையும் உருகச் செய்யாதிருக்குமோ? அப்போது ஏமநாதன் தன்னை மறந்த நிலையிலிருக்க, இறையவர் விறகுக் கட்டுடன் மறைந்தருளினார். அவர் சென்றபின்பு, ஏமநாதன் ''இந்தச் சாதாரிப் பண்ணை யான் இதுவரையிலும் அறிந்ததில்லை. ஒருவர் சொல்லவுங் கேட்டதில்லை. இந்தப் பண்ணைக் கற்றுக் கொடுத்தவர் கடவுளாகத்தான் இருக்க வேண்டும். இந்தக் கிழவனது பாடலே இத்தகையதாயின், இதனைக் கற்றுக் கொடுத்த பாணபத்திரனது பாடல் எத்தகையதாயிருக்குமோ?'' என மதித்து அஞ்சித் தன் மாணவர் பின்தொடர மதுரை நகரை விட்டு வடநாட்டிற்கு இரவோடு இரவாக ஓட்டமெடுத்தான்! அவனுடைய உடுப்புப் பெட்டிகளும், அணிப் பெட்டிகளும், மடக்குப் பெட்டிகளும், யாழிசைக் கருவிகளும், அந்த வீட்டில் சிதறிக் கிடந்தன. பல்லக்கு ஒருவழி, பாடகியர் ஒருவழி, குடை ஒருவழி, கற்பவர் ஒருவழி, வேலையாட்கள் ஒருவழி, இப்படியாகப் பலரும் பலவழி செல்ல ஏமநாதன் ஊரை விட்டே ஒழிந்து போனான்!

அன்று இரவு பாணபத்திரர் கனவில் பரமர் தோன்றி, ''பத்திரனே! உனக்குப் பகையாய் வந்த ஏமநாதனிடம் விறகாளாய்ச் சென்று பத்திரன் அடிமை என்று சொல்லிப் பாடி அவனை வென்று துரத்தினேன்'' என்று கூறினார்.

> ''அன்று பத்திரன் கனவில்வந்(து) ஆடலேற் றழகர்
> இன்றுபத்திரா! இசைவலா னிடைவிற காளாய்ச்
> சென்றுபத்திரன் அடிமையாம் என்றுபாண் செய்து

வென்றுபத்திரம் செய்தும்நின் வேண்டுகோள்
என்றார்''
(பரஞ்சோதி திருவிளையாடல்)

கண்விழித்தெழுந்த பாணபத்திரர் மனத்தாலும் நினைக்க முடியாத சொல்லைக் கேட்டு, ''இப்படிச் சொல்லுதற்கோ நான் கடவுளை வேண்டினேன்'' என்று வருந்திச் சொக்கநாதர் கோயிலுக்குச் சென்றார்; தொழுதார். பின்பு பாண்டியனைக் கண்டார். அரசன் ஏமநாதனை அழைத்துவர ஆட்களை அனுப்பினான்; ஏமநாதன் இரவிலே ஊரை விட்டு வெளியேறிய செய்தியை அண்டை வீட்டார் உரைக்க அரசன் உண்மையறியாது திகைத்தான். பாணபத்திரர் ஆடலேற்றழகர் செய்த அருமைத் திருவிளையாடலை அரசனிடம் எடுத்துரைத்தார். அதுகண்டு வியந்த அரசன் பாணபத்திரரைப் பலவாறு பெருமைப்படுத்தினான்.

மதுரையில் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள ஆடலேற்றழகராம் சொக்கநாதர், அடியவர் பொருட்டுச் செய்து காட்டிய திருவிளையாடல்களில் மேற்காட்டிய 'விறகு விற்ற ஆடலும்' ஒன்று. பரஞ்சோதி முனிவர் தாம் பாடிய திருவிளையாடற் புராணத்தில் விறகு விற்ற படலத்தில், ஆண்டவன் அருளிய ஆடல், அன்பர் பணி, தமிழ் இசையின் தனிமாண்பு முதலியனவற்றை இனிது எடுத்து மொழிகின்றார். இக்காலத்து இசை வல்லாரும் பிறரும் இதனைப் படித்து இன்புறுவார்களாக!

18

# முனிவர் காட்டும் உவமைகள்

ஒரு பொருளின் தன்மையை மற்றொரு பொருட்கண் காண்பது உவமை எனப்படும். தமிழ் இலக்கியப் பெருங்-கடலுள் அழகு தரும் பெரும் முத்தே 'உவமை' எனலாம் இவ்வுவமையினை எடுத்தாளாத தமிழ்ப் புலவர் எவருமே இல்லை என்று இறுமாந்து உரைக்கலாம். அணிகளுக்கெல்-லாம் தலைசிறந்த அணியாக இலங்குவது உவமையணி-யாகும். இவ்வுவமையைப் பலரும் போற்றிப் புகழுமாறு தத்தம் நூல்களில் எடுத்தாண்ட தமிழ்ப் புலவர் பலருள் சிவ-ஞான முனிவரும் ஒருவராவர்!

தமிழ்ப் பெரும் புலவருள்-பிற்காலப் புலவருள் தலை சிறந்தவர் சிவஞான முனிவர்! தென்மொழிக் கடலையும் வடமொழிக்கடலையும் நிலைகண்டுணர்ந்தவர்; மெய்யுணர்வு பெற்ற மூதறிஞர். இருமை வகை தெரிந்து ஈண்டு அறம்-பூண்ட பெரியர். யான் எனது என்னும் செருக்கறுத்த செம்மல், பற்றினைப் பற்றற்றான் பற்றிக் கொண்ட பரமனடியார், 'இலக்கணக்கடல்' என எல்லோராலும் ஏத்தப்படும் இணை-யிலாச் செல்வர். பெருநூல்கட்கும் அருவுரை காணும் வித்தகர்' இத்தகு நல்லார் எழுதிய நூல்கள் சில; அவற்றுள் ஒன்று 'காஞ்சிப் புராணம்!' இரு காண்டங்களைக் கொண்ட இப்பெரு நூலில் முதற் காண்டம் பாடியவர் முனிவராவர்! இது சொன்னலமும் பொருள்நலமும் ஒருங்கே பெற்றது. இறைப்பற்றை-சிவப்பற்றை முறையாக வளர்க்கத் தூண்டு-வது; இலக்கியச் செறிவு மிக்குடையது. இந் நூலின்கண் முனிவர் காட்டும் உவமைகள் எண்ணிறந்தன. அவையனைத்-தும் புலவர்க்குப் பெருவிருந்தா யமைவன; பிறர்க்கு நறுஞ்சுவை நல்குவன. அவற்றுள் ஒருசிலவற்றை ஈண்டுக் காண்போம்.

பாலி நாட்டில் மழை மிகுதியாகப் பெய்தது பின்னர் ஓய்ந்தது. ஆயினும் மரத்து இலைகளில் மழை நீர்த்துளிகள் தங்கியிருந்து சிறிது சிறிதாகக் கீழே விழுகின்றன; அதனால் அம் மரத்தினிடத்து விரும்பி வாழ்கின்ற பறவைகளும் விலங்கு-களும் துன்பமடைகின்றன இதனைக் குறிப்பிட வந்த

சிவஞான முனிவர், அழகிய உவமை ஒன்றினைத் தம் சமயக் கருத்தோடு இணைத்து உரைக்கின்றார். எல்லாஞ் சிவனென உணரும் உயர்நிலை வந்தோர்க்கும் அகப்பற்றும் புறப் பற்றும் துறந்தோர்க்கும் பண்டு தொட்டே விடாது சூழ்ந்த ஆணவ மலநோய் நீங்கப் பெற்றோருக்கும், முன்னை வினை-யானது (பழவினை) நீங்காது தொடரும் என்பது சைவ சித்தாந்தங் கூறும் உண்மை. அதைப் போலவே மழை விட்டும், மர நீர்த்துளி சிதறி விழுந்து தொல்லை தருகின்றது என்கின்றார்.

''போதமே லாகப் பண்டே புல்லிய மலநோய் தீர்ந்தும்
வாதனை தாக்கு மாபோல் மழைப்பெயல் மாறித் தீர்ந்தும்
காதல்செய் துறையும் புள்ளும் மாக்களும் கவன்று நெஞ்சம்
நோதக மரங்கள் எல்லாம் நுண்துளி துவற்றும் மாதோ!''

நந்தி மலையினின்று அருவிகள் பல ஓடி வருகின்றன. அவையனைத்தும் ஒருசேரச் சென்று, பாலியாற்றில் ஒன்றாகக் கலக்கின்றன. இக் காட்சியானது முற்பிறப்பிற் செய்த இரு-வினைப் பயன்கள் எல்லாம் மறுபிறப்பாக வேறோர் இடத்தில் பிறந்த ஒருவனிடத்தே ஒன்றாகச் சென்று சேர்வதைப் போன்றுள்ளது என்கின்றார். அருவிகள் பலவிடங்களிலிருந்து பல்வேறு வழிகளில் சென்றாலும் முடிவில் ஆற்றில் வந்து சேர்கின்றன. ஓர் ஊருக்குச் செல்லும் பல வழிகள் பற்பல இடங்களிலிருந்து வந்தாலும் முடிவில் அவ்வூரையே சேருவன போலவும் பல்வகைப்பட்ட மதங்கள் பல்வகைப்பட்ட கருத்து வேறுபாடுகளை உடையவையாயினும் அவற்றின் முடிவு 'கடவுள் நிலை' ஒன்றே எனக் காட்டுவது போலவும், பாலி யாற்றில் அருவிகள் ஒன்று கலந்தன என்கின்றார்.

அழகுப் போட்டி

பாலியாறு முல்லை நிலவழியாகப் பாய்ந்தோடுகின்றது. அதனால் முல்லை நிலம் செழிப்புற்று விளங்குகின்றது. முல்லை நிலத்தின் கருப்பொருள்களான காயா, கொன்றை. குமிழ் முதலியன பூத்துக் குலுங்கிக் கண்ணுக்கு விருந்தா-யமைகின்றன. இவற்றுள் குமிழமலர்கள் பூத்துக் கிடக்கும் காட்சியை முனிவர் ஓர் உவமையால் கூறுவது இன்பம் பயக்-

கின்றது. முல்லை நிலத்துப் பெண்டிர் 'ஆய்ச்சியர்' என அழைக்கப்படுவர். அவர்கள் அழகிற் சிறந்தவர்கள். ஆனால் அமரர் உலகத்து அரம்பையர்களோ, தம்மிலும் அழகிற் சிறந்தார் எவரெனத் தருக்கி நின்றனர். இத்தருக்கினை அடக்கக் கருதிய ஆய்ச்சியர்கள், தம் அழகுப் போட்டியால் விண்ணுலக அரம்பையர்களை வெற்றி கண்டு, தம் வெற்றிக்-கறிகுறியாக அவர்களின் மூக்கை அரிந்து, தம் முல்லை நிலத்தில் குமிழ மரங்களில் பலருங் காணக் கட்டித் தொங்க-விட்டால் எப்படியிருக்குமோ அதைப்போலவுள்ளது குமிழமலர் எனக் கூறுவது கற்பனையிற் சிறந்து விளங்குகின்றது. அரம்பையர்தம் அழகிய மூக்கினைப் போலக் காட்சி தருவது குமிழ மலர் என்பதை எத்துணை நயமாக முனிவர் காட்டு-கின்றார் பாருங்கள்!

> ''பெண்ண லங்கனி இடைக்குலப் பிடிநடை மடவார்
> விண்ண லங்கனி மாதரை எழிலினால் வென்று
> பண்ண லங்கனி மிடற்றவர் பணைத்தமூக் கரிந்து
> மண்ணில் எங்கணுந் தூக்கிவைத் தெனக்குமிழ்
> மலரும்''

ஒரே பாலியாறு, வயல்களின் விளைவு செழித்து ஓங்குதற் பொருட்டுத் தன்பால் உள்ள நீரால் பற்பல கால்வாய்களாகப் பிரிந்து செல்லுந் தன்மையானது, ஒரே வடிவினனான சிவ பெருமான் தம் திருவருளால் உலகு உயிர்கள் அனைத்தையும் பாதுகாத்தற்பொருட்டு ஒன்பது வகைப்பட்ட வெவ்வேறு திரு-வுருவங்களைக் கொண்ட பான்மை போலுள்ளது! பாலி-யாற்றினின்றும் பிரிந்து செல்லும்வாய்க்கால்களும், அவைகளின் கிளைகளாகப் பிரிந்து போகும் கால்வாய்களும் எண்ணிலடங்கா. இவை, பெரிய தூற்றையுடைய ஒரு மரத்தினது மேலிடத்தே கொம்பும் கிளையும், வளாரும் தளிரும் இலையும், அரும்பும் பூவும், காயும் கனியும் ஆகிய பலவும் அளவுகடந்து கவடுவிட்டு மேலெழுந்தாற்போன்ற காட்சியை நினைவுபடுத்துகின்றன! மருதநில மக்கள் பிரிந்து போகும் பல நீர்மடைகளிலிருந்து அணை கட்டி ஒதுக்கி, நீர் முழுதையும் நிலத்தின்கண் பாய்ச்சு-வர். இச்செயல் ஐம்பொறிகளின் வழியாகச் செல்லும் ஐம்புல ஆசைகளையும் புறத்தே செல்லவிடாமல் அடக்கி ஒருவழியே குறிக்கொண்டு செல்லச் செய்யும் பெரியர் செயல் போல உள்ளது! பாலி யாற்றினது குளிர்ந்த நீர் அனைத்தும் சிறிதும் வீணாகாமல் வாய்க்கால் வழியாகப் பாய்ந்து வளப்பமான

வயல்களை நிறைவு படுத்துகின்றது. இது அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச்சொல் முதலான பழிகளினின்று நீங்கி அறத்தாறு ஈட்டிய அரும்பொருள் சிறிதும் தீய வழியில் செல்லாமல் நல்ல வழியில் பயன்படுதலைப் போன்றது!

''பழயி னீங்கிநன் கீட்டிய பசும்பொருள் சிறிதும்
கழிப டாதுநல் வழிப்பயன் படுவது கடுப்பக்
கொழிதி ரைச்சுவைப் பாலி யின் குளிர்புனல் முழுதும்
வழுவு றாதுகால் வழிச்சென்று வளவயல் நிறைக்கும்''

மருத நிலத்து மக்கள் முன்பு வேறாக்கிய குளிர்ந்த சேற்றைக் குழப்பி ஒன்றுபடுத்தித் தொளி செய்து வெண்ணிற நெல் முளைகளை விதைப்பர். இது, போர் மூண்ட காலத்துப் பகை வேந்தர்க்குத் துணையாயினாரை முன்னர்ப் பிரித்தும் தம்மிற் பிரிந்து மனம் வேறுபட்டிருப்பவரைத்தம்பால் சேர்த்துக் கொள்ளும் நல்லமைச்சரது செயலைப் போன்றுள்ளது. உழவின் அறுவகைப்பட்ட தொழிலை நன்குணர்ந்த உழவர்கள் நெல்லின் முளைத்த இளம் பயிர்களுக்கு நீர் பாய்ச்சும் பருவத்தைத் தெரிந்து நீண்ட வளமை பொருந்திய வயலில் நீரைப் பாய்ச்சிப் பாதுகாப்பர். இது இளமை மிக்க குழந்தையின் பசிக்கு உயர்ந்த தன் கொங்கையின் பாலினை அக் குழந்தை உண்ணும் அளவறிந்து ஊட்டும் அருமைத் தாயின் செயலைப் போன்றுள்ளது! வயல் நிலத்து வேலை செய்யும் மருதநில மக்கள் செர்மையுடன் வளர்ந்த நெல் நாற்றைப் பறித்து முடிகளாகக் கட்டி, நுண் தொளி செய்த வயல்களில் பரக்க எறிந்து, முடியைக் களைந்து நாற்று நடுவார்கள். பூனை தன் குட்டிகளை ஏனைய விலங்குகளைப் போலப் பெற்றெடுத்த இடத்திலேயே கிடத்துவது இல்லை. தன் வாயால் கௌவிக்கொண்டு சென்று பற்பலஇடங்களில் போட்டுப் பாதுகாக்கும் தன்மையை ஒத்துள்ளது இது!

''ஓரிடத் துயிர்த்ததன் பறழை ஓம்புவான்
பாரிடைப் பல்வயின் உய்க்கும் பூனைபோற்
காருடற் களமர்கைந் நாறு வாரிப்போய்ச்
சீருடைப் பணைதொறும் நடுதல் செய்வரால்!''

வயல் நிலத்தில் உள்ள நெற்பயிர் பசிய பயிராகவுள்ள பருவத்தில் தன் இல்லத் தலைவனான இந்திரனுக்கு எதிரே கதிர் கொண்டு தலை வணக்கம் இன்றித் தருக்குடன் நிற்கின்றது. பின்னர் அது பால்பிடித்து முதிர்ந்து வரவரச் சிறிது தலை சாய்க்கின்றது. நன்றாக முற்றின நிலையில் முழுதும் தலை

வணங்கிக் கீழ் நோக்குகின்றது. இது ஒரு பெண்ணானவள் பேதைப் பருவத்தில் ஆடவர் முன்னே தலை வணக்கமில்லாமல் பெதும்பைப் பருவத்தில் உயர்வு பொருந்தச் சிறிது தலை-வணங்கி மங்கைப் பருவத்தில் மிகவும் தலை வணங்கும் தன்மை போல் உள்ளது!

> ''பேதைமையி லாடவர்முன் வளைவின்றிப் பெதும்பை-மையின்
> மேதகச்சற் றெனவணங்கி மங்கைமையின் மிக நாணும்
> மாதரைப்போற் பைங்கூழின் மன்னனெதிர் கதிர்த்தெழுந்த
> ஏதமிலாக் கதிர்முதிர்ந்து வரவரக் கீழ் இறைஞ்சுமால்''

கதிர் முற்றிய நெற்குலைகளை அறுக்கக் கருதிய மள்ளர்கள் அவற்றுடன் பற்றிப் படர்ந்துள்ள தாமரை, ஆம்பல் முதலிய மலர்க் கொடிகளையும் சேர்த்து அறுத்து விடுகின்றனர். அது ஒருவருக்கு ஒரு துன்பம் வந்தால், அத் துன்பம் அவர்க்கு அடுத்துள்ள ஏனையோர்க்கும் வருவது போன்றுள்ளது! வைக்கோலினின்று நெல்லைப் பிரித்தெடுத்த பின் காற்றில் அதனைத் தூற்றுவரன்றோ? அப்போது வைக்கோலின் பொடிகளுடன் நெற் பதர்களும் அப்புறம் போகு மன்றோ? இது உலகக் கட்டுக்களினின்றும் நீங்கிய பெரியோர்களுடைய ஐம்பொறிகள் தம் கீழான தன்மை ஒழிந்து போகின்ற செயலை நினைவுபடுத்துகின்றது. நெய்தல் நிலத்து நீர்க்-காக்கையொன்று மலைச்சாரலில் உள்ள பலாவின் சுளையை வாயிற் கௌவி மேலெழுந்து கடற்கரையிடத்தே மரக்கலத்தை அடையும். இது இராவணன், வில்லைக் கொண்ட இராம-பிரானின் மனைவி சீதையைக் கவர்ந்து இலங்கை சென்றது போல வுள்ளது! நீண்ட வாயையுடைய குரங்கு மலையில் நின்று நெய்தல் நிலத்துள்ள தோணிமேற் பாய்த்து கலக்கித் திரும்பவும் மலையை யடைந்தது. இது அச் சீதையைத் தேடி, அழிவிலாத மதில் சூழ்ந்த இலங்கை நகரின் மேல் மயேந்திர-மலையினின்று தாவிப்பாயும் அனுமனைப் போன்று காட்சி-யளித்தது.

> ''அலைக்காக மலைச்சாரற் பலாச்சுளையைக்
> கவ்வி யெழுந் தரக்கர்கோமான்
> சிலைத்தாச ரதிமனையைக் கொண்டகன்றா
> லெனவங்கஞ் சேருமந் நாள்

நிலைப்பான மதிலிலங்கை மிசைத்தாவும்
அனுமனைப் போல் நீள்வால்மந்தி
மலைப்பானின் றலைத்தோணி பாய்ந்துழக்கி
மீண்டெய்தும் வாழ்வும் அங்கண்''

கொடுந்தொழில் புரியும் பரதவர் வலைவீச உப்பங்கழி-களைக் கலக்குவர். அதனால், குதித்தெழுந்த மீன், முல்லை நிலத்து ஆய்ச்சியர் கடையும் பாற்குடத்தில் விழ்ந்து அப் பா-லோடு சுழலும். அன்னவர் கடையும் தயிரோசைக்கு அஞ்சும் முயலானது ஆங்குமிங்கும் ஓடிக் கடைசியில் நெய்தல் நிலத்-துத் தாழையைத் தஞ்சமெனக் கொண்டு அடங்கும். ஆனால் கடலின் ஒலியோ அதற்குப் பேரச்சத்தைத் தரும். அதனால் அது மயங்கும்! இது கடுமை பொருந்திய கருமத்தொடர்பு ஐயகோ, தன்னைச் செய்தோன் எவ்விடத்திருந்தாலும் அவனை விடாது பற்றுதல் போலவன்றோ உள்ளது!

''கொடும்பரவர் கழியுழக்கக் குதித்தெழுமீன்
ஆய்ச்சியர்பாற் குடத்துள் வீழ்ந்தங்கு
அடும்பயத்தோ டலமருமற் றவர்கடையுந்
தயிரோதைக் கலமந் தோடி
ஒடுங்குமுயல் கைதையினுள் அடங்கியங்கட்
கடலொலிகேட் டுள்ள மாழ்கும்
கடுங்கருமத் தொடரந்தோ யாங்குறினும்
விடாதெனக் காட்டும் ஓர்பால்!''

ஆற்றின் தோற்ற முதல் இறுதிவரை அழகுறச் சொல்லிச் செல்லும் முற்றத் துறந்த சிவஞான முனிவர் எண்ணற்ற எழில் உவமைகளை அள்ளித் தெளிக்கின்றார். அவற்றுள் ஒருசிலவே தாம் கண்டவை! உவமையணி சிறக்கப் பாடும் உயர்புலவராம் சிவஞான முனிவர் இந்நூலின் தொடக்கத்தில் அவையடக்க-மாகக் கூறும் பாடலொன்று உவமைக்கோர் எடுத்துக்காட்டாய் இலங்கி நிற்கின்றது.

''எழுத்துப் போலியும் எழுத்தென ஆளுவர் அதுபோல்
புழுத்த நாயினேன் பிதற்றிய செய்யுட்போ லியையும்
பழுத்த கேள்வியோர் கைக்கொள்வர் என்பது பற்றி
விழுத்த நாணிலேன் சிவகதை விளம்புதற்
கிசைந்தேன்!''

எழுத்துப் போலியானது, போலி மணியைப் போன்றது. அய் - ஐ ஆகவும் அவ் - ஔ ஆகவும் அம் முழு எழுத்தைப் போலக்

கூட்டெழுத்துக்களையும் கொள்ளுவதாகும். அறிவுடையோர் இவ்வாறு எழுத்துப் போலியையும் எழுத்தென்றே கொள்ளுவர். அதுபோலப் புழு நெளிகின்ற உடலையுடைய நாயினுங் கடைப்பட்ட அடியேன் பிதற்றியுரைத்த சொல் பொருள் ஓசை முதலான அழகுகள் இல்லாமல் வெற்றெனத் தொடுக்கப்பட்ட போலிச் செய்யுட்களையும் நிறைந்த கல்வி கேள்வியுடைய அறிவாளர் எடுத்தாளுவர் என்பது கருதி நாணத்தை உதிர்த்த நான் சிவ கதையைக் கூறுதற்கு முற்பட்டேன்! இவ்வாறு தம்மைத் தாழ்த்தி உரைக்கும் தன்மையிலுங் கூடத் தலைசிறந்த உவமையைக் கூறுவது முனிவரின் ஆழ்ந்த புலமையைக் காட்டுகிறதன்றோ?

## 19

# திருவேங்கட மும்மணிக் கோவை

முன்னுரை

''அருளற முறத்திகழ் கருமுகில் வண்ண!
அடைந்தார்ப் புரந்து மல்லவர்ச் சவட்டியு
மறத்தினை நிறுத்திய திறத்தமர் செல்வ!
அழியுநர் புறக்கொடை யயில்வா ளோச்சாக்
கழிதறு கண்மையைக் கந்தசற் கிரங்கி
நாண்முதற் செருவிடை நாட்டிய நாயக!''

—இப்பாடலைப் படிக்கும்போது, இன்னோசையும் விழுப்பொருளும் தந்து, பண்டைச் சங்கப் பாடல் போல் தோன்றுகின்றதன்றோ? உண்மையில் இஃது இக்காலத்துத் தமிழ்ப் புலவர் ஒருவர் பாடியது என்றறியுங்கால் வியப்பாக உள்ளதன்றோ? சேலம் நகராட்சிக் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர், 'கவிராச பண்டிதர்' ஆந்திரக் காசியப திம்மப்ப அந்தணனார் என்பவர் பாடியதே இது!

நூற் குறிப்பு

இவ்வினிய பாடல் இடம் பெற்ற நூல், 'திருவேங்கட மும்மணிக்கோவை' என்பது. 'அழகிய வேங்கடத்தைப் பற்றிய மும்மணிக்கோவை' என்று இதற்குப் பொருள். 'திரு' என்பது பலபொருள் ஒரு சொல் ஈண்டு அடைமொழியாக வந்துள்ளது. 'வேங்கடம்' தமிழர்களால் நன்கு அறியப்பட்டதொன்று. ''வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகம்'' என வரும் தொல்காப்பியப் பாயிரத்தை அறியாதவர் இலர்! 'வேங்கடம்', திருமாலின் திருப்பதி நூற்றெட்டனுள் ஒன்று; வடநாட்டுத் திருப்பதி பன்னிரண்டில் முதலாவது; 'கோயில், திருமலை, பெருமாள் கோயில்' என்று சிறப்பாகச் சொல்லப்படும் மூன்றில் இடையின்கண் அமைந்தது. வேம்+கடம்=வேங்கடம். வேம் - பாவம்; கடம் - எரித்தல். தன்னை அடைந்தவர்களின் பாவமனைத்தையும் ஒழிக்கும் திருத்தலம் ஆதலின் 'வேங்கடம்' எனப்பட்டது.

''வெங்கொடும் பவங்க ளெல்லாம் வெந்திடச் செய்வதால் நல்
மங்கலம் பொருந்துஞ்சீர் வேங்கட மலையானதென்று''

என்பது ஒரு புராணச் செய்யுள்! இனி, வேம் - அழிவின்மை; கடம் - செல்வம் எனக்கொண்டு, ''அழிவில்லாத செல்வங்களைத் தருவது'' என்றும் பொருள் உரைப்பதுமுண்டு. இதனால்தான், குலசேகராழ்வார்,

''தேனார் பூஞ்சோலைத் திருவேங்கடச் சுனையில்
மீனாய்ப் பிறக்கும் விதியுடையேன் ஆவேனே!''

என்பதோடன்றிக் ''குருகாய்ப் பிறப்பேனே! செண்பகமாய் நிற்கும் திரு உடையேன் ஆவேனே! தம்பகமாய் நிற்கும் தவம் உடையேன் ஆவேனே! கான்ஆறாய்ப் பாயும் கருத்துடை-யேன் ஆவேனே!'' என்றெல்லாம் பாடலானார்.

இத்தகு சிறப்புடைய எழில் திருவேங்கடமுடையான் மீது பாடப்பட்ட அருமை நூல்தான் 'திருவேங்கட மும்மணிக் கோவை'.

தமிழில் உள்ள தொண்ணாற்றாறு வகைச் சிற்றிலக்கியங் களில் 'மும்மணிக்கோவை' என்பதும் ஒன்று. ஆசிரியப்பா, வெண்பா, நேரசையும் நிரையசையும் கொண்டு எழுத்தெண்-ணிப்பாடும் கட்டளைக் கலித்துறை எனும் இம்மூன்றும், முறை-முறை தொகை முப்பது பெற அடுக்கி, அந்தாதித் தொடையாற் பாடுவது 'மும்மணிக்கோவை'யின் இலக்கணம்.

''அகவல் வெண்பா வகையெண் கலித்துறை
தொகைமுப் பதுபெறச் சொற்றொடர் நிலையிற்
கூறுதன் மும்மணிக் கோவை யாகும்''

என்பது 'இலக்கண விளக்க' நூற்பா. வெவ்வேறு வகைப்-பட்ட முத்து, பவளம், இரத்தினம் எனும் மும்மணிகளை மாற்றிமாற்றிக் கோத்த வடம்போல, ஆசிரியப்பா, வெண்பா, கட்டளைக் கலித்துறை எனும் மூவகைப் பாக்களையும் மாற்றி மாற்றிப் பாடிக் கோவையாக அமைக்கப்படுதலால், 'மும்மணிக்கோவை' எனும் பெயர் ஏற்பட்டது.

இத் 'திருவேங்கட மும்மணிக்கோவை' எனும் இந்-நூலும், விநாயகர் காப்புச் செய்யுள் ஒன்று நீங்கலாக, முப்பது செய்யுட்கள் கொண்டது.

இத்தகைய சிற்றிலக்கியங்கள் தமிழில், 'மதுரை மும்மணிக்கோவை', 'சிதம்பர மும்மணிக்கோவை', 'திருக்கழுமல மும்மணிக்கோவை' போல ஒருசிலவே காணப்படுகின்றன. வைணவ சமயத்தில் இத்தகு மும்மணிக்கோவையினைக் காண்டல் அரிது. இதனைக் கருத்திற்கொண்டே இந்நூலாசிரியரும், இந்நூலினைப் பாடினதாகவும், அதுவும், திருவேங்கடமுடையான் இவர்தம் கனவில் தோன்றிக் காட்சி அளித்ததனால்தான், இந்நூலை விரைவில் பாடி முடிக்க முடிந்ததாகவும் தம் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார்.

நூலும் நுவல் பொருளும்

முதற்கண் நேரிசையாசிரியப்பா, அடுத்து வெண்பா, இறுதியில் கட்டளைக் கலித்துறை என்னும் வரிசையில் ஒன்றன்பின் ஒன்றாக முறை பிறழாமல் பாக்கள் தொடுக்கப்பட்டுள்ளன. அன்றியும் அந்தாதித் தொடையிலும் அமைந்துள்ளன. திருவேங்கடமுடையானின் சீர்போற்றுவதே ஆசிரியர் நோக்கம்.

> ''உலகனைத் தும்புக ழலகிலாச் சீர்கெழு
> வண்டமிழ் மொழிக்கோர் வடவெல்லை யாகித்
> தாவிலாக் கொடைசேர் மாவலி யின்பால்
> மூவடி மண்பெற் றோவின் றுயர்ந்த
> நீல நிறத்து நெடுமால்!''

என 'உலகம்' எனும் மங்கலச் சொல்லோடு பாடல் தொடங்குவது எண்ணத் தக்கது. 'சீர்கெழு வண்டமிழ் மொழி' என இவர் கூறுவது, இவரது அளவிலாத் தமிழ்ப்பற்றைப் புலப்படுத்துவதாம். ''வடமாலவன் குன்றம் இவற்றிடையே புகழ் மண்டிக் கிடக்கும் தமிழ்நாடு'' என்ற அமர கவி பாரதி பாடலை நினைப்பூட்டுகிறது, 'வடவெல்லை' எனுந்தொடர்!

''ஆசிரியப்பா'' யாப்பில் அமைந்த பாடல் பத்தும், சீரார் திருவேங்கடமுடையானை விரிவாக விளக்குதற்கு நிலைக்களன் எனலாம்.

''என்றன் ஒப்பிலா மணியே! குலவிடு வரம் தரும் குல முதல் தேனே! வேங்கட முற்றமர் தீங்கடு தேவ! வேங்கட! நாரண, அமல, வேந்தகோவிந்த, காந்தி முகுந்த, பந்தந்தவிர்க்கு நந்தன் றனையா, பைந்தமிழ்ப் பின்தொடர் ஐந்-

தலைப் பணியோய்! திருவருள் கொழிக்கும் திருமால், நிமல, எவரேயாயினும் நிரயம் புகாவகை நாடிப் புரத்த நெடுந்தகை அச்சுத, அருளே வடிவாந்தெருட்கலையன்ப, பவத்தினை வேர்களை தவத்தினர் நண்ப, திருவமர் மார்ப, வாசுதேவா, விண்ணவர் தலைவ, பொன்றலில் முத்தே, கருமுகில் வண்ண, திறத்தமர் செல்வ!'' என்று வேங்கடவனைப் பலவாறு ஏத்து-கின்றார் கவிஞர்.

வேங்கடமலை', எத்துணை வளப்பங் கொண்டது என்-பதற்கு இதோ ஒரு பட்டியல் :

''பொருப்பினின் றிழிதரும் பொற்பமை யருவி
மணிமலைப் பணைத்தோள் மாநில மடந்தை
அணிமுலைத் துயல் வரூஉ மாரங் கடுப்ப
வருக்கையு மாவும் வாழையும் வழையும்
கருங்காற் குறிஞ்சியும் கணிநாள் வேங்கையும்
ஆரமும் சாந்து மணியதிற் றருக்களும்
பால்வெண் கோட்ட மேலமு மிருப்பையும்
வேயும் வெட்சியு மாய்பூந் தில்லையும்... .''

ஏறத்தாழ 25 அடிகளில், வேங்கடமலையின் பெருவளப்-பத்தைப் பாடுகின்றார், பாவலர். மா, பலா, வாழை, குறிஞ்சி, வேங்கை, சந்தனம், அகில், இருப்பை, மூங்கில், வெட்சி, தில்லை, காந்தள், சண்பகம், நாகம், இலவங்கம், இஞ்சி, நொச்சி, கரும்பு, மஞ்சள், திப்பிலி, நெல்லி, தேன் எனப் பலவற்றை அடுக்கிக் கொண்டே போகும் கவிஞர், ''இத்தகு வேங்கை முற்றமர்தீங்கடு தேவ! தமியேன் கவலை தணிப்பாய் கமலநேந்திரனே!'' என்று வேண்டுகின்றார்.

இறைவனை, 'முடி' முதல் 'அடி' வரை வருணிப்பது உண்டு. அது, 'கேசாதி பாதாந்தம்' எனப்படும். அன்றி, 'அடி' முதல் 'முடி' வரை வருணிப்பதும் உண்டு; அது, 'பாதாதி கேசாந்தம்' எனப்படும். ஈண்டுக் கவிஞர், வேங்கட நாதனை, 'அடி' முதல் 'முடி' வரை வருணிக்கும் திறம் போற்றத்தக்கது!

குளிர்மென் தாள், நாந்தகக் கரம், வரைத்திரு மார்பு, விழுத் திண்புயம், வார் கொள் செவி, தமிழ் மண நாசி, இன்பமர்வாய், பசிய இதழ், அருள் நயனங்கள், நிலைகொள் புருவம், மென்நுதல், மாண் அமை முகம், குஞ்சியின்

வனப்பு-என்பன திருமால் உருவத் திருமேனியாம். ஒவ்வோர் உறுப்பையும், அடைமொழி கொடுத்து வருணிப்பது தனி அழகு. ''மலையையும் புறம்பழிக்கும் மார்பு, மறை ஒலி மடுக்கும் செவிகள், தமிழ் மணம் நுகரும் மூக்கு, அன்பர்களை வாழ்த்தி அதனால் இன்பமடையும் வாய்!'' என்பன சில!

105 அடி கொண்ட ஓர் ஆசிரியப்பாவில், ஆழ்வார்கள் அருமையெல்லாம் எடுத்துரைக்கின்றார் ஆசிரியர். அவற்றுட் சில வருமாறு: புண்ணியப்பட்டர் பிரான், பாவை திருமொழிக்கோதை; இராமபத்தியை எழிலுறக் காட்டிய குலசேகரனார், தமிழால் திருக்கவி பாடிய திருமழிசை, கல்லும் இரங்கிடு பாக்களால் தொண்டாற்றிய பெருந் தொண்டரடிப் பொடி, யாழின் வகையால் தாழாது அரங்கனைப் பாடி உய்ந்-திட்ட பாணர் பிரான், அதிசுவைக் கவியருண் மதுரகவி, தமிழ் மறை தழைக்க அமிழ்தம் நிகர்த்த பனுவல்கள் இயற்றிய பர காலன் என்னும் பக்திப் பெருமிதப் பாவலன், பொய்கை உதித்த பொய்கை அன்பன், தீதற உதித்த பூதவடியவன், பெருங்கவி வகுத்த பேயாழ்வார், தென்றமிழ் அதனிற் நீஞ்சுவை ஒழுகப் பாடியருளிய குருகைப்பிரான் என்றெல்லாம் ஆழ்வார் பெருமை போற்றும் இந்நூலாசிரியர், தெய்வ கீதைக்கு ஓர் விரி-வுரை நிகழ்த்திய வேத இராமானுசரையும், அட்டப்பிரபந்தம் திருந்திட அமைத்த திவ்வியகவி பிள்ளைப் பெருமாளையும் மறந்தாரிலர்!

''.........நமர்காள்!
அன்னவர் அருந்திறன் முற்றும் அறிதல்
ஒல்லா தேனும் ஒன்றிய வகையால்
அன்னோர் உணர்த்திய அருநெறி கடைப்பிடித் (து)
அரும், பா சங்கள் இரிந்து கழன்றிட
வேங்கடச் சிலம்பினில் ஓங்கி வீற்றருள்
எம்பெரு மானை இறைஞ்சுதும்
தெளிந்திட வம்மின் செகத்துள் ளீரே.''

என, நம்மனோரை விளித்து நயமாக உரைக்கின்றார் கவிஞர்.

இந்நூலில் இடம் பெற்ற 'இருவிகற்ப நேரிசை வெண் பாக்கள்' பத்தாகும். அவற்றுள் ஒன்று:

''திரமுறலாம் நெஞ்சே! திருவேங்க டத்தை
யுரமுடனே யுன்னி னுறுதி - கரமவனை

யேதொழுக, கான்றிடுக வீர்ம்புனலைக்
கண்ணிணைவா
யேதொழுது வாழ்த்திடுக வே!''

இவ்வெண்பாவின் முன் 2 அடியும் ஒரெதுகை (திர·உர) பின் 2 அடியும் ஒரெதுகை (யேதொழுக - யேதொழுது). 2 ஆம் அடியின் இறுதி, தனிச்சொல் பெற்றது. எனவே இஃது, 'இரு·விகற்ப நேரிசை வெண்பா' எனப்பட்டது.

நெஞ்சினை நோக்கிக் கூறுவதாக அமைந்துள்ள பாடல் இது. ''நெஞ்சமே! திருவேங்கடத்தை - அம்மலை உறை திருவேங்கடவனை வலிமையாக எண்ணி வழிபட்டால் உறுதி, அதாவது வீடு பேறு அடையலாம். அதற்கு என் செய வேண்டும்? நம் கைகள், அவனையே தொழ வேண்டும்; நம் இரு கண்ணும், ஆனந்த அருவி வெள்ளத்தைக் கொட்ட வேண்டும்; நமது வாயும், அவனைத் தொழுது வாழ்த்த வேண்டும்!''

— அருமைத்திருப்பாட்டு இதுவன்றோ?

இனிக் 'கட்டளைக் கலித்துறை'யில் பத்துப் பாக்கள் உள. 'நேரசை'யில் தொடங்கினால் மெய் நீக்கிப் பதினாறு எழுத்தும், 'நிரையசை'யில் தொடங்கினால் மெய் நீக்கிப் பதி·னேழு எழுத்தும் வரவேண்டும் என்பது இலக்கண விதி. இவ் விதியை நன்குணர்ந்த கவிஞர், இவ்விருவகையிலும் பாடியுள்ள திறம் போற்றத்தக்கது.

அவற்றுள் ஒன்று :

''நாடுக ளிற்சிறந் தோங்குவ திந்திய நற்பதியாம்
பாடுவண் டார்க்கும மலரு ளரசு பதுமமலர்
தேடுறுந் தேவர்க டேவாய்ச் சிறந்தவன் சீரரிதான்
வீடுறு வித்திடும் வெற்பினின் மிக்கது வேங்கடமே!''

— ''உலகத்துப் பல நாடுகளிலும் மேம்பட்டுச் சிறந்து ஓங்குவது நம் இந்தியப் பெருநாடாம்! இந் நாட்டிலும் பெருமைபெற்ற பல தலங்களிலும் மேலானது வேங்கடமாம்! இங்கு வீற்றிருந்து அருளுபவன் - வேங்கடவன் வண்டுகள் இன்னிசை பாடுதற்·குரிய மலர்கள் பலப்பல. அவற்றுள்ளும் 'அரசு' போல் சிறப்·புறுவது - தாமரை மலர்! அதுபோன்ற சிறப்புக்குரியது வேங்கட மலை. அத் தாமரை மலருக்குரியவன் - பிரமதேவன். அவனால் தேடற்குரியவன் - தேவர்கட்குத் தேவன், அவனே எம்பெரு·

மானாம் வேங்கடவன். அவன் வீற்றிருக்கும் மலையாதலின், தன்னை வந்தடைந்தோர்க்கு வீடு பேறு தந்து நிற்கும்!'' என்னும் பொருளபட அமைவது இத் திருப்பாட்டு. 'வீடுறு வித்திடும்'' என்பது வீடு நேர்விக்கும், அல்லது வீடு பெற வித்தாக உதவிடும்'' என்று பொருள் கொள்ளுமாறு அமைந்துள்ள நயம் இன்புறத்தக்கதன்றோ?

நூலின் பயன்

''திருவேங்கடவன் பெருமைதனை உணர்வீர்! 'நாராயணா' என்னும் ஒப்பற்ற பெரும் புணையைப் பற்றுவீர்! அறிவு எனும் கோலினை ஊன்றுவீர்! தாங்கமுடியாத பிறவிப் பெருங்கடல் துன்பத்தினின்றும் விடுபடுவீர்! அப்பெருமானின் பொற்கழல் என்னும் கரைசேர்ந்துய்ம்மின்!'' என அறிவுறுத்துகின்றார் ஆசிரியர். இதோ அப்பாடல் :

''நம்வேங் கடவன் நாரா யணாஎனும்
ஒருபெரும் புணையினை ஒன்றி அறிவாங்
கோலினை யூன்றி யேலா விடும்பைப்
பிறவிப் பௌவம் பெயர்ந்தவன்
பொற்கழ லாங்கரை யுற்றிடு வதுவே!''

முடிவுரை

'திருவேங்கட மும்மணிக்கோவை' எனும் இந்நூலின்கண் சிலேடை, திரிபு, யமகம், உவமை முதலிய அணி நயங்களும், சொற்பொருள் நயங்களும் ஒருங்கே அமைந்துள்ளன. அவை, கற்று வல்லார்க்குக் கழிபேரின்பம் நல்குவன. நூல் சிறிதே எனினும் நூல்நுவல் பொருள் அளப்பரிது!

''ஆந்திரமா மறையவர்தங் குலதிலகன் காவிரிப்பாங் கறிவின் மிக்க
மாந்தருறை சமயசங்கி லிப்பதியான் கேளாரு மதித்துக் கேட்பப்
போந்தினிய குரலானாற் பொருட்பிரசங் கம்புரியும் புனித வாக்கி
யார்ந்தமணிப் பணிப்பணியா மரன்றாளைப் பணியுந்திம் மப்ப வேளே!''

எனப் புலவரேறு அ. வரதநஞ்சைய பிள்ளை கூறும் மொழி, பொய்யாமொழியேயன்றோ?

வாழ்க திம்மப்ப அந்தணனார்!



## முனைவர் ச. சாம்பசிவனார்

| | | |
|---|---|---|
| வயதும் பிறந்த நாளும் | : | 63, 29-9-1929 |
| கல்வித் தகுதி | : | தமிழ் எம்.ஏ., பிஎச்.டி., பண்டிதம், வித்துவான், பண்டிதப் பயிற்சி. |
| பணி | : | ஆராய்ச்சிப் பேராசிரியர், மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம் |
| நூல்கள் | : | 60க்கும் மேற்பட்டவை |
| ஆய்வுக் கட்டுரைகள் | : | 100க்கும் மேற்பட்டவை |
| தமிழ்த் தொண்டு | : | மதுரைத் திருவள்ளுவர் கழகம், மதுரைத் தமிழ்ச்சங்கம், தமிழகத் தமிழ்க் கல்லூரி ஆசிரியர் மன்றம், நாவலர் பாரதியார் இலக்கிய மன்ற ஆக்கப் பணிகள் |
| பெற்ற சிறப்புகள் | : | செந்தமிழ்ச் செல்வர், தமிழாகரர், அருந் தமிழ் மாமணி, 'நல்லாசிரியர் விருது' எனப் பல. |
| வெளிநாட்டுப் பயணம் | : | மலேசியா, சிங்கப்பூர், மொரீசியசு |
| பிற | : | செந்தமிழ் கற்கச் 'சிவனார் உரை நூல்கள்', மாணவர்களின் நன்மதிப்பு. |

PRINTED BY
VIVEKANANDA PRESS
MADURAI - Ph : 22612